அன்றாடம் அணியும் ஆடைகளுக்கு

அத்தனை **வெண்மையும் பொலிவும்**

அளிப்பது **ஸன்லைட்**




அன்றாடத் துணிகளுக்கா அத்தனை புதுமைமிகு தூய்மை? அத்தனை வெண்மையும் பொலிவும்? 'ஆம், ஆம்' என்கிறது ஸன்லைட் சலவை. இல்லத்திலே சலவை செய்ய எல்லாத் துணிகளுக்கும் ஏற்றது...

**ஸன்லைட் — நுரைவளமுள்ள தூய்மையான சோப்.**

ந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

S. 33-X52 TM

சுபகிருது, ஐப்பசி 19உ.

# கல்கி

நவம்பர் 4உ. 1962

## பொருளடக்கம்

## புசிக்கவும் ஆசை, புகைக்கவும் ஆசை?




உயரிய பண்போடு
உபயோகிப்பதற்கும்
உதவுவதற்கும் உகந்தது

**பனாமா**

சம்பிரதாய விருந்துகளின்போது புகைபிடிப்பது இக் காலத்திலே விலக்கல்ல. வசதி அளிக்கப் பெற்றிருப்பின். உணவருந்தும் போது தாராளமாக நீங்கள் புகை பிடிக்கலாம். எங்கே சிகரெட் இடம் பெறவில்லையோ அன்றி வழங்கப்பெறவில்லையோ அங்கே நாமாக சொந்த சிகரெட்டைப் பற்றவைக்காமலிருப்பதே பண் பாட்டுக்கு அடையாளம்.

Panama
20
CIGARETTES

இழுக்க
இழுக்க
இன்பம்—
இறுதிவரை

விசேஷக் கவனம் செய்வோர்:
கோல்டன் டுபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-56.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT 612 TAM. Greens' Advtg.



மலர் 22

தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — *பாரதியார்*

இதழ் 14

# ஜயமுண்டு, பயமில்லை

மண்ணாசை பிடித்த சீனாவானது நேர்மைக்கும், நீதிக்கும், நட்புக்கும் வெடி வைத்து விட்டது. கடந்த சில ஆண்டுகளாகவே பாரத நாட்டின் எல்லையில் சிறுகச் சிறுக துராக்கிரகம் செய்து வந்த சீனா இப்போது பெருமளவிலேயே துருப்புக்களைக் கொண்டு வந்து குவித்து லடாக், நேஃபா பகுதிகளைக் கபளீகரம் செய்யத் தொடங்கி விட்டது. இந்தியச் சிப்பாய்கள் எவ்வளவோ தீரத்துடன் போராடிய போதிலும் புனித பாரத மண் சிறிது சிறிதாகக் கம்யூனிஸக் கரடிக்கு இரையாகி வருகிறது.

இதையெல்லாம் கண்டு நாட்டிலே கொந்தளிப்பு உருவாகியுள்ளது. எதிரிகளை முறியடிக்க வேண்டும் என்பதில் தேசமக்கள் அனைவருமே எவ்வித பேதமும் இன்றி ஏகோபித்த எண்ணத்துடன் வீறுகொண்டிருக்கிறார்கள். இந்த ஒற்றுமை உணர்ச்சி நம்மிடம் இருப்பதாலும், அதற்கு மேலாக தர்மம் நம் பக்கம் இருப்பதாலும்தான் ராஷ்டிரபதி அவர்களும், பிரதம மந்திரி அவர்களும் இறுதி வெற்றி நமக்கே கிடைக்கும் என உறுதி கூறியுள்ளனர்.

ஏதோ மகாயுத்தம் மூண்டு விட்டதுபோல் மக்கள் திகில் அடைய வேண்டியதில்லை என்று ராஜாஜி அவர்களும் ஆறுதல் அளித்திருக்கிறார். பெரும் அபாயம் வந்து விட்டதென்று கூட்டு மந்திரி சபை அமைக்கவேண்டிய அவசியமுமில்லை என்று அவர் கூறியிருக்கிறார்.

எனவே ராணுவ பலத்தோடு, தர்மபலம் என்ற தெய்வ பலத்தையும் நம்பி ஒற்றுமையாகத் தேசத்தைப் பாதுகாக்க வேண்டியது மக்களுடைய கடமையாகும். சுயநல நோக்கங்களை அறவே மறந்து தேச நலனுக்காகத் தியாகம் புரிய மக்கள் முன் வர வேண்டிய தருணம் இது. மக்கள் தங்கள் ஜீவாதாரமான உரிமைகள் உட்படப் பல உரிமைகளைத் தியாகம் செய்ய நேரிடும்.

மக்களுக்கு இவ்விதக் கடமைகள் இருப்பது போலவே அரசாங்கத்துக்கும் இப்போது பல புதுக் கடமைகள் ஏற்பட்டுள்ளன.

இந்தச் சமயத்தில் அரசாங்கம் முன்பு தனது கடமைகள் சிலவற்றில் தவறியதும், இப்போதும் சில கடமைகளை ஏற்று, ஆற்றுவதற்குத் தயங்குவதும் நினைவு வருகிறது. நமக்குள் குற்றம் குறைகள் சொல்லிக் கொள்ளும் தருணம் அல்ல இது என்பது வாஸ்தவம் தான். எனினும் அந்தக் குற்றத்தையும், குறையையும் நீக்குவதற்கு இப்போதும் சர்க்கார் முன் வராததால் அவற்றை மீண்டும் வலியுறுத்த வேண்டியிருக்கிறது.

நமது சர்க்காரின் வெளிநாட்டுக் கொள்கை சரியானதா, இல்லையா என்று இனியும் விவாதிக்க வேண்டியதில்லை. சமையல் நன்றாக அமையுமா, அமையாதா என்று விவாதித்த காலம் போய், இப்போது உணவைப் பரிமாறியே ஆகிவிட்டது. அதிலிருந்து நம் அந்நியக் கொள்கைகளிலுள்ள பிழைகளும் நிரூபணமாகிவிட்டன.

ராஜாஜி போன்ற தீர்க்கதரிசிகளின் நல்லுரைகளை அரசாங்கம் புறக்கணித்து வந்ததால் இன்று நமக்கு உறுதுணையாக இருக்கவேண்டிய அண்டை நாடுகள் ''ஒரு மாதிரி''யாகத்தான் இருந்து வருகின்றன. நேரு அவர்கள் ருஷ்யாவை அளவுக்கு மீறி நம்பியதும் அநுசிதமானது என்றாகிவிட்டது. இந்த நிலையிலும், யாருடனும் ராணுவக் கூட்டு சேர அரசாங்கம் மறுக்கிறது. அமெரிக்காவிலிருந்தும், பிரிட்டனிலிருந்தும் விலைக்கு ஆயுதங்கள் வாங்கமட்டிலும் முடிவாகியிருக்கிறது. ஏற்கெனவே நிதிவசதி குறைந்த பாரத நாட்டை இந்த ஆயுத வியாபார யோசனை மேலும் ஏழையாக்கிக் கஷ்ட

நிலையில் கொண்டு போய்ச் சேர்க்கும். அமெரிக்காவும் பிரிட்டனும் உதவி செய்யத் தயாராக விருக்கையில் அவர்கள் நட்பை மதித்து நடக்க வேண்டும்.

இந்த நெருக்கடியிலும் திட்டங்களைக் கைவிட மாட்டோம் என்று பிரதமர் கூறியிருப்பது வேடிக்கையாக இருக்கிறது. நம் எல்லை விவகாரம் தவிர உலகெங்கிலும் கிளர்ச்சி மூண்டிருக்கும்போது, அந்நிய உதவியை முக்கியமாக நம்பி வகுத்த திட்டங்களைப் பற்றிப் பேசுவதில் பொருளில்லை.

எல்லாவற்றுக்கும் மேலாக, ராஜாஜி சொல்வது போல், போர்க் கிளர்ச்சி எழுப்பியுள்ள புழுதியில் முன்பு பிழை செய்தவர்கள் ஒளிந்து கொள்ளப் பார்ப்பது சரியாகாது. பாதுகாப்புப் பொறுப்பை ஸ்ரீ கிருஷ்ணமேனன் அவர்களிடமே விட்டு வைத்திருப்பது சரியல்ல என்கிறார் ராஜாஜி. மேனன் அவர்களின் தேச பக்தியைப் பற்றி அலசிப் பார்க்க வேண்டிய காலமல்ல இது. எப்போது அவரைக் குறித்து மக்களில் ஒரு பெரும் பகுதியினரிடையே சந்தேகம் உள்ளதோ அப்போது அவரைப் பாதுகாப்பு மந்திரியாக வைத்திருப்பது ராஜதர்மமாகாது. ராஜாஜி அவர்களின் யோசனைப்படி பிரதம மந்திரி அவர்களே பாதுகாப்பு இலாகா நிர்வாகத்தை மேற்கொள்ள வேண்டியது அவசரமும், அவசியமுமாகும். முன்பு யுத்தப் பயிற்சி பெற்றிருந்த பல வீரர்களை மீண்டும் படையில் சேர்த்துக் கொள்வது மட்டுமின்றி, சிறந்த போர் அநுபவம் பெற்ற ராணுவ நிபுணர்களைத் தமக்கு உதவியாக அமைத்துக்கொள்ள வேண்டும்.

வெளி நாட்டுத் துருப்புக்களுடன் போரிடுவதோடு உள் நாட்டு மக்களின் பூரண நம்பிக்கையையும் அரசாங்கம் நாடிப் பெற வேண்டிய தருணம் இது. அந்த நம்பிக்கையைப் பெறுவதற்கான நடவடிக்கைகளை அரசாங்கம் மேற்கொள்ள ஆண்டவன் அருள்புரிய வேண்டும். மக்களின் நம்பிக்கையாலும், நல்லெண்ணத்தாலும், நம் நோக்கத்திலுள்ள நியாயத்தினாலும் தாய்த்திரு நாட்டுக்கு ஏற்பட்டுள்ள தீமை நீங்கும் என்று நம்பித் திடமும் உரமும் பெறுவோமாக. தர்மமே வெல்லும் என்று தெளிந்து, ஆண்மையுடன் தேசப்பணி புரிவோமாக!

மீண்டும் சொல்கிறோம். தேசத்துக்குப் பேராபத்து இப்போது உண்டாகி விடவில்லை. எல்லைச் சண்டைதான். பீதிக்குக் காரணம் இல்லை. சர்க்காரின் யுத்த முயற்சிக்கு எல்லாவித உதவியும் புரிவதோடு அதன் தவறுகளை எடுத்துக் காட்டுவதும் இப்போது மக்களின் கடமையாகும். இதில் குழப்பம் வேண்டாம்.



# என்ன சேதி?

## மஸானியின் எச்சரிக்கை

சுதந்திரக் கட்சியின் செயலாளர் எம். ஆர். மஸானி அவர்கள் கட்சி அங்கத்தினர்களுக்கு விடுத்துள்ள யோசனை தேச மக்கள் அனைவரும் அரசாங்கமும் உன்னிப்பாகக் கவனிக்க வேண்டியதாகும். அரசாங்கம் கம்யூனிஸ்ட்டுகளைக் கொண்ட சர்வ கட்சி கமிட்டிகளை நியமித்தால், சுதந்திரக் கட்சி அங்கத்தினர்கள் அதில் பங்கு எடுத்துக் கொள்ள வேண்டாம் என்று அவர் எச்சரிக்கை செய்திருக்கிறார். இதற்குக் காரணம் இந்தியக் கம்யூனிஸ்ட்டுகள் ஆரம்ப முதலே சீன ஆக்கிரமிப்பு விஷயத்தில் தேசத்தைக் காட்டிக் கொடுக்கும் முறையிலேயே நடந்து கொண்டு வந்திருப்பதுதான். சமீபத்தில் கூட, அவர்கள் நடத்திய மகாநாட்டில் சீன ஆக்கிரமிப்பைக் கண்டிக்காமல் பேச்சு வார்த்தை நடத்திச் சமாதானம் செய்து கொள்ள முயல வேண்டும் என்றே சொல்லி வந்திருக்கிறார்கள். இப்படிப்பட்டவர்கள் இப்பொழுது திடீர் என்று இந்திய சர்க்கார் எடுக்கும் நடவடிக்கைகளுக்குப் பூரணமாக ஆதரவு கொடுப்பதாகச் சொன்னால் யாரால் நம்ப இயலும்? எனவே, மஸானியின் எச்சரிக்கையைக் கூர்ந்து கவனிக்க வேண்டுமென்கிறோம்.

## ருஷ்யாவின் அநுபவம்

ருஷ்யாவின் மொத்த உணவு உற்பத்தியில் மூன்றில் ஒரு பங்கு, விவசாயிகளின் சொந்தச் சாகுபடியிலிருந்து வரு

## ஊர்வம்பு









கிறது என்று ருஷ்ய சர்க்காரே கூறுகிறது. மேற்கண்ட தகவலை ஐ. நா. ஸ்தாபனத்தின் கிளையான உணவு — விவசாய ஸ்தாபனத்தின் மாதாந்திர அறிக்கை வெளியிட்டிருக்கிறது.

ருஷ்யாவில் சர்க்காரின் மேற்பார்வையில் நடைபெறும் கூட்டுப் பண்ணைகள் மட்டும்தான் முதலில் இருந்து வந்தன. கூட்டுப் பண்ணைகளில் போதிய உற்பத்தி கிடைக்கவில்லை என்பதற்காக, அப்பண்ணைகளில் வேலை செய்யும் விவசாயிகளுக்கு உற்சாகமூட்ட, அவர்களுக்கென தனிப்படச் சிறிது நிலம் ஒதுக்கி அதில் அவர்கள் விவசாயம் செய்துகொள்ள அனுமதித்தது ருஷ்ய அரசாங்கம். கூட்டுப் பண்ணைகளுக்கு முதலீடு செய்வதற்காக அளித்த பணத்தில் ஒரு சொற்பமான பகுதியே இந்தத் தனியார் நிலத்துக்கு அளிக்கப்பட்டது. அதோடு விவசாயிகள் கூட்டுப் பண்ணையில் செலவிடும் நேரத்தில் கால் பங்கு நேரமே சொந்தச் சாகுபடிக்காகச் செலவழிக்க முடியும்! இவ்வளவு இடையூறுகள் இருப்பினும், சொந்தச் சாகுபடியிலிருந்து விளைந்த உணவு தான்யம், ருஷ்ய நாட்டின் மொத்த உற்பத்தியில் மூன்றில் ஒரு பங்கு என்றால் சொந்தச் சாகுபடியின் சிறப்பு சந்தேகமறத் தெரிகிறதல்லவா?

சுதந்திரக் கட்சி கூட்டுப் பண்ணைகளைப் பற்றி செய்துவந்த எச்சரிக்கை எவ்வளவு உண்மை என்பதை ருஷ்யாவின் அநுபவம் எடுத்துக் காட்டிவிட்டது!

## சென்னையும் மழையும்

சென்ற வாரம் சென்னையில் பெய்த மூன்று நாள் மழை நகர வாழ்க்கையை நரக வாழ்க்கையாக்கி விட்டது! எங்கு கண்டாலும் மழை நீர் முழங்கால் அளவுக்கு மேல் தேங்கி, பஸ், கார், வண்டிகள் போக்கு வரத்தை ஸ்தம்பிக்கச் செய்து விட்டது. குடிசைகளில் வாழ்பவர்களின் கதி மிக மோசமாகி விட்டது. அவர்கள் வீடுகளைத் துறந்து, தட்டுமுட்டுச் சாமான்களுடன் சுற்றுப்புறங்களிலுள்ள பொது இடங்களுக்குப் பெயர்ந்து வாழ வேண்டியதாகி விட்டது. சென்ற ஆண்டு பெய்த மழையினால் பாழான சாலைகளை ஒழுங்குபடுத்தும் வேலையே இன்னும் முடியவில்லை. அதற்குள் மீண்டும் சாலைகளில் குண்டும் குழிகளும் விழுந்து, நடப்பதற்கும் முடியாமல், கார், பஸ், வண்டிகளிலும் போக முடியாமல் அவை சீர்கெட்டிருக்கின்றன. நகர சபை நிர்வாகஸ்தர்கள் இவ்விஷயத்தில் நிரந்தரமான பரிகாரம் தேட முனைய வேண்டியது அவசியமாகும்.

## அண்ணாதுரையின் நாட்டுப் பற்று

சிறையிலிருந்து வெளியே வந்ததும் திரு அண்ணாதுரை அவர்கள், சீன ஆக்கிரமிப்பை எதிர்த்து இந்திய சர்க்கார் எடுக்கும் எந்த நடவடிக்கையையும் தாம் பரிபூர்ணமாக ஆதரிப்பதாகக் கூறி பாரத நாட்டு மக்கள் எல்லோருடைய பாராட்டுக்கும் உரியவராகியிருக்கிறார். திரு அண்ணாதுரை சிறையிலிருந்து விடுதலை பெறு முன்பே தி. மு. க. மேல் சபை அங்கத்தினரான எம். ஜி. ராமச்சந்திரன் அவர்கள் இந்திய யுத்த நிதிக்கு ரூ. 75,000 நன்கொடையளிப்பதாகக் கூறினார். சமயம் வாய்க்கும் போது தேசபக்தியைக் காண்பித்துக் கொள்வதில் தாங்கள் யாருக்கும் பின்பட்டவர்கள் அல்ல என்பதை நிரூபித்திருக்கும் தி. மு. க.வினரைப் பாராட்டுகிறோம். தமிழ்நாடோ, திராவிடநாடோ தனிப்பட்டு நிற்க இயலாது என்பதைத் தற்போது எல்லையில் ஏற்பட்டுள்ள நெருக்கடி நடவடிக்கைகள் நன்றாக உணர்த்துகின்றன.

## ஜப்பானில் ஆங்கிலம்

ஆங்கில மொழி கற்றுக்கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் ஜப்பானில் பெருவெள்ளமாகப் பெருக்கெடுத்து ஓடுகிறதாம். ரேடியோக்கள் மூலம், கிராமபோன் ரிக்கார்டுகள் மூலம் டெலிவிஷன் மூலம் ஆங்கிலம் கற்றுக் கொள்ளத் துடிக்கிறார்களாம். எதேச்சையாக ஆங்கிலம் பேசும் நபரை ஜப்பானியர் காண நேர்ந்தால் அவரை நிறுத்தி வைத்து ஆங்கிலம் கற்றுத் தரும்படி கோருகிறார்களாம். 'சுலபமாக ஆங்கிலம் கற்றுக்கொள்ளும் முறை' என்று ஒரு புஸ்தகம் வெளியிட்டால் அதுதான் இன்று ஜப்பானில் ஏராளமாக விற்குமாம்!

ஆங்கிலம் இல்லாவிட்டால் தொழில் நுட்ப, பொறி இயல் கல்வியில் நமது முன்னேற்றம் தடைப்படும் என்று சொல்லும்போது, 'பொறி இயல் கலையில் தேர்ச்சி பெற்ற ஜப்பான் நாட்டில் ஆங்கில மூலமாகவா பாடம் கற்றுத் தருகிறார்கள்?' என்று அசட்டுத்தனமாக நம்மில் சிலர் கேட்பார்கள். அமெரிக்காவுக்கும் ஜெர்மனிக்கும் இணையாகப் பொறி இயல் கலையில் தேர்ச்சி பெற்ற ஜப்பான் இன்று ஆங்கிலம் கற்றுக் கொள்வதில் இவ்வளவு துடியாக இருக்கும்போது நம் நாட்டில் அதை அகற்றி, அம்மொழியை அறிவதால் அடையக் கூடிய பெரும் பயனைத் துறப்பதில் தீவிர ஆர்வம் கொண்டிருப்பது விந்தையாக இருக்கிறதல்லவா?

பற்கள்
வெண்மைபெற

ஈறுகள்
திடமடைய

சுவாசித்தல்
ஆரோக்யமுற






# ரெமி

## டூத் பேஸ்ட்

(அஸுலின் கலந்தது)

பவுடராகவும் டின்களில் கிடைக்கும்

பற்களை பாதுகாக்கவும், வெண்மை தரவும் உடனடியாக ரெமி பற்பசையை உபயோகிக்க ஆரம்பியுங்கள். அதனில் கமழும் நறுமணம், உபயோகித்த பின்னும் வாயினில் நீண்ட நேரம் தங்கி ஓர்வித இன்ப உணர்ச்சியை ஊட்டுகின்றது.

RP 931 இந்தியாவில் உற்பத்தி செய்யப்படும் ரெமி தயாரிப்புகள்

| மலேயாவில் கிடைக்குமிடம் | இலங்கையில் கிடைக்குமிடம் |
| --- | --- |
| M/s. Meena Trading Company<br>50-A, Market Road, Singapore-1 | AVRA Limited<br>Colombo |




## 44. சித்திரப் பரம்பரை

இளைஞனுடைய குரலில் ஒலித்த பரிவும் ஆர்வமும் லாலாவையும் என்னையும் பாசத்தில் ஆழ்த்தின. லாலா ராம்சிங் சொன்னார்:

''தம்பி! இந்த உலகத்தில் எந்த நிகழ்ச்சியுமே ஒரு காரண காரியத் தொடர்போடுதான் நடக்கிறது. அதில் சந்தேகமில்லை. நானும் என் நண்பரும் நீங்களும் இவ்வாறு இந்த ஆற்று மணலிலே சந்தித்ததற்கு, ஒரு காரணம் இருக்கிறது என்பதை, நான் மனப்பூர்வமாக நம்புகிறேன். ஆனால் அந்த ஆராய்ச்சியைச் செய்வதற்கு முன்பு உங்களிடம் ஒரு முக்கியமான சந்தேகத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்ள . வேண்டும். உங்களுடைய துயர நினைவுகளின் சோகத்தை நிதானப்படுத்திக் கொண்டு எங்களுக்குப் பதில் சொல்வீர்களா?''

இவ்வாறு கேட்டதும் மண்டபத்து இளைஞன் சற்று நேரம் மௌனமாக இருந்தான். பிறகு சொன்னான்:

''ஐயா! உங்கள் இருவரையும் சந்தித்ததினால் எனக்கு ஏற்பட்ட மகிழ்ச்சி அளவு கடந்தது! ஏதோ உபசாரத்துக்குச் சொல்லுகிறேன் என்று நினைக்காதீர்கள். உண்மையிலேயே உங்களைச் சந்தித்தது என்னுடைய நல்ல காலத்துக்கு அறிகுறி என்று கருதுகிறேன். உங்களைச் சந்தித்திருக்கா விட்டால், இந்த அற்புதமான சித்திர மடல் எனக்கு எப்படிக் கிடைத்திருக்கும்? இது கிடைத்த பிறகு எனக்கு என் எதிர்கால வாழ்வைப் பற்றி ஒரு புதிய நம்பிக்கையே உண்டாகி விட்டது. இனி என்னுடைய இலட்சியத்தை நான் நிறைவேற்றி விடுவேன் என்ற உறுதியும் எனக்குப் பூரணமாக ஏற்பட்டு விட்டது. இந்த நிலையில் என்னைப் பற்றியும் எனது கனவுகளைப் பற்றியும் உங்களிடம் ஒளிவு மறைவு இல்லாமல் சொல்ல வேண்டும் என்று விரும்புகிறேன். இது வரை எனக்குத் தெரிந்த வரலாறு முழுவதையும் ஒன்று விடாமல் உங்க

ளிடம் கூறி விட்டேன். நந்தவனத்தில் ஏற்பட்ட அந்தக் கடைசி நிகழ்ச்சியைப் பற்றி மட்டும் எனக்குமே சரியான தகவல்கள் தெரியாது. வில்வநாதன் எப்படித் தமது வலது கையை இழந்தார், வேணுலிங்கத்தைக் குறிகட்ட வல்லாளவேலர் எப்படித் தப்பித்தார் என்பதெல்லாம் எனக்குமே அரைகுறையாகத்தான் தெரியும். என்றாலும் உங்களுடைய சந்தேகங்களை நீங்கள் தாராளமாகக் கேளுங்கள். எனக்குத் தெரிந்த செய்திகளை அப்படியே மறைக்காமல் கூறுகிறேன்!'' என்றான் இளைஞன்.

லாலா கேட்டார்: ''தம்பி, வலது கையை இழந்த வில்வநாதன் பிறகு என்ன ஆனார், அவருடைய எதிர்கால வாழ்வு எப்படி இருந்தது, ஜமீந்தாருக்கும் அவருக்கும் பிறகு சந்திப்பு நேர்ந்ததா என்ற செய்திகளையெல்லாம் தெரிந்துகொள்ள விரும்புகிறேன். அவற்றைத் தெரிந்து கொண்டால் ஒழிய, இந்தச் சித்திரமடலுக்கும் உங்களுக்கும் உள்ள தொடர்பை எங்களால் ஊகிக்க முடியாது. இன்னும் சிங்கம்புத்தூர் மனிதர்கள் உங்களைப் பின்தொடர்ந்து உளவு பார்ப்பதன் காரணமும் புரியவில்லை. இவற்றைப் புரிந்து கொள்ள வேண்டும்



என்று மிகவும் ஆசைப்படுகிறேன். ஏனென்றால் உங்களுடைய எதிர்கால வாழ்வில் உங்களுக்கு ஏதோ ஒரு சிறிய உதவியை எங்களால் செய்ய முடிந்தாலும், அதுவே எங்களுக்குப் பெரிய மகிழ்ச்சியாக இருக்கும்!''

லாலா மிகுந்த பரிவோடு இந்த வார்த்தைகளைச் சொன்னதும் மண்டபத்து இளைஞனின் கண்களிலே நன்றியுணர்ச்சியினால் கண்ணீர் மல்கியது.

''ஐயா! உங்களால் எனக்குச் செய்யக் கூடிய ஒரு பெரிய உதவியை ஏற்கனவே நீங்கள் செய்து விட்டீர்கள். இந்தச் சித்திரமடலை என்னிடம் சேர்த்ததைவிடப் பெரிய உபகாரம் வேறு என்ன உண்டு? என்றாலும் சொல்லுகிறேன். வில்வநாதனுடைய எதிர்காலம் எப்படி நடந்தது என்பதை நீங்கள் தெரிந்து கொள்ளாவிட்டால் உங்களுக்கும் நிம்மதி இராது. இத்தனை அற்புதமான சித்திரமடலின் சிருஷ்டிகர்த்தா இதன் பிறகு ஏதாவது சித்திரங்கள் வரைந்தாரா என்ற செய்தியை நீங்கள் கட்டாயம் தெரிந்து கொள்ள வேண்டும். சொல்லுகிறேன்!''

இப்படிக் கூறி விட்டு வில்வநாதனுடைய நினைவிலே மனத்தைச் செலுத்தி, அந்த நினைவுக்கு அஞ்சலி செய்பவன் போல், மண்டபத்து இளைஞன் மௌனமாக இருந்தான். பிறகு பேச ஆரம்பித்தான்:

''ஐயா! கையை இழந்த வில்வநாதன் சிகிச்சைக்காக ஆஸ்பத்திரியிலே பல வாரங்கள் இருந்தார். இந்நிலையில் சுந்தரியையும் அவளுடைய தாயாரையும் ஒற்றுமைப்படுத்தி, அவர்களிடையே நல்லுறவை ஏற்படுத்துவதற்காகச் சுடலையாண்டி பெரும் பாடுபட்டார். மறைந்து சென்ற வேணுலிங்கத்துக்குத் தாம் செய்யக் கூடிய ஒரு பெரிய கடமை இது என்று கருதி, சுடலையாண்டி இவ்விஷயத்தில் மிகுந்த பிரயாசை எடுத்துக் கொண்டார். வக்கீல் செந்தில்நாயகம் அவர்களின் உதவி சுடலையாண்டிக்குப் பூரணமாகக் கிடைத்தது. வில்வநாதன் ஆஸ்பத்திரியிலிருந்து வெளி வந்ததும், அவரையும், சுந்தரியையும், குமுதவல்லியையும் வேணுலிங்கத்தின் திட்டப்படி கல்கத்தாவிலே கொண்டு போய்க் குடியேற்றி விட்டு, சிங்கம் புத்தூருக்கு வந்து வல்லாளவேலரைத் தீர்த்துக் கட்டி விடுவது என்றும், அதன் பிறகு போலீசிலே சென்று தம்மை ஒப்படைத்து விடுவது என்றும் இட்டமிட்டிருந்தார் சுடலையாண்டி. ஆனால் வில்வநாதன் இதற்கு இடம் கொடுக்கவில்லை. அவர் ஆஸ்பத்திரியில் இருந்தபோது சுந்தரி



**புருஷன்** என் மாமா எனக்கு இரண்டு லட்ச ரூபாய் சொத்து எழுதி வைத்து விட்டுப் போனதனுல்தானே நீ என்னைக் கல்யாணம் செய்து கொண்டாய்?

**மனைவி :** அதுதான் இல்லே! மாமா என்ன? வேறு யார் அந்தச் சொத்தை எழுதி வைத்துப் போயிருந்தாலும் நான் உங்களையேதான் மணம் செய்து கொண்டிருப்பேன்!

கர்ப்பிணியாக இருந்தாள். பழைய விரோதங்கள் எல்லாம் தம்முடைய கைபோனதோடு ஒழிந்து போய்விட வேண்டும் என்றும், அந்தப் பகைமை இனித் தமது எதிர்காலச் சந்ததிகளையும் சேர்த்துப் பற்றிக் கொள்ளக் கூடாது என்றும் நினைத்தார் வில்வநாதன்!

தமது ஒளியத் தந்தை சிவகாமிநாதனுடைய இலட்சியத்துக்கு விரோதமாகத் தான் நடந்துகொண்ட ஒரே காரணத்தினுல்தான். இத்தனை விபரீதங்களும் தமது வாழ்வில் நிகழ்ந்தன என்று திடமாக நம்பினுர் வில்வநாதன்! பழைய பகைமைகளை வளருவது தவறு என்று எண்ணினுர். எனவே கடலையாண்டியிடம் ஒரு வாக்குறுதி வாங்கிக் கொண்டார். கடலையாண்டியினுல் சிங்கம்புத்தூர் ஜமீந்தாரைச் சேர்ந்த எந்த மனிதருக்கும் எவ்வித இடையூறும் நேராது என்று கடலையாண்டி உறுதி செய்து கொடுத்த பிறகுதான் வில்வநாதனுக்கு நிம்மதி உண்டாயிற்று. அந்த நிம்மதியிலே அவருடைய உடம்பும் தேறிற்று. இந்த வழக்கு விசாரணைக்கு வந்த போது வில்வநாதன் தம்முடைய அபூர்வமான நடத்தையினுல் எல்லாரையும் திகைப்பில் ஆழ்த்தினுர். வில்வநாதனுடைய கை எப்படித் துண்டிக்கப்பட்டது என்பது குறித்து அவர் எதுவுமே சொல்லவில்லை. ஏற்கனவே குழம்பியிருந்த வழக்கை மேலும் குழப்பினுர் வில்வநாதன். இது காரணமாக யாருக்கும் உண்மை தெரியாதபடி ஆயிற்று. இன்றுவரை யாருக்குமே என்ன நடந்தது என்பது இரகசியமாகவே இருந்துவருகிறது. இத்தனை வரலாறுகளையும் வரிசையாகச் சொல்லி வந்த எனக்குமே செண்பகநாயகி கோயிலின் கடைசி நிகழ்ச்சிகளைப் பற்றித் திடமாக எதுவும் சொல்ல முடியாமல் இருப்பதற்குக் காரணம் வில்வநாதனுடைய அந்த விபரீத மௌனந்தான்! வழக்கு மன்றத்தில் ஏதேதோ கேள்விகள் கேட்டார்கள். வக்கீல் செந்தில்நாயகமுமே மிகவும் முயன்று, குற்றவாளிகளைக் கண்டு பிடித்துத் தண்டனை வாங்கிக் கொடுக்க வேண்டும் என்று பாடுபட்டார். ஆனுல் வில்வநாதன் அந்த முயற்சியில் வக்கீல்களுக்கோ, நீதிபதிகளுக்கோ சற்றும் உதவி செய்யவில்லை! குற்றம் புரிந்த மனிதர்களுமே திகைப்படையும்படி வழக்கைக் குழப்பியடித்து விட்டார் வில்வநாதன்.

கோவிற் சுவர்களைப் பழுது பார்த்துக் கொண்டிருந்த கூட்டத்தில் தான் பிரவேசித்த போது, எங்கிருந்தோ ஒரு குண்டு வந்து தோளின் மீது பாய்ந்தது என்றும், அதைத் தடுப்பதற்காக வேணுலிங்கம் குறுக்கே பாய்ந்து, மற்றொரு குண்டுக்கு இரையானுர் என்றும், அதன் பிறகு தாம் மயக்கமாகி விழுந்து விட்டதால் யார் தமது கையை எப்படித் துண்டித்தார்கள் என்று தமக்குத் தெரியாது என்றும் வில்வநாதன் கூறினுர். அதோடு நிற்கவில்லை. வல்லாளவேலரிடமோ அல்லது வேறு யாரிடமோ தமக்கு எவ்விதமான சந்தேகமும் கிடையாது என்றும், சிங்கம்புத்தூர் ஜமீந்தாரும் அவருடைய சிப்பந்திகளும் தமக்கு விரோதமாக எதுவும் செய்ததில்லை என்றும் வழக்கு மன்றத்திலே கூறினுர் வில்வநாதன்! இப்படி அவர் சொன்னது ஒன்றே, குற்றவாளிகளின் மனச்சாட்சிக்குப் பெரிய தண்டனையாகப் போயிற்று. ஜமீந்தார் அனவரதரின் மனதில் ஒரே துயரமயமாகி விட்டது. சென்னையில் சிவகாமிநாதனின் பெயரால் தாம் நடத்த விருந்த கலைக் கல்லூரியை வில்வநாதனே மேற்பார்த்து நடத்தவேண்டும் என்று அவர் விரும்பினுர். இந்த வேண்டுகோளுக்கு வில்வநாதனை இணங்கும்படி செய்ய வக்கீல் செந்தில்நாயகம் அவர்களையும் உதவும்படி கேட்டுக் கொண்டார். ஆனுல் இது விஷயத்திலும் வில்வநாதன் எதிர்பாராத விதமாக நடந்து கொண்டார். தமது தந்தையின் பெயரால் நடக்க வேண்

# ‘ஹேவ் ஹோ’ தேர்த் திருநாள்







ஆனந்தமாக கோஷமிட்டுக்கொண்டு ரதத்தை இழுக்கிறார்கள் பக்தகோடிகள். அவர்கள் இஷ்டதெய்வத்தைத் தாங்கி, நகரத்தின் முக்கிய வீதிகளில் கம்பீரமாக நகர்ந்து செல்கிறது ஜகன்னாத ஸ்வாமி திருத் தேர். தென்னிந்தியாவில் தேர்த் திருநாள் ஓர் உன்னதக் காட்சி; ஆனந்த பரவசமும், பக்திப் பரவசமும் ஒருங்கே அமைந்த காட்சி. அரவிந்த் துணிகள் அணியும்போதும் அம்மாதிரியான மகிழ்ச்சி அனைவருக்கும் ஏற்படுகிறது. அவர்கள் தேர்ந்தெடுக்கும் உயரிய துணிகளல்லவா அவை!

ஸான்போரைஸ்டு
பாப்ளின்கள் - கோல்ட்டிரிங், ப்ளு பேர்ட்
- எவர்பிரைட், குட்லைன், 3602, 3612
வேஷ்டிகள் - ராஜா ஸ்பெஷல், ராணி ஸ்பெஷல்
- ஜனதா ஸ்பெஷல், பிளாட்டினம்
பிரிண்டுகள் - பிரிண்டட் லான்கள், வாயில்கள்
- பாப்ளின்கள்
- ஸ்கிரீன் பிரிண்ட் புடவைகள்
சூட்டிங்குகள் - கேபிரிடின், டஸார்
ஷர்ட்டிங்குகள் - ஸ்டிரைப், செக்
- டோபி, பைஜாமா
ரொசவு கலர் புட்டாக்கள்
2 × 2 புல் வாயில்கள் லெனோ
மற்றும் புட்டாக்கள்

## அரவிந்த்

மில்ஸ் லி., அஹமதாபாத்-2.

**20 ஆண்டுகளுக்குப்பின் உங்களுடைய இந்தச் சிறு பெண் தன் உண்மையான குழந்தையைக் கொஞ்சிக்கொண்டிருப்பாள்.**

அவளுக்கு நீங்கள் அளிக்கும் தரமான கல்வி, அவளை ஒரு ஒப்பற்ற அன்னையாக்க உதவும். சிறந்த பெண்களைக் கொண்டு சமையற்கலை, தையற்கலை, இல்ல பராமரிப்பு, குழந்தை வளர்ப்பு முதலியவற்றைப் பயிற்றுவிக்கும் கல்லூரிகள் பல உள. இப்பொழுதிருந்தே திட்டமிட்டால் அவளுக்குத் தேவைப்படும் தரமான கல்வியை நீங்கள் அளித்திட முடியும். விரைவில் நீங்கள் எடுக்கும் ஒரு கல்வி ஆண்டுத் தொகைப் பாலிசி உங்கள் கனவை நனவாக்கும்.

கவலைக்கிடமில்லாமல், அவளுடைய திருமணத்திற்குத் தேவைப்படும் பணத்திற்கு வழிவகை செய்ய விரும்புகிறீர்களா? உங்கள் எண்ணத்தை இனிது நிறைவேற்ற குறிப்பிட்ட காலவரையறை (திருமண) எண்டௌமெண்ட் பாலிசி ஒன்று உங்களுக்கு உதவக் காத்திருக்கின்றது.

எல்லாப் பிரீமியங்களையும் செலுத்தும்வரை நீங்கள் வாழ இயலாது போயினும், மேற்கூறிய இரு திட்டங்களின் கீழ், அவளுக்கென நீங்கள் அளிக்க விரும்பும் பணம் அவளை அடையும். வேறு எவ்விதச் சேமிப்பும் இவ்விதச் சிறப்பினை நல்குவதில்லை.

முழு விவரங்களுக்கு அருகிலுள்ள எல். ஐ. சி. அலுவலகத்தை நாடுங்கள் அல்லது ஒரு ஆயுள் இன்சூரன்சு முகவரை (ஏஜெண்டை) நாடுங்கள்.

**ஆயுள் இன்சூரன்சு** போல
ஆதரவு தருவது எதுவுமே இல்லை.



டிய ஓவியப் பள்ளியை நிர்வகிக்கக் கூடிய தகுதி தமக்கு இல்லை என்றும், தமது தந்தையின் இலட்சியத்துக்குத் தான் செய்துவிட்ட மகத்தான துரோகம் மனத்தைத் துன்பப்படுத்துகிறது என்றும், இந்தத் துன்பங்களை யெல்லாம் மறந்து தாம் நெடுந்தூரம் சென்று கல்கத்தாவிலே வாழப் போவதாகவும் தீர்மானமாகச் சொல்லி விட்டார் வில்வநாதன். யாரும் அவருடைய உறுதியை மாற்ற முடியவில்லை...!''

இவ்வாறு கூறி முடித்தான் மண்டபத்து இளைஞன். அப்போது நான் கேட்டேன்.

''தம்பி! அப்படியானால் வில்வநாதன் தமிழ் நாட்டிலேயே வாழவில்லையா? கல்கத்தாவுக்குச் சென்று அங்கேதான் இருந்தாரா?''

''ஆமாம். கல்கத்தாவில் ஒரு சிறு நடனப் பள்ளிக் கூடம் தொடங்கினார்கள். அங்கே சுந்தரி சில மாணவிகளுக்குப் பரத நாட்டியமும் தென்னாட்டு இசையும் கற்பித்து வந்தாள். சித்திரம் என்பதையே மறந்துவிட்டு அந்தக் கலைக் குடும்பம் கல்கத்தாவிலே வாழ்க்கை நடத்தியது.''

''கல்கத்தாவுக்குச் செல்லும்போது சுந்தரி கர்ப்பிணியாக இருந்தாள் என்று சொன்னீர்களே, தம்பி!'' என்று ஆவலோடு கேட்டார் லாலா.

''ஆமாம். அவளுக்கு ஓர் ஆண் குழந்தை பிறந்தது. அந்தக் குழந்தை மிகவும் அதிர்ஷ்டம் கெட்ட குழந்தை. அது பிறந்த சில ஆண்டுகளில் தந்தை மறைந்து விட்டார். சுந்தரி கல்கத்தாவிலே நாட்டியப் பள்ளிக்கூடத்தை நடத்திக் கொண்டு அந்தக் குழந்தையை வளர்த்து வந்தாள். ஆனால் அந்தக் குழந்தையோ ஒரு விபரீதக் குழந்தையாக இருந்தது. தந்தையும் தாயும் எந்தக் கலையை வேண்டாம் என்று மறந்தார்களோ, அந்தக் கலையில் இந்தக் குழந்தைக்குச் சிறு வயதிலிருந்தே பைத்தியம்! தரையிலும், சுவரிலும் ஏதாவது கிறுக்கிக் கொண்டேயிருந்தது இந்தக் குழந்தை. இதனுடைய இந்தக் கலைப் பைத்தியத்தைக் கண்டு சுந்தரிக்கு மிகுந்த துயரமே ஏற்பட்டது. சித்திரப் பைத்தியத்தை மறக்க அடிப்பதற்காக அந்த ஆண் குழந்தைக்கு நடனம் கற்பிக்க ஆரம்பித்தாள் சுந்தரி. ஒரு பெண் குழந்தையை வளர்ப்பது போல் மிக

## கனவும் நினைவும்.

இரவு நேரம் மார்த்தாண்டம் படுக்கையில் புரண்டு படுத்தார். தூக்கம் வராமல் மறுபடியும் மேலே பார்த்தபடியே படுத்தார். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் அயர்ந்து தூங்கி விட்டார். குறட்டைச் சத்தம் முழங்கக் கனவுலகத்துக்கே சென்றுவிட்டார். அடாடா! என்ன அற்புதமான கனவு? ஹம்சதூளிகா மஞ்சத்தில் படுத்திருப்பதாகவும் பணியாட்கள் பழ வகைகளைக் கையிலேந்தி அவர் பக்கத்தில் காத்திருப்பதாகவும் தம் மனைவி மக்கள் யாவரும் தங்க வைர வைடூரியங்களால் அலங்கரித்துக் கொண்டிருப்பதாகவும் கனவு கண்டார் மார்த்தாண்டம்.





வாழ்க்கையில் நல்ல சுகங்களை அனுபவிப்பதை விட்டுச் சன்யாசியாக இருக்க யாருக்குத் தோன்றும்? இப்பேர்ப்பட்ட கனவை உதறித் தள்ளிவிட்டு எழுந்திருக்க யாருக்குத்தான் மனசு வரும்? மார்த்தாண்டத்துக்குத்தான் அந்த மனசு வந்தது. தன் குறட்டைச் சத்தமே அவரைத் திடுக்கிட்டு எழுந்திருக்கச் செய்தது. மார்த்தாண்டம் திடுக்கிட்டு எழுந்தார்.

எழுந்ததுதான் தாமதம்! கனவில் கண்ட காட்சியையே மறுபடியும் நினைவில் கண்டார். ஹம்சதூளிகா மஞ்சத்தில் அவர் வீற்றிருந்தார். சுற்றிலும் பணியாட்கள் பணிவிடை புரியக் காத்திருந்தனர். மனைவி மக்கள் உடல் முழுவதும் நவரத்தினங்கள் மின்னின. கனவு எங்கேனும் நினைவாகுமா என்று கேட்கிறீர்களா? மார்த்தாண்டம் வாழ்க்கையில் ஒரு கோடீசுவரர்! அது நிறைவேறக் கேட்பானேன்?

வும் கவனமாக வீட்டுக்குள்ளேயே பூட்டி வைத்து, நடனத்திலும் சங்கீதத்திலும் அந்தக் குழந்தைக்குப் பயிற்சி கொடுத்தாள் சுந்தரி. ஆனால் ஆண் குழந்தையோ நடனத்தையும் சங்கீதத்தையும் படித்துக் கொண்டே சுவரிலே கிறுக்குவதையும் விடாமல் தொடர்ந்து நடத்தி வந்தது. சில சமயங்களில் இந்தக் குழந்தை ஏதாவது நோட்டுப் புத்தகத்தை எடுத்துக் கிறுக்க ஆரம்பிப்பதைப் பார்த்தால் சுந்தரிக்கு உடம்பெல்லாம் பதறும். அப்படியே அந்தக் காகிதத்தைப் பிடுங்கிக் கிழித்து எறிவாள். அப்படி எறியும்போது கண்களை மூடிக் கொள்ளுவாள். ஏனென்றால் குழந்தை வரைந்த சித்திரம் கிழித்துப் போட முடியாதபடி அத்தனை அழகாக இருக்கும்!

வலது கையை இழந்த தந்தை அந்தக் குழந்தையின் வலது கையிலே உட்கார்ந்து கொண்டு சித்திரம் வரைவது போல் ஒரு காட்சி தெரியும், சுந்தரியின் மனக் கண்ணிலே! காகிதத்தைக் கிழித்தெறிந்து விட்டுத் தனியாகப் போய் ஒரு மூலையில் உட்கார்ந்து அழ ஆரம்பித்து விடுவாள் சுந்தரி. தாயார் இப்படி அழுது கொண்டிருப்பதைப் பார்த்ததும் பையனுக்கு அழுகை அழுகையாய் வரும்.

''அம்மா! நான் இனிமேல் சித்திரம் வரையவே மாட்டேன் அம்மா! நீ அழாதே, அம்மா!'' என்று ஆறுதல் சொல்லும் அந்தச் சின்னஞ்சிறு சிசு. இதைக் கேட்டதும் தாயாருக்கு மேலும் துயரம் அதிகரிக்கும். மேலும் கண்ணீர் வடிப்பாள். அதன் காரணம் என்னவென்று புரியாமல் சிறுவனும் மேலும் தேம்பித் தேம்பி அழுவான்!

பையனுக்கு விவரம் தெரிகிற வயது ஆக ஆகத் தாயின் துயரத்தைக் கண்டு மெய்யாகவே வருந்த ஆரம்பித்தான் சிவகாமிநாதன் என்று பெயரிடப்பட்ட அந்தச் சிறுவன்! பாட்டனாரின் பெயர் அவனுக்கு!

''அம்மா! நான் சித்திரம் வரைவது ஏன் உனக்குப் பிடிக்கவில்லை? சித்திரம் என்ற கலையிலே உனக்கு அத்தனை வெறுப்பா அம்மா?''

இவ்வாறு கேட்டான் ஒரு நாள் சிவகாமிநாதன், தன் தாயாரைப் பார்த்து. சுந்தரி சிரித்தாள். அந்தச் சிரிப்பில் துயரம் தொனித்தது.

''அம்மா! சித்திரக் கலையை எல்லாரும் வியந்து வியந்து பாராட்டுகிறார்களே. அதிலும் இந்தக் கல்கத்தா நகரத்தில் சித்திரக் கலைக்கு எவ்வளவோ மதிப்பும் ஆதரவும் இருக்கின்றனவே. நீ மட்டும் ஏன் என்னைச் சித்திரம் வரையவே விடமாட்டேன் என்கிறாய் அம்மா?'' என்று கேட்டான் சிறுவன்.

''சிவகாமி! உனக்குச் சித்திரம் வேண்டாம். உனக்கு நாட்டியமும் சங்கீதமும்தான் நன்றாக வரும். நீ அதை விட்டு விட்டுச் சித்திரத்திலே ஏன் பிடிவாதமாக இருக்கிறாய்? வேண்டாம் கண்ணே, உனக்குச் சித்திரக் கலை வேண்டாம்!''

சிறுவன் உடனே பதில் பேசவில்லை. மௌனமாக யோசனை செய்தான். பளிச்சென்று கேட்டான்:

''அம்மா! நம்முடைய குடும்பத்தில் ஆண்களும் பெண்களும் நடனம்தான் ஆடினார்களா? யாருமே சித்திரக் கலை படித்ததில்லையா?''

பையனின் கேள்வி அன்னையின் இதயத்தைத் தாக்கியது. என்றாலும் அதிர்ச்சியை வெளியே காட்டவில்லை. செண்பக சுந்தரி சொன்னாள்:

''சிவகாமிநாதா! என்னென்னவோ வீண் கேள்விகள் எல்லாம் ஏன் கேட்கிறாய்? உன்னுடைய அழகுக்கும் உடம்பின் அமைப்புக்கும் நடனந்தான்

நன்றாக இருக்கிறது, கண்ணே!'' என்று சொல்லி மகனின் கன்னங்களை அன்போடு கிள்ளினாள் சுந்தரி.

''அம்மா! நீ சொல்லுகிற மாதிரியே நம்முடைய பள்ளிக்கூடத்துப் பிள்ளைகளும் சொல்லுகிறார்கள் அம்மா. எனக்குப் பாவாடை உடுத்தித் தாவணியும் போட்டு விட்டால் நான் பெண் குழந்தை மாதிரியே இருக்கிறேனாம். பையன்கள் கேலி பண்ணுகிறார்கள் அம்மா!'' என்றான் சிவகாமிநாதன். அன்னையின் செவிகளில் இந்த வார்த்தைகள் விழுந்ததும் இதயம் விம்மியது. கலங்கிய கண்களைச் சமாளித்துக் கொண்டாள் சுந்தரி.

''அம்மா! எல்லாப் பையன்களும் சொல்லுகிறார்கள், நான் அம்மாவைப் போலவே இருக்கிறேன் என்று! அதனால்தான் நீயும் அம்மாவைப்போலவே நான் நாட்டியம் ஆட வேண்டும் என்று சொல்கிறாய். அப்படித்தானே?'' என்று கேட்டான் சிவகாமிநாதன்.

''ஆமாம், கண்ணே!'' என்று சொல்லிக் குழந்தையை ஆவி சேர்த்து எடுத்து அணைத்துக் கொண்டாள் சுந்தரி. தாயாரின் மடியில் உட்கார்ந்து கொண்டே சிவகாமிநாதன் கேட்டான்.

''அம்மா! நான் அம்மாவைப்போல் நாட்டியம் ஆடுகிறேன் என்றால், அப்பா என்ன செய்து கொண்டிருந்தார்கள் அம்மா! சொல்லேன்!'' என்று கெஞ்சினான் சிறுவன்.

''உன் அப்பாவும் நாட்டியம் சங்கீதம் என்றால் ஒரே உயிராக இருந்தார்கள், கண்ணே!''

இப்படிச் சொல்லிக் கொண்டே துயரத்தை அடக்க முடியாமல் கண்ணீர் விட்டாள் சுந்தரி. அதைப் பார்த்த சிவகாமிநாதன் தானும் அழுது கொண்டே மேலும் கேட்டான்:

''அப்படியானால் அப்பாவினுடைய அப்பா! அவர்களும் நாட்டியந்தான் ஆடினார்களா, அம்மா!'' என்று பையன் கேட்கும்போதே தாயாரின் கண்களில் அளவுகடந்த கண்ணீர் வடிவதைப் பார்த்து, சிவகாமிநாதனும் கதறி அழ ஆரம்பித்தான், தான் கேட்ட கேள்வியை மறந்தவனாக!

இப்படி ஒரு நாள் நடந்தது. இதன் பிறகு சுந்தரி மேலும் கவனமாக இருந்தாள். சிவகாமிநாதனுக்குப் பெண் குழந்தையைப் போல் அலங்காரங்கள் செய்வாள். தலை சீவிப் பூ முடித்து ராக்குடி வைத்துப் பின்னி விடுவாள்! பெண் குழந்தைகளோடு சேர்ந்து சிவகாமிநாதனுக்கும் நடனம் ஆடுவதற்குரிய முறையான பயிற்சியைக் கற்றுக் கொடுத்தாள். சிறுமிகள் எல்லாம், ''சிவகாமி, சிவகாமி!'' என்று அழைத்துக் கொண்டே அவனுடைய நடனத்தைப் பாராட்டுவார்கள். அம்மா சிறுமியாக இருந்தபோது இப்படியேதான் இருந்திருப்பாள் என்று எல்லாரும் கொண்டாடுவார்கள். சிவகாமிநாதனுக்கு இதையெல்லாம் கேட்கக் கேட்கக் குதூகலமாக இருக்கும்! என்றாலும், எப்போதாவது தாயார் வெளியே போயிருந்தால், தன்னோடு கற்கும் சிறுமிகள் யாரும் இல்லாமல் தான் மட்டும் தனியாக இருக்க நேர்ந்தால், எங்காவது பென்சிலும் காகிதமும் இருக்கிறதா என்று தேடிப் பார்ப்பான் சிவகாமிநாதன்! ஒன்றும் அகப்படவில்லையென்றால், அடுப்புக் கரியை எடுத்துத் தரையிலே கிறுக்க ஆரம்பித்து விடுவான்! யாராவது வருகிற சத்தம் கேட்டால், வேகமாக எழுந்து காலால் அதையெல்லாம் அழித்து அவசரம் அவசரமாகத் தரையை மெழுகிப் பூசி விடுவான்!

சிவகாமிநாதனுடைய கால்கள் நடனத்தின் ஜதியிலே பழகின. ஆனால் அவனுடைய கைவிரல்களோ என்றால் சித்திரம் சித்திரம் என்று துடிதுடித்தன!

இப்படியிருக்கும்போது ஒரு நாள் சுந்தரி எங்கோ வெளியே போயிருந்தபோது, தன்னந் தனியாக இருந்த சிவகாமிநாதன் மேஜையைத் திறந்து அதிலிருந்த ஒரு காகிதக் கட்டை வெளியே எடுத்தான். பென்சில் அருகிலே கிடந்தது. அதை எடுத்து வைத்துக் கொண்டு அவனுக்குத் தோன்றியபடியெல்லாம் ஏதேதோ வரைய ஆரம்பித்தான்! தன்னோடு நடனம் கற்கும் மாணவிகளையும், அவர்களுடைய நடனத் தோற்றங்களையும், காகிதத்தில் வரைந்து பார்க்க ஆரம்பித்தான் சிவகாமிநாதன்!

நீண்ட நேரம் ஆயிற்று. சித்திரத்திலே லயித்திருந்த சிவகாமிநாதன் வாசற் கதவை யாரோ தட்டும் ஓசை கேட்டுப் பதறிப் போனான். தாயார் தான் வந்து விட்டார் என அஞ்சி, அந்தக் காகிதங்களை என்ன செய்யலாம் என்று சிவகாமிநாதன் யோசிப்பதற்குள், ''அம்மா!'' என்று வேற்றுக் குரல் கேட்டது. கதவைத் தட்டியது தாயார் இல்லை என்று தெளிந்த பையன், சித்திரச் சிட்டையை மேஜையின் மேலே போட்டு விட்டு வெளியே போய்க் கதவைத் திறந்தான்.

''தம்பி! அம்மா இல்லையா?'' என்று கேட்டுக் கொண்டே, நீண்ட காவி அங்கி அணிந்திருந்த ஒரு சாமியார் வீட்டினுள் நுழைந்தார். (தொடரும்)

# டாக்டர் பத்மாவதி

ஸோமாஸ்



டாக்டர் பத்மாவதியின் பங்களா பிரமாதமாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. வர்ண மின்சார விளக்குகளின் தோரணங்களாகத் தொங்கவிட்டு அதியற்புதமாகத் தீபாலங்காரம் செய்யப்பட்டிருந்தது. நாதகர இன்னிசை அமுதப் பிரவாகமாய்ப் பொங்கிப் பரவிக் கொண்டிருந்தது. தெரு முழுவதும் நகரத்துப் பிரமுகர்களின் கார்கள் அவ்வளவும் வரிசையாக நின்றன. விருந்தும் வைபவமுமாக அந்த வீடு அமர்க்களப்பட்டுக்கொண்டிருந்தது. வருவோரும் போவோருமாக பங்களா வாசலில் ஒரே கும்பல்.

பத்மாவதியின் தம்பி மகள் கலாவதியின் நடன அரங்கேற்றம்தான் அந்த வைபவத்துக்குக் காரணம். ஓய்வு ஒழிவு இல்லாமல் வைத்தியத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் பிரசித்தி பெற்ற லேடி டாக்டரான பத்மாவதியை அன்றுதான் எல்லோரும் சற்றுச் சாவகாசமாகப் பார்த்தனர் என்று கூறவேண்டும். அன்று கூடப் பத்மாவதி எல்லோரையும் வரவேற்பதிலும், உபசரிப்பதிலும் ஈடுபட்டு ஓர் இடத்திலும் தங்காமல் ஓடியவண்ணம் தான் இருந்தாள்.

இரவு ஒன்பது மணிக்கெல்லாம் வைபவம் முழுவதும் முடிந்து விட்டது. டாக்டர் பத்மாவதி உடைகளை மாற்றிக் கொண்டு நர்ஸிங் ஹோமுக்குப் போய் விட்டாள். நர்ஸிங் ஹோம் அமைதியாக இருந்தது. இரவு 'டூட்டி' பார்க்கும் நர்ஸ்கள் அங்கும் இங்கும் போய்க் கொண்டிருந்தனர். இரண்டொரு நர்ஸ்கள் வராந்தாவில் நின்று பேசிக்கொண்டிருந்தனர். டாக்டர் பத்மாவதியின் கார் உள்ளே நுழைவதைப் பார்த்ததும் அவர்கள் தங்கள் பேச்சை நிறுத்திவிட்டுக் கலையத் தொடங்கினர்.

டாக்டர் பத்மாவதி தன்னுடைய அறைக்குச் சென்றதும் சரளா, பாமா, கமலா ஆகிய நர்ஸ்களை அழைத்து வரும்படி வேலையாளை அனுப்பினாள். உடனே அவர்கள் டாக்டரின் அறைக்குள் நுழைந்தனர். பத்மாவதி அவர்களை அமரச் சொன்னாள்.

டாக்டர் பத்மாவதியின் முகம் மிகவும் சோர்வடைந்திருந்தது. இருதயம் சம்பந்தப்பட்ட நோய்களையும், குழந்தைகளுக்கு வரும் பிணிகளையும் பற்றிய ஆராய்ச்சியில் தேர்ச்சி பெற்றுப் பெரும் புகழுடன் விளங்குபவள் டாக்டர் பத்மாவதி. ஏழை, பணக்காரர், தெரிந்தவர், தெரியாதவர் என்ற வேற்றுமை எதுவுமின்றி டாக்டர் பத்மாவதி நோயாளிகளைக் கவனித்து வந்து கைராசியுள்ள டாக்டர் என்ற பெயரையும் ஏராளமான பணத்தையும் சம்பாதித்துத் தனக்கு ஒரு பங்களாவையும் கட்டியிருந்தாள்; பெரிய நர்ஸிங் ஹோமையும் கட்டி அந்த ஊருக்கே நடுநாயகமாக விளங்கினாள். டாக்டர் பத்மாவதியையும், பத்மா நர்ஸிங் ஹோமையும் தெரியாதவர்களே இல்லையெனலாம்.

நாற்பது வயதை எட்டி விட்ட டாக்டர் பத்மாவதியைப் பார்த்தவர்கள் நிச்சயமாக முப்பது வயதுக்கு மேல் மதிக்கவே மாட்டார்கள். நல்ல லட்சணமான முகம். பிறை நுதலை எடுத்துக் காட்டும் குங்குமப் பொட்டு. நெளி நெளியான கூந்தல்; நீண்ட பின்னல். சாதாரண பெங்கால் ஸில்க் புடவை அவளது பொன்னுடலைத் தழுவிப் பெருமை பெற்றது.

இவ்வளவு அழகும், அறிவும் பெற்றிருந்த பத்மாவதி இத்தனை வயது வரைக்கும் விவாகம் செய்து கொள்ளாமல் இருப்பது ஒரு பெரிய புதிராகவே இருந்தது. யாருக்கும் அதுபற்றித் தெரியாது. அவளை யாரும் அதுபற்றிக் கேட்கத் துணிந்ததில்லை.

டாக்டரம்மாள் ஒன்றும் சொல்லாமல் ஏதோ சிந்தனையில் ஈடுபட்டிருக்கவே நர்ஸ்களும் யோசனையில் ஆழ்ந்தனர். அவர்களுள் கமலா டாக்டரம்மாளுக்கு ரொம்பவும் வேண்டியவள். வேலையிலும் மிகக் கெட்டிக்காரி. டாக்டர் பத்மாவதியின் ஆதரவிலேயே நர்ஸ் பயிற்சி பெற்றவள். டாக்டர் அம்மாள் அவளைத் தன் சொந்த மகளைப் போலவே நடத்தி வந்தாள்.

கமலா தான் டாக்டரம்மாளின் மௌனத்தைக் கலைத்தாள்.

''டாக்டர், இன்று வீட்டில் விசேஷமாயிற்றே! அனேகமாக வர மாட்டீர்கள் என்று நாங்களெல்லோரும் நினைத்தோம்..''

''விசேஷம்தான் முடிந்துவிட்டதே! உடனே என் கடமையை நான் கவனிக்க வேண்டியதுதானே? ஏதோ கடந்த கால நினைவுகளில் ஆழ்ந்திருந்து விட்டேன். என் வீட்டில் இன்று நடந்த நடனஅரங்கேற்றம்தான் என் சிந்தனைக்குக் காரணம்...!''

''டாக்டர்....!'' என்று அழைத்து ஏதோ சொல்ல வாயெடுத்த கமலா சற்றுத் தயங்கி நிறுத்தி விட்டாள்.

''கமலா! நீ கேட்க நினைத்தது என்னவென்று எனக்குத் தெரியும். நீங்களெல்லோரும் அதைப் பற்றித்தான் பேசிக்கொண் டிருந்திருப்பீர்கள்!''

''உண்மைதான். ஆனால் உங்களுக்கு நாட்டியக் கலையில் உள்ள தேர்ச்சியைப் பற்றித்தான் குறிப்பாக வியந்து பேசிக் கொண்டிருந்தோம். எங்களை மேலும் வியப்பில் ஆழ்த்தியது என்னவென்றால் நீங்கள் உங்கள் தம்பியின் பெண்ணுக்கு நடனம் சொல்லிக் கொடுத்து அரங்கேற்ற சமயத்தில் நீங்களே அருமையாகப் பதமும் பாடியது தான். இவ்வளவு அருங் கலைகளில் திறமையை வைத்துக் கொண்டு நீங்கள் ஏன் டாக்டரானீர்கள் என்பதுதான் எங்களுக்கு விளங்காத புதிரா யிருக்கிறது........அத்துடன் தாங்கள் விவாகம் செய்து கொள்ளாமல் இருந்து விட்டதும் அதிசயமாயிருக்கிறது.....!'' என்றாள்.

''புதிர்மட்டும் அல்ல. அது ஒரு கதையுங்கூட. உங்களுக்கு அந்தக் கதையைச் சொல்லவேண்டும் என்று எனக்குக்கூட ஆசைதான், உங்களுக்கெல்லாம் அதைப் பற்றிக் கேட்க ஆவலும் பொறுமையும் இருந்தால் சொல்லுகிறேன்'' என்றாள் டாக்டர் பத்மாவதி.

அத்தனை நர்ஸ்களும் ஒரே குரலில். ''சொல்லுங்கள் டாக்டர்!'' என்றனர்.

டாக்டர் பத்மாவதி சொன்னாள்:

**நா**ன் என் பெற்றோருக்கு ஒரே பெண்ணாகத்தான் பிறந்தேன். நான் பிறந்து ஐந்து வருஷங்களுக்குப் பிறகு என் தம்பி சுந்தரம் பிறந்தான். பிறகு ராமு பிறந்தான். உயர்நிலைப்பள்ளிப் படிப்பு முடிந்ததும் என் தாயார் எனக்கு விவாகம் பண்ணி விடவேண்டும் என்று துடியாய்த் துடித்தாள். என் தகப்பனாருக்கு இதில் அவ்வளவாகச் சம்மதம் இல்லாவிட்டாலும் அம்மா பேச்சைத் தட்ட முடியாமல் அரை மனதுடன் வரன் தேடினார். பல ஊர்களிலிருந்து ஜாதகங்கள் வந்து குவிந்தன. அப்பா அவைகளில் ஒரு ஜாதகத்தைப் பொறுக்கி யெடுத்து என் ஜாதகத்துடன் ஒத்திட்டுப் பார்த்தார். அது பொருந்தியிருக்கவே பெண் பார்க்கும் படலத்துக்கு ஏற்பாடாயிற்று.



நான் அன்று பாவாடை தாவணிக்குப் பதிலாகப் புடவை கட்டிக்கொண்டு அலங்காரம் செய்து கொண்டேன். 'எடுப்பான மூக்கும், விசாலமான கண்களும் பத்மாவுக்கு இருக்கிறதுபோல யாருக்கு இருக்கிறது? பெரிய ஆபீஸராக ஒரு வரன் தானாக வலிய வந்து அவளைக் கொத்திக்கொண்டு போய்விடமாட்டானா?' என்று என் பாட்டி அடிக்கடி சொல்லுவாள்.



ஒன்று இரண்டு
மூன்று இதோ தயார்!
ஆம், செய்ய அத்தனை எளிதானது.
இலேசான, சுவைமிக்க

# ரெக்ஸ் ஜெல்லி



ரெக்ஸ் ஜெல்லியிலுள்ள பழச் சுவையும், வாசனையும் உங்கள் குடும்பத்திலுள்ளோர் அனைவர்க்குமே பிரியமானது. அவர்களுக்காக ரெக்ஸ் ஜெல்லி செய்ய நீங்கள் விரும்புவது சகஜமே... காரணம், அது சத்துச் செறிந்தது. வளரும் குழந்தைகளுக்குச் சிறந்தது. சின்னஞ்சிறு சிசுக்களும், வியாதியிலிருந்து தேறிவருபவர்களும்கூட ஜீரணித்துக் கொள்ளக்கூடியது.





கீழ்க்காணும் 6 வித நேர்த்தியான சுவைகளில் ஒன்றைக்கொண்டு ரெக்ஸ் ஜெல்லி தயாரிக்கலாம்: ராஸ்ப்பெர்ரி, ஸ்ட்ரா பெர்ரி, பைனாப்பிள், ஆரஞ்சு, லெமன், செர்ரி.

நீங்கள் பின்பற்ற மூன்று வழி எளிய தயாரிப்பு முறை:

1 ரெக்ஸ் ஜெல்லி படிகமணிகளை வெந்நீரில் கரைக்கவும்.
2 பிறகு, போதுமான அளவு குளிர்ந்த ஜலத்தை அத்துடன் சேர்த்து, ஒரு பைண்ட் (20 அவுன்ஸ்) அளவு கலவையாகச் செய்யவும்.
3 அதை அச்சில் ஊற்றி பனிக்கட்டி மேல் ஜெல்லியை உறைய வையுங்கள்.



அடிக்கடி பரிமாறக்கூடிய அருமையான பொருள் ரெக்ஸ் ஜெல்லி.

**கார்ன் பிராடக்ட்ஸ் கோ. (இந்தியா) பிரைவேட் லிட்.**

CPY-12-TAM

பெண் பார்க்க வருகிறவர்களுக்கு அம்மா வழக்கமான டிபனைத் தயார் செய்து வைத்தாள். வரன், அவரது தாயார், தகப்பனார், அக்கா, அத்திம்பேர், அண்ணா, மன்னி என்று கூட்டமாகப் பெண் பார்க்கவந்தார்கள். நான் எல்லோருக்கும் நமஸ்காரம் பண்ணினேன். என்னை எல்லோருக்கும் எடுத்த எடுப்பிலேயே பிடித்து விட்டது. அம்மாவுக்கு இதில் பரம சந்தோஷம். ஆனால் அந்தச் சந்தோஷம் அதிக நேரம் நீடிக்கவில்லை. வரனுடைய தாயார், ''பெண்ணுக்குப் பாட்டு தெரியுமா?'' என்று கேட்டதும் எனக்கு என்னவோ போல் இருந்தது. நான் இதுவரையில் பாட்டைப் பற்றிச் சிந்தித்ததேயில்லை. சதா படிப்பு, படிப்பு. அதுதான் என் லட்சியமாயிருந்தது. வகுப்பில் முதலாவதாக வர வேண்டும் என்கிற ஆர்வத்தில் சதா புத்தகமும் கையுமாக இருந்தேன். ஏதோ பள்ளிக்கூடத்தில் சொல்லிக் கொடுத்த இரண்டொரு பாட்டுக்கள் தெரியும். அந்தப் பாட்டுக்களை அவர்களெதிரில் பாடவே வெட்கமாயிருந்தது. அப்பா ''ஏதாவதொரு பாட்டைப் பாடு அம்மா!'' என்றார். நான் ''வாணி அருள் புரிவாய்' என்ற பாட்டைப்பாடினேன். எனக்குத் தெரிந்த வரையில் நன்றாய்த்தான் பாடினேன். ஆனால் அவர்கள் யாரும் என் பாட்டை ரசித்ததாகத் தெரியவில்லை.

''சிக்ஷை ஒன்றும் இல்லையாக்கும்....!'' என்று ஒரு மாதிரி இழுத்தாற் போலக் கேட்டாள் வரனின் தாயார்.

''பாட்டு தனியாகச் சொல்லி வைக்கவில்லை. பள்ளிக்கூடத்தில் சொல்லிக்கொடுத்த பாட்டுத்தான்'' என்று அப்பா சொன்னதும் அவர்களுடைய முகங்கள் போன போக்கைப் பார்க்க வேண்டுமே!

''பையனுக்குப் பாட்டு என்றால் உயிர். அவனே ஒரு சங்கீத வித்வானிடம் பாட்டுக் கற்றுக் கொண்டான். நன்றாய்ப் பாடுவான்'' என்றார் வரனின் தகப்பனார்.

''பெண்ணுக்குப் பாட்டு சுமார்தான்'' என்றாள் அந்த அம்மாள் அலட்சியமாக.

மறு நிமிஷம் எல்லோரும் விருட்டென்று எழுந்திருந்தனர். அப்பா தயங்கினாற் போல் அவர்களைப் பார்த்து ''அப்புறம் உங்கள் அபிப்பிராயம்....?'' என்று இழுத்தாற் போலக் கேட்டார்.

''எங்களுக்குப் பெண் நன்றாய்ப் பாட வேண்டும். சிக்ஷை சொல்லிக் கொண்டவளாயிருந்தால் நல்லது....'' என்று கூறிய வரனின் தகப்பனார் வேகமாக நடையைக் கட்டலானார். அவருடன் அவரது பரிவாரமும் நகர்ந்து விட்டது.

அப்பாவுக்குக் கொஞ்ச நேரம் ஒன்றும் தோன்றவில்லை. அம்மாவின் முகம் களையிழந்திருந்தது. என்னைப் பொறுத்தவரையில் இதில் வருத்தப்படுவதற்கு என்ன இருக்கிறது என்று விளங்கவில்லை.

ஒரு வாரத்துக் கெல்லாம் அப்பா எனக்குப் பாட்டு வாத்தியார் ஒருவரை ஏற்பாடு செய்து விட்டார். நானும் சிரத்தையாகப் பாட்டுக் கற்றுக் கொள்ள ஆரம்பித்தேன். இரண்டு வருஷங்களில் நான் சங்கீதத்தில் நல்ல தேர்ச்சி பெற்று விட்டேன். கருதி சுத்தமாக நல்ல கீர்த்தனங்கள் பலவற்றை நன்கு பாடக் கற்றுக் கொண்டேன்.



''உங்க வீட்டுக்கு வந்து ஐந்து தடவை கதவைத் தட்டினேன். நீங்கள் இல்லை.''

''சுத்தப் பொய்!''

''ஏதய்யா பொய்?''

''நீங்கள் ஐந்து தடவை தட்டினேன் என்றீர்களே, அது பொய். ஆறு தடவை தட்டினீர்கள்!''

அந்த வருஷம் தை பிறந்ததும் என் கல்யாணப் பேச்சு அடிபட ஆரம்பித்தது. பெங்களூரிலிருந்து ஒரு வரனின் ஜாதகம் வந்தது. அது என் ஜாதகத்துக்குப் பொருத்தமாயும் இருந்தது. அப்புறம் என்ன? பெண் பார்க்கும் படலம் மீண்டும் நடந்தது.

அவர் உதயசங்கர் மாதிரி சிகை அலங்காரத்துடனும், பைஜாமாவுடனும் பார்க்க அழகாகவே இருந்தார். பி. ஏ., பாஸ் செய்தவராம். என் பாட்டைக் கேட்டு மனமாரப் பாராட்டினார். அவருக்குத் தாய், தந்தையர்கள் இல்லை. அவருடன் அவருடைய மாமாவும், மாமியும் வந்திருந்தனர். அவர்கள் பையனுடைய விருப்பம் எதுவோ அதுவே தங்கள் விருப்பமும் என்று கூறிவிட்டனர். பையனுக்கு நிறையச் சொத்து இருந்தது. நடனக் கலையில் தேர்ந்தவரான அவர் பெங்களூரில் ஒரு நடனப் பயிற்சிப் பள்ளிக்கூடம் நடத்தி வருகிறாராம். இந்த வரன் ஏற்பாடாகி விடலாம் என்று அப்பா நம்பினார். ஆனால் அவர் அப்பாவிடம் வெளிப்படையாகச் சொல்லி விட்டார்.

''எனக்கு நாட்டியம் தெரிந்த பெண்தான் வேண்டும். ஓரளவு பயிற்சி பெற்றிருந்தால் கூடப் போதும். நான் அதைப் பூர்த்தி பெறச் செய்து விடுவேன். உங்கள் பெண்ணுக்கு நடனம்....'' என்று அவர் பேச்சை முடிப்பதற்குள் அப்பாவின் முகம் சோர்ந்து போய் விட்டது.

''பள்ளிக்கூடத்தில் நடனம், கோலாட்டம் எல்லாவற்றையும் கொஞ்சம் கற்றுக்கொண்டிருக்கிறாள். ஆனால் தனியாக நாட்டியம் சொல்லி வைக்கவில்லை....!'' என்றார் அப்பா.

"எனக்கு மனைவியாக வருபவள் உண்மையிலேயே என் வாழ்க்கைக்குத் துணையாக இருக்க வேண்டும். அதுதான் எனது இதய அந்தரங்க ஆசை. என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்!" என்று கூறி நடன முத்திரையுடன் கைகூப்பி விடைபெற்றுக் கொண்டான் அந்த வாலிபன். அவனுடன் வந்தவர்களும் அவனைப் பின் தொடர்ந்தனர்.

நான் எவ்வளவோ மறுத்துக் கூறியும் கேளாமல் அப்பா என்னை நாட்டிய வகுப்பில் சேர்த்தார். ஆனால் எனக்கு உள்ளூற இதில் ஒரு விருப்பம் இருந்தது. கூடவே கொஞ்சம் கூச்சமாகவும் இருந்தது. அம்மாவுக்கு இதில் துளியும் விருப்பம் இல்லை. அப்பா எதிலும் பிடிவாதக்கார ராதலால் அம்மாவின் அபிப்பிராயம் எடுபடவில்லை.

ஒரு நல்ல நாளில் தொடங்கிய நடனப் பயிற்சி வளர் பிறை போல் வளர்ந்து கொண்டே வந்தது. என் உடலின் வாகவும், நடனக் கலையில் எனக்கு இருந்த ஆர்வமுமாகச் சேர்ந்து என்னை வெகு சீக்கிரத்தில் அதில் தேர்ச்சி பெற வைத்தன.

அடுத்த ஆண்டும் அப்பா வழக்கம் போல் அம்மாவின் நச்சரிப்பின் காரணமாக வரன் வேட்டையில் இறங்கினார்.

இந்தத் தடவை வந்த வரன் ஒரு எம். ஏ., பட்டதாரி. அவருடன் அவரது தாய் தந்தையர் வந்திருந்தனர். என்னை அவர்களுக்குப் பிடித்து விட்டது என்று தோன்றியது.

இந்த வரன் அநேகமாக நிச்சயமாகிவிடும் என்று இருந்த சமயத்தில், அவர்கள் அதிர்ச்சி தரும் அபிப்பிராயம் ஒன்றை வெளியிட்டனர்.

"உங்கள் பெண் எங்களுக்கு ரொம்பப் பிடித்திருக்கிறாள். ஆனால் பையன் எம்.ஏ. பாஸ் செய்திருக்கிறபடியால் பெண்ணும் ஒரு பட்டதாரியாயிருக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறேன். அதனால்தான் யோசிக்க வேண்டியிருக்கிறது...." என்றார் பையனின் தகப்பனார். அப்பாவுக்கு ஒன்றும் தோன்றவில்லை. அவர்கள் மௌனமாக வெளியேறி விட்டனர்.

இந்தத் தடவை நானே அப்பாவிடம் முந்திக் கொண்டேன். "அப்பா, எனக்குக் கல்யாணமே வேண்டாம். எனக்கு மேலே படிப்பைத் தொடர வேண்டும் என்றுஆசையாயிருக்கிறது!" என்று ஒரேயடியாகப் பிடிவாதம் பிடித்தேன். அம்மா இதற்கும் தன் எதிர்ப்பைத் தெரிவித்தாள். என் திருமண முயற்சியில் அடுத்து அடுத்துத் தோல்வியைக் கண்டு விட்ட என் தகப்பனார் அருமுயற்சி செய்து என்னைக் கல்லூரியில் சேர்த்து விட்டார். படிப்போடு நடனப் பயிற்சியையும் விடாமல் கவனித்து வந்தேன்.

என் இருபத்திரண்டாம் வயதில் நான் ஒரு பி. எஸ்ஸி. பட்டதாரியானேன். அப்பா அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையேயில்லை. அம்மாவுக்கும் சந்தோஷம்தான். எனக்கு மட்டும் என்ன?

அம்மா இப்பொழுது துளைத்தெடுக்க ஆரம்பித்து விட்டாள். "இனிமேல் படிப்பு வேண்டாம். உடனே கல்யாணத்தை முடித்துவிட வேண்டும்!" என்று தீர்மானமாகக் கூறி விட்டாள். அப்பாவும் தீவிரமாக வரன் வேட்டையில் இறங்கினார். பல வரன்கள் கிடைத்தும் ஒன்றும் குதிரவில்லை, எனக்கு வரன் தேடுவதில் இப்பொழுது புதிதாக ஒரு சிரமம் சேர்ந்து கொண்டது. பட்டதாரியான ஒரு பெண்ணுக்குப் பட்டதாரியான வரனைத் தானே தேட வேண்டும்? அது அத்தனை சுலபமாயில்லை. பட்டதாரி வரனுக்குப் பட்டதாரிப் பெண்தான் வேண்டும் என்று சொன்னவர்களெல்லாம் கிட்டே நெருங்கினால் பணமும் ஏராளமாகக் கேட்டார்கள். பி.எஸ்ஸி. படித்த பெண் என்றால் பணம் அதிகமாகக் கேட்காமல் மணந்து கொள்ள முன் வருவார்கள் என்று எதிர்பார்த்த என் தகப்பனாருக்குக் கிடைத்தது ஏமாற்றம்தான். இந்த நிலையில் அம்மா நோய் வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாயிருந்து, இறந்து விட்டாள். அப்புறம் அப்பா இறகொடிந்த பறவையானார்.

என் மனம் ஒரு நிலையில் நில்லாமல் தவித்தது. கல்யாணம் என்றாலே மனத்தில் கசந்து வழிந்தது; கண்களில் நீர் சுரந்தது. என்னை நினைத்து அப்பா படுகிற வேதனையைக் கண்டு என்னால் சகித்துக் கொண்டிருக்க முடியவில்லை. அப்பாவுக்கு மனோவியாதியே பெரிதாகிப் படுக்கையில் கிடத்தி விட்டது. என் மன நிம்மதிக்காக நான் டாக்டருக்குப் படிப்பதென்று முடிவாகியது. என் தகப்பனாரின் நண்பர் தான் இதற்கு மூல காரணமாயிருந்தவர். என் கல்யாணமோ நடக்கிற வழியாயில்லை. ஆகவே அப்பா அந்த முடிவை ஏற்றுக் கொள்ளும்படியாகி விட்டது.

"டாக்டர் பத்மாவதி எம்.பி., பி. எஸ்., என்னும் போர்டு வீட்டு வாசலில் தொங்க ஆரம்பித்த பிறகுதான் எனக்கு மன நிம்மதி ஏற்பட்டது. அதற்கு ஏற்றாற் போல் நான் விரைவில் தொழிலில் முன்னேறவே கைராசியுள்ள டாக்டர் என்ற பெயர் வந்தது. என் தம்பிமார் இருவரையும் படிக்க வைத்து முன்னுக்குக் கொண்டு வந்தேன். சர்க்கார் உதவியினால் அமெரிக்கா சென்று குழந்தை வைத்தியத்திலும், இருதய நோயிலும் விசேஷத் தேர்ச்சி பெற்றுத் திரும்பினேன். ஆனால் அந்தச் சந்தோஷத்தில் பங்கு கொள்ளஅப்பா இல்லை. அதுதான் என் மனசுக்குத் தாங்க முடியாத வருத்தமாயிருந்தது.

என் தம்பிமார்கள் இருவருக்கும் விவாகம் நடந்து விட்டது. மூத்தவனுக்குக் குழந்தைகள் பிறந்து அவை 'அத்தை, அத்தை' என்று என்னைச் சுற்றி வருகின்றன. நோயாளிகளைக் கவனித்த நேரம் போக இந்தக்குழந்தைகளோடு பழகும் ஆனந்தம் எனக்கு எவ்வளவு இதமாயிருக்கிறது தெரியுமா......?

★

லேடி டாக்டர் பத்மாவதி தன்வாழ்க்கை வரலாற்றைக் கூறி முடித்ததும் கமலா,— "டாக்டர்! உங்களுடைய வாழ்க்கை மிகவும் விசித்திரமானதுதான்! முதல் எடுப்பில் தோல்வி கண்டாலும் நீங்கள் டாக்டரான பிறகாவது விவாகம் செய்து கொண்டிருக்கலாமே!" என்று கேட்டாள்.

பத்மாவதி சிரித்துக் கொண்டே, "விவாகத்தின் நோக்கம்தான் என் வரையில்பூர்த்தியாகி விட்டதே! நர்ஸிங் ஹோம் தான் என்னுடைய சொந்தக் குடும்பம். அதைக் கவனிப்பதில் தானே என் பொழுதைச் செலவிடுகிறேன்?" என்றாள். அவள் முகத்தில் அமைதியும் மகிழ்ச்சியும் கலந்து பொங்கின.

# படித்துப்  பாருங்கள்

## தாகூரின் நகைச்சுவை நாடகங்கள்

மாபெரும் காவியங்களையும், மாபெரும் நாடகங்களையும், மாபெரும் நவீனங்களையும் புனைவதில் ஈடுபட்ட கவி தாகூரின் உள்ளம் சாதாரண மக்களின் அன்றாட வாழ்வில் காணும் மிக மிகச் சாமான்ய சம்பவங்களையும் சாமான்ய மன இயல்புகளையும் கண்டு ரசித்திருக்கிறது என்பதையே இந்த நாடகத்தொகுதி எடுத்துக்காட்டுகிறது. 'வண்டி அற்புதப் பொருளாம் — வண்டி — மாடும் அற்புதப் பொருளாம்' — என்று கவிமணி கூறிய வாக்கின் உண்மை விளக்கம் இந்நூல். மதுசூதன் என்ற மண்டுப் பையனைப் பெற்ற தந்தையின் மனோபாவத்தையும்,— ஆசிரியரின் மனோபாவத்தையும் எவ்வளவு நாசூக்காக முதல் நாடகத்திலேயே காட்டுகிறார். இத்தொகுதியில் மொத்தம் பதினைந்து நாடகங்கள் இருக்கின்றன. ஒவ்வொன்றும் படிப்பதற்கும் சிரிப்பதற்கும் ஏற்றதாக இருக்கிறது. திரு த. நா. குமாரஸ்வாமி நல்ல தமிழில் சுவைபட மொழிபெயர்த்திருக்கிறார்.

பிரசுரம்: அருணோதயம், ராயப்பேட்டை, சென்னை — 14. விலை: 95 ந. பை.

## மக்கள் சுயராஜ்யம்

பாரத நாட்டின் சிறந்த சிந்தனையாளரும் அரசியல் தலைவருமான ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் நாராயண் அவர்கள், எழுதிய 'மக்கள் சுயராஜ்யம்' என்ற கருத்துச் செறிவுள்ள ஒரு கட்டுரையின் மொழிபெயர்ப்பே இப்புத்தகம். தற்சமயம் ஆட்சிமுறை மேலிருந்து கீழாகச் செல்கிறது என்பது ஜெயப்பிரகாஷ் கருத்து. அதாவது தில்லியிலிருந்து ராஜ்ய சர்க்கார்களுக்கும், அங்கிருந்து நகராண்மைக் கழகங்களுக்கும், நகரசபைகளுக்கும், பஞ்சாயத்துக்களுக்கும் அதிகாரம் செல்கிறது என்பது அவரது எண்ணம். இதை மாற்றிப் பஞ்சாயத்திலிருந்து தில்லி வரை — கீழிருந்து மேல் நோக்கி அதிகாரம் பரவினால்தான் உண்மையான ஜனநாயக ஆட்சியை நிலைநாட்டியதாகும்; மக்கள் சுயராஜ்யமாகும் என்று வாதாடுகிறார் ஜெயப்பிரகாஷ். இக் கருத்துக்கள் படிப்பதற்கு நன்றாக இருக்கும். நடைமுறையில் கொண்டு வரும்போது பல சங்கடங்கள் எழக்கூடும். எனினும் ஆட்சி முறையைப் பற்றிச் சிந்தனைக் கிளர்ச்சி பெற விரும்புவோர் இந்தப் புத்தகத்தைப் படித்தே யாகவேண்டும்.

பிரசுரம்: சர்வோதயப் பிரசுராலயம், தஞ்சாவூர். விலை: ரூ. 1.

## கட்டுரை எழுதும் முறை

இந்த நூலின் தலைப்பைக் கொண்ட கட்டுரையைப் படித்து விட்டு, கட்டுரை எழுதும் முறையைக் கற்றுக் கொண்டு விடலாம் என்று யாராகிலும் நினைத்துப் படிக்கத் தொடங்கினால் பெருத்த ஏமாற்றமே அடைவார்கள்.

ஆனால் இதைத் தவிர சில நயமான கட்டுரைகள் இருக்கின்றன. அவற்றைப் படிப்பதால் வாசகர் நல்ல பயனைப் பெறுவார்கள் என்பதில் ஐயமில்லை. 'தேமா, தேனு, நீமா?' என்ற தலைப்பில் ஒரு கட்டுரை இருக்கிறது; தலைப்பைப் பார்த்து யாராகிலும் இன்ன விஷயத்தைப் பற்றி இதில் சர்ச்சை செய்யப் பட்டிருக்கும் என்று ஊகிக்க முடிகிறதோ? இல்லையல்லவா? ஆனால் இது இனிப்பைப் பற்றி இலக்கணம் சம்பந்தப்பட்ட ஓர் இனிமையான கட்டுரை என்று மட்டும் சொல்லுவது இங்கு பொருந்தும். அதே போல் மாணிக்க வாசகர், பட்டினத்தார் முதலிய கட்டுரைகளும் படிப்பவர்கள் பயன்பெறத் தக்க கட்டுரைகளாகும்.

பிரசுரம்: ஸ்டார் பிரசுரம், 66, பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை — 5; விலை ரூ. 2.50.

## The Study of Tiruvalluvar

தெய்வப் புலமை திருவள்ளுவரின் கருத்துக்கள் எக்கால மக்களுக்கும் எல்லா நாட்டு மக்களுக்கும் உரியவையாகும் என்பதே குறளின் தனிச் சிறப்பு. அதைக் கருதியே பாரதியாரும் ''வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான் புகழ்கொண்ட தமிழ்நாடு'' என்றார். இம்மாதிரி யெல்லாம் நமக்குள் நம் மொழியில் பேசி என்ன பயன்? உலக மொழிகளில் அரங்கேற வேண்டாமா?



**சைக்கிளில் அடிபட்டவர்**: என்ன ஐயா இது? உனக்கு மணி அடிக்கத் தெரியாதோ?

**சைக்கிள் ஓட்டி**: என்ன அப்படிச் சொல்லி விட்டீங்க? மணி ஜோராக அடிப்பேன். ஆனால் சைக்கிள்தான் ஓட்டத் தெரியாது!

இதைக் கருதியே தமிழ்ப் பேராசிரியர் அவ்வை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள் மதுரை லயன்ஸ் கிளப்பில் ஆங்கில மொழியில் திருவள்ளுவரைப் பற்றியும் திருக்குறளைப் பற்றியும் நிகழ்த்திய பேருரை சிறு புத்தகமாக வெளிவந்திருக்கிறது. தெளிவான உணர்ச்சி மிக்க ஆங்கில நடையில் பேராசிரியர் திருவள்ளுவரைத் தமிழ் அறியாத மக்களுக்கு அறிமுகம் செய்து வைக்கிறார். சுமார் 125 குறட் பாக்களைக் கொண்டு விளக்கியிருப்பதால், இச்சிறு நூலைப் படிப்பவர்கள் ஓரளவு குறளாசிரியரைத் தெரிந்து கொள்ளக் கூடும். ஆகவே, பிறமொழியினரை நண்பர்களாகப் பெற்ற தமிழர்கள், குறளாசிரியரை அவர்களுக்கு அறிமுகப்படுத்த இந்நூலைப் பரிசு நூலாக வாங்கியளிக்கலாம்.

பிரசுரம்: விசாலாட்சிப் பதிப்பகம், மீனாட்சி நிலையம், திருப்பரங்குன்றம் ரோடு, மதுரை - 3. விலை: ரூ. 1. 50.

## ஜபயோகம்

உருவில் சிறியது என்றாலும் இந்தப் புத்தகத்தில் அடங்கியுள்ள விஷயம் மிக உயர்ந்தது. எழுதியவர் திரு எம். பி. பண்டிட். புதுவை அரவிந்தர் ஆசிரமத்தில் யோக சாதனைகளில் ஈடுபட்டுள்ளவர். மந்திர ஜபங்களின் தத்துவங்களும், ஒலியின் சக்திகளும், ஆற்றல்களும் ஜபத்தினால் கிடைக்கும் ஆன்மீக பலன்களும் தெளிவுடனும், தக்க உதாரணங்களுடனும் இதில் விளக்கப்பட்டுள்ளன. பொருள் அறியாமலும், பாவனையின்றியும் செய்யப்படும் ஜபம் பலனளிக்காது என்றும் ஐதீகமாக வழிவழி வரும் மந்திரங்கள் மட்டுமே புனிதமானவை; அவற்றுக்குப்புறம்பாகவுள்ள எதுவும் ஜெபத்துக்கு உரியதாகாது என்றும் சாதாரண மக்கள் கொண்டுள்ள கருத்துக்கள் தவறானவை என்பது இதில் எளிமையாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளது. அரவிந்த யோக முறையில் ஜபத்துக்கு அவ்வளவு முக்கியத்துவம் இல்லை என்பதும் இதில் எடுத்துக் காட்டப்பட்டிருக்கிறது. அரவிந்தர் தமது தீர்க்கதரிசனத்தால் அருளிய 'காயத்ரி' மந்திரமும் (சம்பிரதாயமான காயத்ரி மந்திரத்திலிருந்து மாறுபட்டது இது) அதற்கு அவரே ஆங்கிலத்தில் செய்த வியாக்கியானத்தின் தமிழ் மொழிபெயர்ப்பும், இதற்குத் திரு கபாலி சாஸ்திரியார் செய்துள்ள விளக்கமும் இதில் அடங்கியுள்ளன. இவை இந்நூலுக்கு மேன்மை அளிக்கின்றன. அரவிந்த யோக சாதகர்களைத் தவிர, மற்றவர்களும் படித்துப் பயன் பெறலாம். இம் மந்திரத்துக்குத் தேவதையாக விளங்கும் பரஞ்சோதியாம் அன்னைக்கே இந்த நூல் சமர்ப்பணமாக அளிக்கப்பட்டுள்ளது. ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ள மூலத்தை அனுபவம் முதிர்ந்த திரு ப. கோதண்டராமன் தமிழில் அழகாக மொழிபெயர்த்திருக்கிறார்.

கிடைக்குமிடம்: கணேஷ் அண்டு கம்பெனி (மதராஸ்) பிரைவேட் லிமிடெட், வெங்கட நாராயண ரோடு, சென்னை — 17; விலை ரூ. 1.50.

## திரு கனகரத்தினம் அவர்களின் மறைவு

தமிழ் மொழிக்கும், தமிழிசைக்கும், தமிழ் மக்களுக்கும், தமது கடைசி மூச்சு வரையில் அளப்பரிய பணி புரிந்த ஈழத்துப் பெரியார்களின் முதல் வரிசையிலே நின்ற திரு கா. கனகரத்தினம் அவர்களின் பிரிவு பெரும் நஷ்டமாகும்.

அவர் 1911-ம் வருடம் நாற்பது ரூபாய் சம்பளத்தில் இலங்கை அரசாங்க 'ஆடிட்' ஆபீஸில் ஒரு சாதாரண குமாஸ்தாவாகச் சேர்ந்தார். 1925-ம் ஆண்டு பிரதம கணக்குப் பரிசோதகராகவும் பின்னர் வேறு பல உயர்தர பதவிகளிலும் அந்நாட்டில் பணி புரிந்து விட்டு 1942-ம் ஆண்டு தற்காலிக ஆடிட்டர் ஜெனரலாக நியமிக்கப்பட்டார். உலக யுத்த காலத்தில் உதவி பொதுஜன பாதுகாப்பு அதிகாரியாக இருந்து வெற்றிகரமாகப் பாதுகாப்பு நடவடிக்கைகளை எடுத்தவர் அவர்தான். 1946-ல் ஒரு தமிழர் அப்பதவியிலிருக்கக்கூடாதெனக் கருதி ஓர் ஐரோப்பியரை நியமிக்கத் தீர்மானித்தபொழுது திரு கனகரத்தினம் அரசாங்க உத்தியோகத்தை உதறித் தள்ளிவிட்டு வெளியேறினார்.



கல்விக்கும், கலைவளர்ச்சிக்கும், தமிழிசைக்கும் திரு கனகரத்தினம் ஆற்றிய பணிகள் அனந்தம். சரித்திரப் பெருமை வாய்ந்த திருக்கேதீசுவர ஆலயத்தின் புனருத்தாரண சங்கத்தை நிறுவிய பெருமையும் திரு கனகரத்தினத்தையே சார்ந்தது. இந்து சமய ஆலய பரிபாலன சட்டமொன்றைத் தயாரிக்க இலங்கை அரசாங்கம் ஒரு கமிஷனை நியமித்தபோது அதற்குத் தலைவராக இருந்தவரும் திரு கனகரத்தினமே.

'பெரிய ஐயா' என்று இலங்கைத் தமிழர்கள் அன்புடனும் பக்தியுடனும் அழைக்கும் திரு கனகரத்தினம் இப்பொழுது அமரர் ஆகிவிட்டார். ஆயினும் அவர் நினைவு தமிழர்கள் மனத்தில் என்றும் பசுமையாக இருக்கும்.

## சிறந்த வாழ்க்கையின் சின்னம்

# பின்னியின்

# தூய ஸில்க் ஷர்ட்டிங்

கம்பீரமான தோற்றமளிப்பதற்கு தூய ஸில்க்கை மிஞ்சியதொன்றில்லை. சுகமாக அணிவதற்கு பின்னியின் S-56 தூய ஸில்க் ஷர்ட்டிங்கை மிஞ்சியதுமில்லை. அது பிரத்தியேகமான முறையில் நேர்த்தியாக தயாரிக்கப்படுவது. அணிவதற்கு மிருதுவாக இருப்பதுடன் உங்கள் கண்ணியமான தோற்றத்திற்கு மேலும் மெருகூட்டுவது.



பெங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ் கம்பெனி லிமிடெட்
அக்ரஹாரம் ரோடு, பெங்களூர் - 2
பின்னி & கம்பெனி (மதராஸ்) லிமிடெட் ஸ்தாபனத்தின் ஒரு கிளை

JWT-BM-SG 1841

எழிலின் எல்லையை எட்ட...

# "'ஹேஸலின்' ஸ்னோ"

மேனிக்கு மென்மையாக மெருகிடுவதிலே தன்னிகரற்றது
"'ஹேஸலின்' ஸ்னோ." மென்மையான,
எண்ணெய்ப் பசையற்ற இவ்வழகுப் பொருள்
சருமத்துக்கு மழமழப்பையும் வனப்பையும் ஊட்டுகிறது.
பவுடர் படிவதற்கெனவோ அல்லது தனிப்பட்ட
முறையிலோ உபயோகித்து உங்கள் சருமத்துக்குப்
பொலிவுடன் கூடிய பாதுகாப்பை அளியுங்கள்.
"'ஹேஸலின்' ஸ்னோ" அரம்பையர் குலத்தின்
பாரம்பரை அழகுசாதனம்.




பர்ரோஸ் வெல்கம்
தயாரிப்பு



BWY-11-TAM.

# பத்தினிக் கோட்டம்

### அத்தியாயம் பத்தொன்பது

## இலவந்திகைப் பள்ளியில் ?

வெண்பனி கவிந்த விந்தியம்போல் வனப்பும் வன்மையுமாக விளங்கியது பல்லவபுரம் அரண்மனைக் கோட்டை. காலஞ் சென்ற மாமல்லன் நரசிம்ம வர்மனால் கட்டப் பெற்ற அந்த அரண்மனைக் கோட்டையின் கோபுரக் குடுமியில், அவனது விறல் மணம் ஏறித் தடித்த வீரக் கரங்களைக் கொண்டு வானுற ஏற்றிப் பறக்க விடப்பட்ட பல்லவ சாம்ராஜ்யத்தின் புகழ் மண்டிய நந்திக் கொடி மறைந்து, அங்கே குருதி வண்ணச் சளுக்கிய வராகக் கொடி கம்பீரமாகப் பறந்து கொண்டிருந்தது.

நான்கு பட்சங்களுக்கு முன்னால் இதே அரண்மனைக் கோட்டை இருந்த கோலம் என்ன? இப்போது இருக்கும் நிலை என்ன? பல்லவப் பேரரசின் இரண்டாம் கோநகரில் அமைந்த புதிய அரண்மனை என்ற பெருமைப் பொலிவுடன் விளங்கிய அது இன்று அந்நிய நாட்டுக் கொடியைத் தன் தலையில் சுமந்து நிற்கும் ஓர் அவமானச் சின்னமாக — சளுக்கியப் படைவீரர்களின் இறுமாந்த கண்காணிப்புக் கிடையே — களையிழந்து இருண்டு காணப்பட்டது.

அரண்மனையைச் சார்ந்து பல்லவ அரச பரம்பரையின் குலதெய்வமான ஜேஷ்டாதேவி கோயில் ஒன்று அமைந்திருக்க, அதற்கு நேரெதிரே — கோட்டைக்கு வெளிப்புறம் சுமார் அரை குரோசத் தொலைவுக்கப்பால் — பச்சைப் பசேலென்ற பூஞ்சோலை யொன்றும், அதன் நடுவே ஓர் அழகிய மாளிகையும் இருப்பது தெரிந்தன. சமண சமயத் துறவிகளும் குரத்திகளும் தங்குவதற்காகப் பல்லவ அரசாங்கமே அமைத்துக் கொடுத்த இலவந்திகைப் பள்ளி என்னும் சமண மடம் அது.

ஒரு காலத்தில் அந்த இலவந்திகைப் பள்ளி சமணர்களின் சமயப் பிரசாரப் பெரு மன்றமாக விளங்கியதுண்டு. ஆனால், மகேந்திர வர்மனுக்குப் பின் தமிழகத்தில் சைவ சமயம் புத்தெழுச்சி பெற்றுத் தலைதூக்கிச் சமணத்தின் பேராதிக்கத்தைச் சிதைக்கத் தொடங்கியதுமே அங்கிருந்த சமணர்கள் மெல்ல மெல்லக் கலைந்து சென்று, கடைசியில் அது வெறும் பள்ளியாகப் பாழடைந்தே போயிற்று. அப்படிப் பாழ்பட்டுக் கிடந்த அந்த இலவந்திகைப் பள்ளிக்கு இன்று என்ன வந்து விட்டது? கவனிப்பாரற்றுக் காடு மண்டிப் போன பூந்தோட்டம், புன்னிருப்புச் சோலை எல்லாம் புத்தெழில் பெற்று விளங்க, செய்குன்றம், செய்குளம், செய்யருவி முதலானவை சீராக்கித் தூரெடுத்துத் தோன்ற, பள்ளி மாளிகையின் ஒவ்வொரு பகுதியும் அததற்குரிய பூம்





ஜெகசிற்பியன்

யானைகளும் சித்திரப் படிகளும் துப்புரவுடன் துலங்க — எங்கு நோக்கினும் ஒரு புதுக் கவர்ச்சியும் ஒரு புதிய சோபையுமாக அல்லவா காட்சியளிக்கிறது?

ஆமாம்; பெருவளநல்லூரிலிருந்து உறையூருக்குப் புறப்பட்ட ஆந்திர இளவரசி உத்தமசீலி, இந்தப் பல்லவபுரம் இலவந்திகைப் பள்ளியில் வந்து தங்கியிருப்பதால்தான் இத்தனை கலகலப்பாக அது விளங்குகிறது!

"வணக்கம், இளவரசியாரே! தாங்கள் வரச் சொல்லிக் கட்டளையிட்டதன் பேரில் வந்திருக்கிறேன்."

இலவந்திகைப் பள்ளியின் எதிரே, பிண்டி மரமொன்றைப் பின்னணியாகக் கொண்டு பாங்குற அமைந்திருந்த ஒற்றைத் தூண் குடை மண்டபத்தில் தன்னந் தனியாக அமர்ந்து ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்த இளவரசி உத்தமசீலி மெல்லத் தலை நிமிர்ந்தாள். சற்றுத் தொலைவில் ஒரு சளுக்கிய வீரன் வந்து பணிவுடன் கைகட்டி நின்று கொண்டிருந்தான்.

"என் பயணத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தாயிற்றா?"

"விடியற்போதிலிருந்தே நாங்கள் தயாராக இருக்கிறோம், தாயே! ஆனால், தளபதியாரிடமிருந்து இன்னமும் உத்தரவு வரவில்லை...."

"வில்வேலி இப்போது எங்கே இருக்கிறார்...?"

"அரண்மனைக் கோட்டையில் படையதிகாரிகளுடன் ஏதோ ஆலோசனை நடத்திக் கொண்டிருக்கிறார்."

உத்தமசீலி இதைக் கேட்டுச் சலிப்புடன் முகத்தைச் சுளித்தாள். தன் விஷயத்தில் சளுக்கியத் தளபதி அளவுக்கு அதிகமாகவே கவனம் செலுத்திக் காலத்தை வீணாக்குகிறார் என்று அவள் மனம் கசப்படைந்தது. நேற்று மாலை பல்லவபுரத்துக்கு வந்து சேர்ந்த அவளை, எதிர் சென்று வரவேற்ற வில்வேலி, இரவு நேரத்தில் மேற்கொண்டு பயணத்தைத் தொடர வேண்டாம் என்றும், பொழுது விடிந்ததும் உறையூருக்குப் புறப்பட்டுவிடலாம் என்றும் கூறி, இந்த இலவந்திகைப் பள்ளியில் தங்கியிருக்கச் செய்தார். ஆனால் விடிந்து இவ்வளவு நேரமாகியும் அவரிடமிருந்து ஒரு தகவலும் வரவில்லை.

சாந்தி மயமான அந்தச் சமண மடத்தில் தங்கியிருப்பதிலே அவளுக்கு எவ்வித சிரமமும் இல்லையென்றாலும், தன் பெரிய தந்தையாரைச் சந்திப்பதில் — அவரைச் சந்தித்தபின் தான் மேற்கொள்ள வேண்டிய மகத்தான காரியத்தில் — அநாவசியத் தாமதம் ஏற்படுவதை அவளால் சகித்துக் கொள்ள முடியவில்லை. மேலும், அந்த இலவந்திகைப் பள்ளியில் செய்யப்பட்டுள்ள பலத்த பாதுகாப்புக்களையும் விரிவான வசதிகளையும் பார்க்கும்போது, அவை ஒரு நாள் மட்டுமே தங்கிப் போவதற்காகச் செய்த ஏற்பாடுகளா, அல்லது பல நாட்கள் வரையில் இருக்க வேண்டுமென்பதற்காக முன்கூட்டியே திட்டமிட்டு நடத்தப்பெற்றிருக்கும் காரியங்களா என்ற சந்தேகம் எழவே, தான் ஏதோ ஒரு வகையில் அங்கு சிறைப்பட்டிருப்பது போன்ற மன உறுத்தலை அடைந்தாள் உத்தமசீலி.

"இளவரசியார் இன்னும் ஏதாவது கேட்க விரும்புகிறீர்களா?" — விநயமாக விளித்தான் சளுக்கிய வீரன்.

எங்கோ தன் பார்வையைச் செலுத்திக்கொண்டு மௌனமாயிருந்த உத்தமசீலி, "ஆமாம், இன்னொரு விஷயமும் கேட்க வேண்டும்" என்றவாறு அவன் பக்கம் திரும்பினாள்: "நேற்று நான் பெருவளநல்லூரிலிருந்து வரும்போது ஓரிடத்தில் சிவிகையை நிறுத்தி இளநீர் பருகினேனே, அந்த ஊரின் பெயர் என்ன?"

"ஆலம்பாக்கம், தாயே!"

"எனக்கு அங்கே இளநீர் கொண்டு வந்து கொடுத்த பெண் யாரென்று உனக்குத் தெரியுமா?"

"அவள் ஒரு யாதவ குலப் பெண் என்று கேள்விப்பட்டேன், அம்மா! இங்குள்ள நமது சளுக்கியப் படை வீரர்களுக்கு வெள்ளாடுகள் சஞ்சயம் பண்ணி வரும் இடையனொருவனுடைய மாமன் மகளாம். அந்த இடையனின் பெயர் ஆடுகோபதி இளங்காரிக்குடையான்."

"நான் அங்கிருந்து புறப்பட்டபின் அந்தப் பெண்ணிடமிருந்து ஓர் ஓலையைப் பெற்று வரும்படி உன்னைத் தானே அனுப்பினேன்?"

"ஆம், தாயே!"

"அவள் அந்த ஓலையை உன்னிடம் கொடுத்துவிட்டு என்ன சொன்னாள்?"

"அதைத் தங்களிடமிருந்து அவள் பெறவில்லை என்றும், யாரோ ஒரு கூலவாணிகன் கைதவறிப் போட்டுவிட்டுப் போனதை எடுத்து வைத்திருந்ததாகவும் கூறினாள்." — தன் மீது ஏதேனும் குற்றம் சுமத்துவிடுமோ என்று அஞ்சிய சளுக்கிய வீரன் தொடர்ந்து சொன்னான்: "அவள் கூறியது உண்மை என்றே எனக்குப் படுகிறது, தாயே! ஏனென்றால், அவ்வழியே தாங்கள் வருவதற்கு முன், கண்காணிப்புப் பணியில் ஈடுபட்



டிருந்த நானும் என் தோழன் ஒருவனும் அந்தப் பெண்ணின் இல்லத்துக்கு எதிரே யுள்ள கொன்றை மர நிழலில் இளைப்பாறு வதற்காக நின்றிருந்தோம். அப்போது ஒரு கூல வாணிகன் வந்து அவனிடம் நெல் அளந்த கிரயத்தைக் கேட்டு வெகு மூர்க்க மாய்ச் சண்டை போட்டுக் கொண்டிருந் ததை எங்கள் கண்ணாலேயே பார்த்தோம்.''

உத்தமசீலி அவனை வியப்புடன் ஏறிட்டு நோக்கினாள். பிறகு தனக்குள் மெல்லத் தலையசைத்தவாறு, ''சரி, நீ போகலாம்'' என்றாள். சளுக்கிய வீரன் அங்கிருந்து மெதுவாக நழுவினான்.

அந்தச் சம்பவங்களை நினைக்கநினைக்க அவளுக்கு ஆச்சரியமாகவே இருந்தது.

'சேதியக் கலேனூரின் இல்லத்திலிருந்து என்னுடைய சிவிகையைக் கடத்திச் சென்றவன்தான் பட்டோலைச் சுருளையும் கவர்ந்து போயிருக்க வேண்டும். சிவிகைதூக்கியான நாகோசுரனின் வாக்குமூலத்திலிருந்து அந்தச் சதிகாரன் ஓர் இடையனைப் போல் இருந்தான் என்று தெரிய வருகிறது. அப்படியானால், அவனுக்கும் நேற்று ஆலம்பாக்கத்தில் பார்த்த இடைப் பெண்ணுக்கும் ஏதாவது தொடர்பு இருக்குமோ? இல்லையானால், அவளிடம் என் பட்டோலை எப்படி வந்தது? யாரோ ஒரு கூலவாணிகன் கைதவறி விட்டுப் போனதை எடுத்து வைத்திருந்ததாக அவள் சொல்கிறாள். ஆந்திர மன்னரின் கைச்சாத்து இட்டுச் சளுக்கிய மாமன்னருக்கு எழுதப் பெற்ற ஓலை என்று தெரிந்து அதைக் கவர்ந்து சென்றவன், அத்தனை அஜாக்கிரதையாகப் போட்டு விட்டுப் போயிருப்பானா? ஆயினும் அவள் சொல்வதை நம்பாமலும் இருக்க முடியவில்லை. ஏனென்றால், களவாடப்பட்ட ஓலையைக் கையில் எடுத்துக்கொண்டே அந்தப் பெண் எனக்கு இளநீர் கொடுக்க வந்தாளே! உண்மையில் அவ்வோலையின் முக்கியத்துவத்தை அவள் அறிந்திருந்தால் அதைப் பயமின்றி என் கண்ணில் பட வைத்திருப்பாளா?'

தளபதி வில்வேலியிடம் இந்த விவரத்தைக் கூறி, அந்தப் பெண்ணைப் பிடித்து வந்து விசாரிக்கச் சொல்லலாமா என்று ஒருகணம் எண்ணினான் உத்தமசீலி. உடனே, 'அது கூடாது' என்பதுபோல் தலையசைத்துக் கொண்டான். காரணம், அந்த ஓலை காணாமற்போனதும், பிறகு அது கிடைத்து விட்டதும் வில்வேலிக்குத் தெரியாது. பல்லவ நாட்டுக்குத் தான் வந்திருக்கும் நோக்கத்தின் முக்கிய சேதிகள் அடங்கிய ஓலையையே பறி கொடுத்து விட்டவன் இங்கு என்ன பெரிய காரியத்தைச் சாதித்து விடுவான் என்று அவர் ஏளனமாக எண்ணி விடுவது மல்லாமல், அந்த ஆலம்பாக்கம் இடைப் பெண்ணைப் பிடித்து வந்து வீணை கெடுபிடிகள் செய்து விசாரிப்பதிலேயே நாட்களைக் கடத்தித் தான் வந்த காரியம் தாமதப்பட வைத்து விடுவார் என்பதாலேயே அவ்விஷயத்தை அவரிடம் அவன் சொல்லவில்லை. மேலும், நிச்சயமாகத் தெரியாத ஒரு விஷயத்தைக் கூறி நிரபராதியான பெண்ணொருத்தியை இம்சைக்குள்ளாக்கினால் நீக்க முடியாத பாவம் வந்து சேருமே என்று, அவனது சமண சமயத்தில் தோய்ந்த உள்ளம் எச்சரித்ததாலும் அதை அவன் வில்வேலியிடம் தெரிவிக்கத் துணிவு கொள்ளவில்லை.

'சுதந்திர மிழந்த ஒரு நாட்டின் மண்ணிலே அந்நியர் நடமாடுவது கத்தி மேல் நடப்பதைவிடக் கடினமானது போலும்' என்று தனக்குள் முணுமுணுத்துக் கொண்டே எழுந்து நின்ற அவன், அந்த ஒற்றைத் தூண் குடை மண்டபத்தை அசந்தர்ப்பமாக அண்ணாந்து நோக்கினான். மிகப் பெரிய வெண்தாமரைப் பூவொன்றைக் குப்புறக்



கவிழ்த்து நிறுத்தினாற்போல் விளங்கிய விதானத்தின் உள்ளே எழிலார்ந்த ஓவியங்கள் பல வரையப் பெற்றிருந்தன. கண்ணைக் கவரும் விதமாகக் காட்சியளித்த அவ்வோவியங்களைத் தன்னை மறந்து நின்று பார்த்துக் கொண்டிருந்தாள் உத்தமசீலி. அவற்றைப் பார்க்கப் பார்க்க அவளது கூம்பிச் சோர்ந்த உள்ளம் மகிழ்ச்சியுற்று மலர்ந்தது. வட்ட வடிவமான அந்த மண்டபத்தைச் சுற்றி வந்தபடி ஒவ்வொரு சித்திரமாகப் பார்த்துக்கொண்டிருந்த அவள், ஏதோ ஓர் இனிய நினைவால் கிளர்ச்சியுற்றவள் போல் தயங்கி நின்றாள். பொன் மலரெனப் புஷ்பித்த அவள் வதனத்தில் நாணத்தின் செம்மை படர தனினப் புன்னகையொன்று ஊர்ந்து ஒளிர்ந்தது. கூச்சத்துடன் உடலைக் குறுக்கி நெளித்துக் கொண்டே மண்டபத்தின் ஒற்றைத் தூணில் போய் ஒருக்களித்துச் சாய்ந்தாள்.

ஆமாம்; நேற்றுக் காலை சேதியக் கலைஞர் பரவாதிமல்லரின் கலைக் கூடத்தில், முற்றுப்பெறு ஓவியமொன்றின் எதிரே, மூனி குமாரன்போல் நின்றிருந்த நிலையில் பார்த்த அந்த வாலிபனைப் பற்றிய நினைவு இப்போது நெஞ்சில் நிழல் பரப்பி நின்றதால்தான் அப்படி நெக்குருகி நெகிழ்ந்து குழைந்தாள் அவள்!

'அவனைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் என் நெஞ்சு ஏன் இப்படிப் படபடத்து மகிழ்ச்சி வெள்ளத்தில் மிதக்கிறது? அந்த மகிழ்ச்சியின் தன்மையே ஒரு புது விதமாய், இத்தனை காலம் உணர்ந்தறியாத ஒரு விநோத அநுபவமாய் இருக்கிறதே! அவனைப் பற்றி நான் ஏன் நினைக்க வேண்டும்? அந்த நினைப்பிலே இத்தனை குதூகலச் சுகம் கொள்ள வேண்டும்? இல்லை, இல்லை; நானே அவனை நினைக்கவில்லை! அது தானே பிறந்து, தானே வளர்ந்து, தனக்குத் தானே ஏதேதோ இன்ப உணர்வுகளைத் தோற்றுவித்துக் கொள்கிறது! இதற்கு, நான் என்ன செய்வேன்?.... பெற்று வளர்த்த தந்தையாரைப் பிரிந்து வந்த இரண்டு பட்சகாலத்துக்குள் அவருடைய முகத் தோற்றம் இப்போது மங்கலாகவே என் மனக் கண்ணில் தெரிகிறது; ஆனால், மூன்றே முறை, மூன்று விநாடிகளுக்கும் குறைவாகவே பார்த்த அந்த வாலிபனின் மோகன உருவமோ என் கண் எதிரில் இதோ முழுமையாக, தெள்ளத் தெளிவாகத் தெரிகிறதே, இது என்ன விந்தை!'

அவள் நெட்டுயிர்த்துச் சோர்ந்தாள்.

'சேதியக் கலைஞரின் இல்லத்திலிருந்து புறப்படும்போது அவனிடம் ஏன் போய் விடை பெற்றுக்கொண்டு வந்தேன்? அதைப் பற்றி அவன் என்ன நினைப்பான்?'

தன் மீதே கோபப்பட்டுக் கொள்கிறவள்போல் முகத்தைச் சுளித்தவாறு தூணை விட்டு அப்படியே சரிந்து அமர்ந்த அவள், முட்டிக் கால்களில் முகத்தைப் புதைத்துக்கொண்டு ஓங்கிப் பெருமூச்சு விட்டாள்.

''இளவரசியாரின் தனிமையில் குறுக்கிடுவதற்காக மன்னிக்க வேண்டும்!''

சட்டென்று தலை நிமிர்ந்தாள் உத்தமசீலி. அங்கே, சளுக்கியத் தளபதி வில்வேலி புன்னகையுடன் வந்து நின்று கொண்டிருந்தார்.

## அத்தியாயம் இருபது

# ஓவியனுக்கு ஓலை!

''வாருங்கள், ஐயா! உங்கள் வருகையைத்தான் எதிர்பார்த்துக் காத்திருக்கிறேன்'' என்றவாறு மெள்ள எழுந்து நின்றாள் உத்தமசீலி.

வில்வேலியின் கூரிய கண்கள் அந்தக் குடை மண்டபத்தைச் சுற்றி ஒரு நோட்டம் விட்டுத் திரும்பின. ''இளவரசியாரிடம் முக்கியமான சேதியொன்றைத் தெரிவிக்க வந்திருக்கிறேன்'' என்று கலகலப்பான குரலில் கூறிக்கொண்டே மண்டபத்தில் அமர்ந்தார் தளபதி வில்வேலி.

உறையூர்ப் பயணத்தைத் தள்ளிப் போட ஏதோ சாக்குப்போக்குச் சொல்லப் போகிறார் என்று எண்ணிய உத்தமசீலி அவரை உற்று நோக்கினாள்.

''ஆமாம், அம்மணி! தங்கள் இலட்சிய விஜயத்தின் வெற்றிக்கு ஓர் உறுதியான அஸ்திவாரம் அமைத்துக் கொடுக்க வேண்டும் என்பதற்காக நாங்கள் ஏற்கனவே திட்டமிட்டு முயன்று வந்த காரியம் ஒன்று கைகூடிவிட்டதற்கான நற்சேதி இன்று கிடைத்திருக்கிறது.''

அவளுக்கு ஒன்றும் புரியவில்லை; மௌனமாக அவரைப் பார்த்தாள்.

''கங்க நாட்டின் சிரவணபெள்குளத்துச் சமண சங்கத் தலைவர் அகளங்க

அடிகளைப் பற்றி நீங்கள் கேள்விப்பட்டிருக்கிறீர்களா, இளவரசி?''

இந்தப் பெயரைக் கேட்டதும் தன்னையறியாமலே ஒரு பக்தி விநய உணர்ச்சியால் ஒடுக்கமுற்றுத் தலை நிமிர்ந்தாள் உத்தமசீலி. ''நான் அவரைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன், ஐயா! ஆருகதராக உள்ள ஒவ்வொருவரும் அந்த மகா ஞானியை அறியாமல் இருக்க முடியாது. கங்க மன்னர் பூவிக்கிரமனைச் சமண சமயத்தில் சேர்த்ததுமல்லாமல், கங்கநாட்டின் அரசாங்க மதமாகவே சமணத்தை ஆக்கிய பெருமை அவரைச் சார்ந்ததுதானே?''

''ஆம்; அம்மணி!'' என்று பலமாகத் தலையசைத்த வில்வேலி, ''அந்த அகளங்க அடிகளை நீங்கள் எப்போதாவது நேரில் சந்தித்திருக்கிறீர்களா?'' என்று கேட்டார்.

''எனக்கு அந்தப் பாக்கியம் இன்னமும் கிடைக்கவில்லை, ஐயா! என் தந்தையாருடன் ஒரு முறை சிரவண பெள்குளத்துக்கு விஜயம் செய்தபோது சங்கத்தின் விதிமுறைகளையொட்டிப் பெண் மகளான என்னை மடத்துக்குள் விட மறுத்து விட்டார்கள்.''

''கவலைப்படாதீர்கள், இளவரசி! நம் மதிப்புக்குரிய அகளங்க அடிகளே, உங்களை நேரில் சந்திக்க இங்கு வரப் போகிறார்...!''

வியப்பால் வெலவெலத்துப் போன உத்தமசீலி அவரைப் பரபரப்புடன் நோக்கினாள்.

''அது மட்டுமல்ல; உங்கள் இலட்சியக் கனவின் திட்டங்கள் அனைத்தையும் தாமே பொறுப்பேற்றுக் கொண்டு செயல்படுத்தி வைக்கவும் அவர் சம்மதம் தெரிவித்திருக்கிறார்.''

மகிழ்ச்சிப் பெருக்கால் பேச்சிழந்து மௌனமானாள் ஆந்திர இளவரசி. சற்று நேரம் கழித்து அவள், ''அந்தப் பொறுப்பை இங்குள்ள திரமிள சமண சங்கத் தலைவர் சமந்தபத்திரர் என்பவரிடம் ஒப்படைக்க வேண்டும் என்றல்லவா எண்ணிக் கொண்டிருக்கிறேன்....'' என்று இழுத்தாற் போல் கூறினாள்.

''நாங்களும் முதலில் அப்படித்தான் நினைத்தோம். ஆனால், பல்லவ நாட்டைச் சேர்ந்த தமிழ்ச் சமணத் தலைவர் ஒருவரை முற்றிலும் நம்பி விட முடியாதல்லவா? இன உணர்ச்சியானது சில சமயம் மத உணர்ச்சியையும் வென்றுவிடக் கூடியதாயிற்றே! எனவேதான் இந்த அருமையான யோசனையை உருவாக்கி, கங்கநாட்டு

அகளங்க அடிகளை இங்கு வரும்படி செய்திருக்கிறார் நம் விக்கிரமாதித்த வல்லபர். அவரைச் சகல மரியாதைகளுடனும் பாதுகாப்புடனும் அழைத்து வரும்படி, சற்று முன்தான் நமது படை வீரர்களில் பத்துப் பேரைச் சிரவணபெள்குளத்துக்கு அனுப்பிவைத்தேன்.''

''அப்படியானால் இப்போதே என் பெரிய தந்தையாரைச் சந்திக்கப் புறப்பட வேண்டும்; புறப்படுங்கள், ஐயா!'' என்று உற்சாகத்துடன் கூறிக்கொண்டே அவசரமாக எழுந்தான் உத்தமசீலி.

வில்வேலி மெல்லச் சிரித்தவாறு சொன்னார்: ''ஆந்திர இளவரசியாரைச் சந்திக்க அகளங்க அடிகள் இந்தப் பல்லவபுரத்துக்கே வரப் போகிறார் என்று சொன்னேனே, அதைக் கவனிக்கவில்லையா?''

''அதனால் இப்போது உறையூருக்குப் போக வேண்டாம் என்கிறீர்களா? என் பெரிய தந்தையாரைச் சந்திக்காமல் அகளங்க அடிகளை மட்டும் நான் பார்த்து என்ன பயன்?''

சளுக்கியத் தளபதி இதற்கு மறுமொழி ஏதும் கூறாமல் மோவாயை வருடியபடி யோசனையில் ஆழ்ந்தார். பிறகு தயக்கத்துடன் நிமிர்ந்து, ''இளவரசியார் சொல்வதும் சரிதான். ஆனால்....'' என்று இழுத்தார்.

''நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?'' என்று படபடத்த குரலில் புருவக் கொடிகளை மேலுயர்த்திக் கேட்டான் உத்தமசீலி.

''உங்களை உறையூருக்குத் தனியே அனுப்பக் கூடாதென்பது எங்கள் மன்னர்பிரானின் கட்டளை; ஆனால், எனக்கோ உங்களுடன் வர முடியாத சங்கட நிலை!''

''உறந்தைக்கு என்னை அழைத்துச் செல்லவே நீங்கள் காஞ்சியிலிருந்து வந்ததாக முன்பு சொன்னீர்களே?''

''அன்றைய நிலைமை வேறு; இன்று அது தலைகீழாக மாறி விட்டிருக்கிறது.''

''உறையூர்ச் சாலை முச்சந்தியிலும், பெருவளநல்லூர் சேதியக் கலைஞர் இல்லத்திலும் நடைபெற்ற சம்பவங்களை வைத்துத்தான் நீங்கள் இப்படிச் சொல்கிறீர்களா?''

''ஆமாம், அம்மணி! அந்தச் சம்பவங்களைச் சாதாரணமாக எண்ணித் தள்ளிவிட முடியாது. ஏனென்றால், நாங்கள் பெற்ற வெற்றியின் பலனை அநுபவிக்கா முன்பே எங்களை விரட்டியடித்துவிட வேண்டுமென்ற பெரிய இட்டத்துக்கு ஒரு சோதனையாகவே அவை நடத்தப்பட்டிருக்கின்றன என்று நான் எண்ணுகிறேன். போருக்குப் பின்





நெமிலி பஞ்சாயத்து யூனியனைச் சேர்ந்த திரு மூ. சண்முகத்துக்கும் சௌ. சாந்த குமாரிக்கும் காஞ்சீபுரத்தில் விமரிசையாகத் திருமணம் நடைபெற்றது.

லைப் இன்ஷ்யூரன்ஸ் ஜூனியர் அதிகாரி திரு கோபாலாச்சாரியாரின் புதல்வி சௌ. வனஜாவுக்கும் திரு ராமசாமிக்கும் கலியாணம் நடைபெற்றது.

எங்களுடைய புத்தி பலம், புஜபலம், படை பலம் எந்நிலையில் இருக்கின்றன என்று மதிப்பிட்டுப் பார்க்கவே அந்தச் சிறிய சதிக் காரியங்களைச் செய்திருக்கிறார்கள். போரில் தோல்வியுற்று அடிமையாகும் எந்த நாட்டிலும் முதலில் இம்மாதிரி சதிக் காரியங்கள் நடைபெறுவது சகஜம்தான் என்றாலும், அவற்றை முளையிலேயே கிள்ளி எறிவதில்தான் வெற்றிபெற்றோரின் உண்மையான வெற்றி அடங்கியிருக்கிறது. நாங்கள் இந்தப் பல்லவ நாட்டுப் படையெடுப்பில் அடைந்த மகத்தான வெற்றியின் கூடவே ஒரு மாபெரும் தலைவலியையும் சேர்த்து எடுத்துக் கொண்டு விட்டோம். அதாவது, எங்கள் ஜன்மப் பகைவனை பரமேசுவரவர்மன் எங்களிடமிருந்து தப்பித் தலைமறைவாகிவிட்ட விஷயத்தைத்தான் குறிப்பிடுகிறேன். அத்துடன், இவ்வூர் அரண்மனைக் கோட்டையில் சிறை வைக்கப்பட்டிருந்த பல்லவ இளவரசன் கோவிந்த வர்மனும் எப்படியோ நழுவி ஓடிவிட்டிருக்கிறான். இவ்விருவரையும் வெளியே விட்டு வைத்துவிட்டு நாங்கள் எப்படி நிம்மதியாக இருக்க முடியும்? இதை உத்தேசித்துத்தான் எங்கள் மாமன்னர் விக்கிரமாதித்தர், பல்லவபுரத்திலிருந்து உறையூருக்குத் தம் ஒலக்கத்தை மாற்றிக்கொண்டு போய்விட்டிருக்கிறார். இப்போது உங்களையும் நான் இங்குள்ள அரண்மனையில் தங்கியிருக்கச் செய்யாமல் இந்த இலவந்திகைப் பள்ளியில் இருத்தியிருப்பதற்கும் அதுவே தான் காரணம்.'' — கோபம் குமுறிக் கொந்தளிக்க இப்படிக் கூறி நிறுத்தினார் வில்வேலி.

தொரப்பாடி 'திரு ஏகாம்பரம் அவர்களின் புதல்வி சௌபாக்யவதி மகேஸ்வரிக்கும் திரு தாமோதரனுக்கும் சமீபத்தில் சிறப்பாகத் திருமணம் நடந்தது.

ஆமதாபாத் தமிழ்மன்றக் காரியதரிசியும் சிறுகதை எழுத்தாளர் திரு மாயா அவர்களின் சகோதரருமான திரு தியாகராஜன் சௌ. நீலாவை மணம் புரிந்து கொண்டார்.







ரெமிங்டன் ராண்ட் கம்பெனியின் பிராந்திய மானேஜர் திரு கே. எஸ். நாராயணன் அவர்களின் புதல்வி சௌ. ஜெயத்துக்கும் திரு ராமசேஷனுக்கும் விவாகம் நடந்தேறியது.



பாட்னா வருமான வரி டிரிப்யூனல் அங்கத்தினர் திரு என். ஸ்ரீனிவாசன் அவர்களின் புதல்வி சௌ. சத்யபாமாவைத் திரு நாகரத்தினம் மணம் புரிந்து கொண்டார்.

---

அதிர்ச்சி யடைந்த நிலையில் உட்கார்ந்திருந்த உத்தமசீலி, "அப்படியானால் என் பெரிய தந்தையாரை இப்போதைக்கு நான் சந்திக்க இயலாது என்கிறீர்களா?" என்று கவலை தோய்ந்த குரலில் கேட்டாள்.

"ஆம், இளவரசி! ஆனால் உங்களைப் பார்ப்பதற்காக விக்கிரமாதித்த வல்லபரே உறையூரிலிருந்து இங்கு வந்தாலும் வந்து விடுவார்!" என்று விஷமப் புன்னகையுடன் கூறினார் வில்வேலி.

சற்று நேரம் ஏதோ சிந்தனையிலிருந்த இளவரசி ஒரு புதிய முடிவுக்கு வந்தவள்போல் நிமிர்ந்து, "ஏனய்யா! தலை மறைவாகத் திரிந்து வரும் பரமேசுவரவர்மனைக் கண்டு பிடிப்பதற்காக நீங்கள் எடுத்துக் கொண்ட முயற்சிகள் என்ன ஆயின?" என்று மிகவும் அக்கறையாக வினவினாள்.

"நன்கு தேர்ச்சி பெற்ற நாலாயிரம் ஒற்றர்கள் கொண்ட ஒரு பெரும் படையே எங்களிடமிருந்தும், இன்று வரையில் அவனைப் பற்றி எவ்விதத் தகவலும் என் செவிக்கு எட்டவே இல்லை, அம்மணி! இதற்கு ஒரு முக்கிய காரணம் உண்டு. எங்களில் யாருமே அந்தப் பரமேசுவரவர்மனை நேரில் பார்த்தது இடையாது. அவனுடைய உருவத் தோற்றம் எப்படி இருக்கும் என்பதும் தெரியாது. இதுதான் அவனைக் கண்டுபிடிக்க முடியாமல் இருப்பதிலுள்ள பெரிய சங்கடம்."

உத்தமசீலியின் பனி மதிய வதனத்தில் ஓர் இளநகை படர்ந்தது. மிக மெல்லிய குரலில், "எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது...." என்று இழுத்தாள்.

"என்ன யோசனை? சொல்லுங்கள், இளவரசி?" என்று ஆவலும் அவசரமு

---

ஹிந்துஸ்தான் பப்ளிஸிட்டி அதிபர் திரு எஸ். நரசிம்மன் அவர்களின் புதல்வி சௌ. புஷ்பவல்லிக்கும் திரு நரசிம்மனுக்கும் விவாகம் சிறப்பாக நடந்தது.



சென்னை உயர் நீதிமன்ற அட்வகேட் திரு ஏ. சேஷன் அவர்களுக்கும் சௌபாக்யவதி சாமளாவுக்கும் சென்னையில் வெகு விமரிசையாக விவாகம் நடைபெற்றது.



மாகக் கேட்டுக் கொண்டே கழுத்தை நீட்டினார் வில்வேலி.

மனத்தில் இருப்பதை வாய்விட்டுச் சொல்லத் தயங்குபவள் போல் அதரங்களைக் குவித்துக் குழைத்த அவள், அந்தக் குடை மண்டபத்தின் விதானத்திலுள்ள வண்ணச் சித்திரங்களைப் பார்த்தவாறு சொன்னாள்: "தலைமறைவாயிருக்கும் பல்லவ மன்னன் பரமேசுவரவர்மனை நேரில் கண்ட ஓவியன் எவனாவது இந்த நாட்டில் இருக்க மாட்டானா? அப்படி ஒருவனைத் தேடிப் பிடித்து அவனுடைய உருவத்தை வரைந்து காட்டச் சொல்லித் தெரிந்து கொள்ளலாமே!"

வில்வேலி இதைக் கேட்டுக் கடகடவென்று நகைத்தார். "நல்ல யோசனை! ஆனால், அப்படி ஓர் ஓவியனைத் தேடிப் பிடிப்பதை விட, முயற் கொம்பைக் கொண்டு வருவது மிகவும் எளிது! இந்த நாட்டு மக்களின் — குறிப்பாக இந்நாட்டுக் கலைஞர்களின் — இராஜ பக்தியை அறியாமல் பேசும் ஆந்திர இளவரசியாருக்காக நான் அநுதாபப் படுகிறேன்!" என்று கூறி மீண்டும் சிரித்தார் அவர்.

உத்தமசீலியின் முகம் ஜிவ்வென்று சிறுத்துச் சிவந்தது. "எனக்கென்னவோ அது முடியும் என்றுதான் தோன்றுகிறது...." என்றாள் உறுதியான குரலில்.

குறும்புப் புன்னகையுடன் அவளைக் குனிந்து நோக்கிய தளபதி வில்வேலி, "அப்படியானால், அதற்கான ஒரு சிறு வழியை கட்டிக் காட்டினால் அதை நன்றியுடன் ஏற்பேன், அம்மணி!" என்று கூறினார்.

தலை கவிழ்ந்திருந்த உத்தமசீலி சட்டென்று நிமிர்ந்தாள். "பெருவளநல்லூர் சேதியக் கலைஞரின் இல்லத்தில் அவருடைய மாணாக்கர் ஒருவர் இருக்கிறார். அவர் ஒரு சிறந்த ஓவியர் என்று நினைக்கிறேன். பல்லவ மன்னனுடன் நெருங்கிப் பழகிய பரவாதி மல்லரின் மாணாக்கரானதால் அவர் அவனை நேரில் ஒரு முறையேனும் பார்த்திருக்கக் கூடும். அந்த ஓவியரை இங்கு அழைத்து வந்து, நான் சொன்னபடி முயன்று பாருங்களேன்!"

வில்வேலிக்கு ஒரே வியப்பாகிவிட்டது. பிரமித்த நிலையில் சிறிது நேரம் மௌனமாயிருந்த அவர் கரகரத்த குரலில், "இது நல்ல வழிதான்!.... ஆனால், பரவாதிமல்லர் தம் மாணாக்கரை நம்மிடம் அனுப்பச் சம்மதிக்க வேண்டுமே?" என்று இழுத்தார்.

"நாம் அந்த ஓவியரை எதற்காக அழைக்கிறோம் என்ற விவரத்தைக் கூறாமலே அனுப்பச் சொல்லிக் கேட்டால், அவர் மறுக்க மாட்டார் என்றே நினைக்கிறேன்."

உற்சாக மகிழ்ச்சியுடன் எழுந்து நின்ற வில்வேலி, "ஆந்திர இளவரசியாரின் அரசியல் ஞானத்தை இன்று தான் அறிந்தேன்! உங்கள் யோசனைப் படியே இன்று சேதியக் கலைஞருக்கு ஓலையொன்றை எழுதி அனுப்பி விடுகிறேன் அம்மணி!" என்று கூறிக் கொண்டே அங்கிருந்து விரைந்து நடந்தார்.

(தொடரும்)

---

## சண்டைக்கு முன்!



## cali—cloth

காலி-கிளாத் சீட்டேல் கடைகளில் கிடைக்கும்: பங்களூர். ஸில்வர் ஜுபிலி பார்க் ரோடு. கல்கத்தா. 1. விண்ட்ஸே ஸ்டிரீட்; 29. வாடர்லூ ஸ்டிரீட், பம்பாய். 129. நியூ சர்னி ரோடு. அஹமதாபாத். குபேர் நிவாஸ், ரிலீப் ரோடு; காலிகோ மில்ஸ் காம்பவுண்ட். மதராஸ். தன் பில்டிங். 175. மவுண்ட் ரோடு நியூ டில்லி. 6/30 — 31. அஜ்மல்கான் ரோடு. கரோல்பாக். காட்டன் அண்ட் கிளாத் பிரைவேட் லிட்., 302. கல்பாதேவி ரோடு. பம்பாய்-2. 524. சான்டஹர்ஸ்ட் ரோடு. பம்பாய்-4.

## காலி—கிளாத்





"அவளைக் கேட்காமலே தீபாவளிக்கு என் மனைவிக்கு ஒரு புடவை வாங்கி விட்டேன்."
"ஏன் மனைவியைக் கேட்டிருக்கக் கூடாதோ?"
"ஐயோ! அது எனக்குக் கட்டுபடி ஆகாது!"

ன் சார்! கால் நிஜார்'
'ருமையா! பன்மையா?"





"அத்திம்பேரை நாற்காலியை விட்டு எழுந்திருக்கச் சொல்லு...ஊ...ஊ..!"
"பெரியவாளை அப்படிச் சொல்லக் கூடாது!"
"பெரியவா மட்டும் நான் கொளுத்தி வச்ச வெடி மேல் உட்காரலாமா?"

ஏன் வயிற்றைப் பிடித்துக் கொண்டிருக்கிறீர்?"
அவங்க வீட்டில் சப்பாத்தி கொடுத்தாங்க! சாப்பிட்டேன்.
நீங்க முன்னே எழுந்து விட்டுச் சாப்பிட்டிருக்கணும்!"





"என்ன நீங்க கொஞ்ச நாளாக அவரை விட்டுப் பிரிவதேயில்லை? அவர் எங்கு போனாலும் நீங்களும் கூடவே போகிறீர்களே!"
"அவர் குடை வச்சின்டிருக்கிறார்!"

சாமா

**எப்படி வேலை செய்கிறது?**

# பந்து முனைப் பேனா

'பந்து முனைப் பேனா' என்றதும் உங்களில் ரொம்பப் பேர் அது ஏதோ ஓர் அதிசயப் பேனா என்றுதானே பயந்து போனீர்கள்? கழுத்தைத் திருகி மசியைக் கொட்டி அதன் வாயை மூடி எழுதுவதற்கு மல்லுக்கு நிற்கும் சாதாரண மையூற்றுப் பேனாவுக்குப் பதில் மை ஊற்றாமலே; எழுதும் முனையை வெளியே தள்ளியதும் எழுத ஆரம்பிக்கும் 'பால்பாயிண்ட் பென்'னைப் பற்றி உங்களுக்கெல்லாம் தெரிந்திருக்குமே? அந்தப் பேனாவுக்குத்தான் இது நேரான தமிழ் மொழிபெயர்ப்பு. உங்கள் அப்பாவிடமோ அண்ணனிடமோ இத்தகைய பேனாவை வாங்கி, 'டிக்' என்று அழுத்தி மளமளவென்று எழுதியிருக்கிறீர்களே தவிர அது எப்படி வேலை செய்கிறது; அது எதனால் எப்படி ஆக்கப்பட்டிருக்கிறது என்றெல்லாம் உனக்குத் தெரியாது. இல்லையா?



'பால் பாயிண்ட் பென்' என்பது சமீபத்தில் பிரபலமடைந்திருந்தாலும் 1880ம் வருஷமே இது தோன்றிவிட்டது. அமெரிக்க விமானப் படையினருக்கு வாயுமண்டலத்தின் மாற்றங்களுக்கு ஏற்ப மாறுபடும் குணமுடைய சாதாரணப் பேனாவுக்குப் பதிலாக மை கசியாத, ஆனால் எழுதும் ஒரு சாதனம் தேவைப்பட்டது. ஆகாய விமானத்தில் சாதாரணப் பேனாவுடன் பிரயாணம் செய்தால் பேனாவினுள்ளிருக்கும் மையெல்லாம் வெளியில் பொங்கி வந்துவிடும். அதற்காகத் தயாரிக்கப்பட்டதுதான் இந்தப் பந்து முனைப் பேனா.

சாதாரணப் பேனாவின் பாகங்கள் என்னென்ன அவை எப்படி வேலை செய்கின்றன என்று உனக்குத் தெரியும்.. பால்பாயிண்ட் பேனாவின் பாகங்களாவன: A. உடல். இது உலோகத்தாலோ, கெட்டியான அட்டையாலோ, ஒளி ஊடுருவிச் செல்லக் கூடிய பிளாஸ்டிக்கினாலோ ஆனது. B. மூடி: முனை உள்ளேயும் வெளியேயும் போய்வரும்படி இயங்காத மாதிரிகளுக்கு முனையைப் பாதுகாக்க இது பயன்படும். இதில் கிளிப்பும் இணைக்கப்பட்டிருக்கும். C. மெகானிசம் (இயந்திர அமைப்பு) இதனுள்ளே ஒரு ஸ்பிரிங் கிளிப்பினால் அழுத்தி வைக்கப்பட்டிருக்கும். எழுதும் முனையை வெளியே தள்ளவும் உள்ளுக்கு இழுக்கவும் இது பயன்படுகிறது. D. எழுதும் மை சேகரித்து வைத்துள்ள குழாய்: இது பேனாவின் நடுவில் இருக்கும். உலோகத்தினாலோ பாலிதீன் பிளாஸ்டிக் இவைகளினாலோ செய்யப்பட்டிருக்கும். E. பித்தளை முனை: இந்தப் பேனாவிலேயே முக்கியமான பாகம் இதுதான். இதன் முனையில் ஒரு சுழலும் இரும்புப் பந்து இணைக்கப்பட்டிருக்கிறது. சாதாரணமாக இதை உன்னால் தனியாகப் பார்க்க முடியாது. பித்தளை முனையின் உட்புறம் எப்படி அமைக்கப்பட்டிருக்கிறது என்பதையே படம் 2 விளக்குகிறது. அதில் 1. குழாயின் மைத் தேக்கத்திலிருந்து முனைக்கு மை வெளிவரும் மயிரிழை போன்ற இடைவெளி. 2. முனை. 3. இரும்புக் குண்டு (பந்து) படியும் குழிவு 4. இரும்புப் பந்து. 5. மயிரிழைக் குழாயிலிருந்து குழிவுக்கு மை செல்ல மிக நுண்ணிய வழி. 6. மை சேகரித்து வைக்கப்பட்டுள்ள குழாய். உருளும் தன்மையோடு கூடிய இரும்புக் குண்டு எப்படிக் கீழே விழாமல் நிற்கிறது என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? குழிவின் உதடு (விளிம்பு) பந்தின் நடு மையத்துக்கு அப்பால் (12/100 மில்லி மீட்டர் தூரத்தில்) அதைக் கவ்விப் பிடித்துக் கொண்டிருப்பதால் அது வெளியில் விழுந்து விடாமல் சுழன்று கொண்டிருக்கிறது. சாதாரணமாக முனையிலுள்ள இந்தப் பந்தின் குறுக்களவு ஒரு மில்லிமீட்டராகும். தேர்ந்தியாக எழுதும் பேனாக்களுக்கு இந்தப் பந்தின் குறுக்களவு 0.7 மில்லி மீட்டராக இருக்கும். இதற்கு உபயோகிக்கும் மை பிரத்தியேகமானது. காகிதத்தில் பரவாது. எழுதும் போது தொடர்பு அறுந்து போகாது. பந்துமுனைப் பேனாவில் மை தீர்ந்து போனால் புதிய மை நிரப்பிக்கொள்ள

# ஜூ. மந்திரக்காளி!

ரமணி மந்திரவாதியாக எப்போது மாறினான் என்று நினைக்கிறீர்களா? மாறுவதாவது? அவன் மந்திரவாதியேதான்! இதோ பாருங்கள் அவன் செய்வதை.

வாயகன்ற பாத்திரத்தில் நீரை நிரப்பிக் கொண்டு வந்தான். அதில் எரிந்த மத்தாப்புக் குச்சிகளில் (தீபாவளி ஸீஸனல்லவா?) பத்துப் பன்னிரண்டை மிதக்க விட்டான். அவைகள் கூடிக் குவிந்திருக்கும் போது தனது ஆள்காட்டி விரலால் நீரைத் தொட்டான். அவ்வளவுதான் குச்சிகளெல்லாம் விருட்டென்று ஓரத்துக்கு ஒதுங்கி ஓடின. பிறகு தனது பாம்பு விரலால் தொட்டான். ஓடி ஒதுங்கிய குச்சிகள் மெள்ள மெள்ள அவன் விரலை நோக்கி நகர்ந்து வந்தன. நீ வியப்பால் திறந்த வாய் மூடாமல் இதைப் பார்த்துக் கொண்டிருந்தாய் அல்லவா? ரமணியின் கை விரல்களில் உள்ள மந்திர சக்தி என்ன தெரியுமா? (அவனுக்குத் தெரிய வேண்டாம். உங்களுக்குச் சொல்லிக் கொடுத்ததாகத் தெரிந்தால் என்னைக் கோபித்துக் கொள்ளுவான். அவன் ஆள்காட்டி விரலில் சோப்புக் குழம்பையும், பாம்பு விரலில் சர்க்கரைப் பாகையும் தடவிக் கொண்டிருக்கிறான். அவைகளின் சக்திதான் அது.)

## என்ன விநோதம் பார்!

'அஸல்' என்று ஒருவகைப் பறவை அமெரிக்காவில் காணப்படுகிறது. இதற்கு நீர் மூழ்கிப் பறவை என்றும் பெயர். மற்றப் பறவைகளால் செய்ய முடியாத ஒரு சாகஸத்தை இது செய்கிறது. இந்தப் பறவையினால் நீருக்குள் பறக்க முடியும். நீரின் அடியிலே இதனால் நடந்து செல்லவும் முடியும். தனது ஆகாரத்தை நீருக்குள் மூழ்கிச் சாவதானமாக நடந்து பறந்து சென்று தேடிக் கொள்ளுகிறது. நீர்க் கசிவுள்ள குகைகளிலேதான் இது தனது கூட்டை அமைத்துக் கொள்ளுகிறது. அஸலினால் நீந்த முடியாது. இதன் விரல்கள் தோலினால் மூடப்பட்டிருக்கவில்லை.

முடியாது. முனையோடு கூடிய குழாயையேதான் வாங்கிச் செருகிக் கொள்ள வேண்டும். ஒரு பந்துமுனைப் பேனாவில் உள்ள மையினால் ஒன்றிலிருந்து இரண்டு மைல் நீளம் வரை கோடு கிழிக்கலாம். எழுதும் போதே காயும் தன்மையுடைய இறுகிய மையானதால் பிளாட்டிங் பேப்பர் தேவையில்லை. இது சாதாரணப் பேனாவைவிட வழ வழப்பாகவும் வேகமாகவும் எழுதும். காரணம், நிப்பைப் போல் காகிதத்தோடு உராயும் தன்மை (பிரிக்ஷன்) இதற்கு கிடையாது. உருளும் தன்மையுடைய பந்து முனையாதலால் வேகமாகக் காகிதத்தில் வழுக்கியபடி எழுதும். இந்தப் பேனாவில் மாறுபட்ட அகலமுடைய கோடுகளைக் கிழிக்க முடியாது. இதனால் எழுதும் போது உன் கைகளுக்குத் தானாகவே வேகம் வந்துவிடும். ஏனென்றால் இதனால் எழுதக் கையின் அழுத்தம் தேவை. அதுவும் ஒரே சீராக இருக்க வேண்டும். ஆகவே வேகமாக எழுத வேண்டி வரும்.



எங்கே, இப்போது பால்பாயிண்ட் பேனாவின் முனையை உற்றுப் பார். பித்தளை உதட்டை அடுத்துச் சிறிய குண்டு போன்ற இரும்புப் பந்து இருப்பது தெரிகிறதா? நிதானமாகக் காகிதத்தில் அழுத்தி நகர்த்திப் பார். இப்போது அந்தப் பந்து உருளுவதைக் கூட உன் கைகள் உணரும்.

---

உலக விளையாட்டு

## லா பால்மா

இது பொலிவியா நாட்டு இந்தியர்களிடையே மிகப் பிரபலமான விளையாட்டு. குரங்கின் வால் எலும்பைக் கொண்டு இந்த விளையாட்டை இவர்கள் விளையாடுகிறார்கள். (அதற்குப் பதில் நாம் ஒரு குச்சியை உபயோகிக்கலாமே) குச்சியைத் தரையில் முளை போல ஓர் இடத்தில் நிறுத்த வேண்டும். அதிலிருந்து மூன்று கெஜத்துக்கு ஒரு கோடாக ஆறு கோடுகள் வரைந்து கொள்ள வேண்டும். அப்படியானால் முளைக்குச்சியிலிருந்து பதினெட்டுக் கெஜத்துக்கு அப்பால் ஆறாவது கோடு இருக்கும். (படம்)

இரண்டோ அதற்கு மேற்பட்டவர்களோ இந்த விளையாட்டில் கலந்து கொள்ளலாம். முதலில் ஒருவர் முதல் கோட்டில் நின்றபடி ஒரு கவண் கல்லைக் கொண்டு முளைக் குச்சியைக் குறிபார்த்து அடிக்க வேண்டும். கவண் கல்லைச் சுழற்றி ஆடத் தெரியாதவர்கள் வெறுமனே கற்களைக் கொண்டு (கோலி ஆட்டம் போல) முளையில் அடிக்கலாம். முதல் கோட்டில் நின்று குச்சிமீது கல்லை எறிந்து வெற்றி கண்டால் அடுத்த கோட்டுக்குப் போய் நின்று கல்லால் அடிக்க வேண்டும். குறி தவறினால் ஆட்டமிழந்ததாகக் கருதி அடுத்தவன் முயற்சி செய்ய வேண்டும். ஆறு கோடுகளிலும் நின்று குச்சியைக் குறி பார்த்து அடிப்பதில் யார் முதலில் வருகிறார்களோ அவர்களுக்கே ஜெயம். கவண் கல்லால் விளையாடுவதில் வல்லவனாக இருந்தால் இரண்டு மூன்று கோடுகளை ஒரே சமயத்தில் தாண்டி நின்றும் குறி பார்த்து வீசி வெற்றி பெறலாம். விளையாடிப் பார்த்தால் தான் லா பால்மாவின் சுவாரசியம் தெரியும். எங்கே கவண் கல் தயாராகி விட்டதா?





கற்கால மனிதர்களைப் பற்றிச் சமூகப் பாடத்தில் படித்திருக்கிறீர்களா இல்லையா? அத்தகைய கற்கால மனிதர்களை இன்றைய நாகரிக யுகத்திலும் காண வேண்டுமானால் ஆஸ்திரேலியாவுக்குப் போக வேண்டும். மேலே இருப்பது ஆஸ்திரேலியாவில் வாழும் பூர்வீகக் குடிகளில் ஒருவர்தான்.

# பூமி!

சூரியனைச் சுற்றித்தான் கிரகங்களெல்லாம் சுழன்று வருகின்றன என்று உனக்குத் தெரியும். அப்படிச் சுழலும் கிரகங்களுள் பூமியும் ஒன்று. நமது பூமியைப் பற்றிய சில ரசமான விஷயங் களை இன்று உங்களுக்குச் சொல்லப் போகிறேன். விநாடிக்கு பதினெட்டரை மைல் வேகத்தில், 2,900,000,000 ஜனங்களுடன் வான வெளி யில் பிரயாணம் செய்யும் ஒரு 'ராக்கெட்' இந் தப் பூமி என்று சொல்லலாம். தன்னைச் சுற்றி ஒன்பது கிரகங்களைச் சுழல வைக்கும் சூரியன் தானும் சுழலுகிறது. வான மண்டலத்திலே சூரியனும் ஒரு சிறிய நட்சத்திரம்தான் என்ற உண்மை உனக்குத் தெரியாது. பூமியின் சுற்றளவு 24,901,96 மைல்கள். துருவப் பிரதேசங்களில் சற்று அமுங்கி இருப்பதால் இதன் குறுக்களவில் 26.7 மைல்கள் வித்தியாசப்படுகிறது. பூமி யின் குறுக்களவு 7926.28 மைல்கள். உலகத்தின் பரப்பளவு, 200 மிலியன் சதுர மைல்கள். உலகத்தின் வயது 1500 - லிருந்து 3,000 மிலியன் வருஷங்களுக்குள்ளாகும்.

பூமியின் அமைப்பை வெங்காயத்தோடு ஒப்பிட லாம். அதன் நடுமையத்திலிருந்து மேல் பரப்பு வரை அடுக்கடுக்காக அதன் நிலையை விளக்க லாமா? இங்குள்ள படம் பூமியின் வெட்டுத் தோற்றத்தைத்தான் குறிப்பிடுகிறது. நடு மையத்தில் உலோகக் குழம்பும் அதைச் சுற்றி உறுதியான பாறைகளும், மேலே கனமற்ற பாறைகளும் மண்ணும் கொண்டு ஆனதுதான் பூமி. பூமியிலிருந்து 20 மைல் வரை வான மண்டலத்தில் ஓஸோன் என்ற ஒருவகை வாயு நம்மைச் சூரியனிலிருந்து வரும் அல்ட்ரா வயலெட் கிரணங்களிலிருந்து காப்பாற்றுகிறது. அந்தக் கிரணங்கள் நேரடியாகப் பூமியின் மீது விழுமானால் உலகத்தில் ஒரு ஜீவ ராசி கூட இருக் காது. எல்லாம் சாம்பல்தான்!

பூமியின் அடுக்குகளைப் பற்றி மனிதனின் அறிவுக்கு எட்டியதெல்லாம் மிகக் கொஞ்சம் தான். பூமியை இதுவரை மனிதன் ஐந்து மைல் ஆழத்துக்கு மேல் தோண்டி விடவில்லை. ஒரு பெரிய யானையை ஒரு கொசு கடித்தால் எப் படியோ அது போன்றதுதான் இது. 4000 மைல்



ஆழமுள்ள பூமியின் நடு மையம் எங்கே, வெறும் ஐந்து மைல் எங்கே?

அப்படியானால் பூமியின் உள் அமைப்பைப் பற்றி எப்படி மனிதன் அறிந்தான் என்று கேட் கத் தோன்றுகிறதல்லவா? பூமி அதிர்ச்சியின் வேகத்தைக் கொண்டும், பூமியின் கனத்தை உத்தேசமாகக் கணக்கிட்டுக் கண்டு பிடித்திருக் கிறார்களே அதிலிருந்தும் பூமியின் நடு மையத் தில் நிக்கல் இரும்பு, குழம்பாகவோ அல்லது ஆவி ரூபமாகவோ இருப்பதாக ஊகிக்கிறார்கள். இந்த உலோகக் குழம்புக்கு மேலே உறுதியான பாறை (கிரானைட்). துருவப் பிரதேசத்தில் அடியில் நீரும் மேலே உறைந்த பனிக் கட்டி யும் இருக்குமே அப்படி.

உலக வெங்காயத்தின் பகுதிகள் விண்டு போகாமல் இணைத்து வைத்திருப்பது எது? ஆகர் ஷணம் என்ற அதிசயமான சக்திதான். உலோ கமோ, கல்லோ, தண்ணீரோ, காற்றோ மற் றொன்றைத் தன் வசம் இழுத்துக் கொள்ளும் சக்திக்குத்தான் ஆகர்ஷணம் என்று பெயர். அதிக அளவிலும் அருகிலும் எது இருக்

இழுக்கும். ஒரு பந்தை ஆகாயத்தில் தூக்கி எறிந்தால் அது பூமியை நோக்கி வருகிறது. இது பூமியினிடமுள்ள ஆகர்ஷண சக்தியால் தான் என்று உனக்குத் தெரியும். இந்த ஆகர்ஷணத்தி னால்தான் உலகத்தில் நாம் நடக்கிறோம், ஓடு கிறோம், கட்டிய வீடுகள் ஆடாமல் அசையாமல் இருக்கின்றன. இந்த உலகத்துக்கு இவ்வித சக்தி இல்லா விட்டால் யாருமே எதுவுமே இங்கு நிலை பெற்றிருக்க முடியாது. எல்லாரும் ஜல வாயு அடைத்த பலூனைப் போல வான வெளியில் மிதந்து கொண்டிருப்போம். இந்த ஆகர்ஷண சக்தி பூமிக்கு மட்டுமல்ல. எல்லாக் கிரகங்களுக் குமே உண்டு. ஆனால் ஆகர்ஷிக்கும் அளவில் வித்தியாசம் இருக்கும். கிரகங்கள் ஒன்றை ஒன்று தம் பக்கம் இழுத்தபடி சுற்றுவதால் தான் உலகில் எல்லாமே ஒழுங்காக இயங்கி வருகிறது. பௌர்ணமியின் போது கடல் நீர் பொங்குவது ஏன் தெரியுமா? அப்போது சந்திரன் பூமிக்கு மிக அருகே வருகிறது. அதன் ஆகர்ஷண சக்தியால் இழுக்கப்பட்டுத்தான் கடல் நீர் பொங்குகிறது. சூரியனுக்கு இந்த ஆகர்ஷண சக்தி மிக அதிகம். அதனால்தான் அது எல்லாக் கிரகங்களையும் தன் னிடம் ஆகர்ஷித்தபடி சுழலுகிறது.

பூமியின் பிறப்பைப் பற்றி விஞ்ஞானிக ளிடையே கருத்து வேற்றுமை இருக்கிறது. சூரியனின் சுழற்சியிலிருந்து விடுபட்ட சூடான வாயுவோ அல்லது குழம்போதான் இந்தக் கிரகங்கள். பின்னால் இந்த வாயு, அல்லது குழம்பு குளிர்ந்து கெட்டிப்பட்டுக் கிரகங்களாகி இருக்கின்றன என்பது ஒருசாராரின் வாதம். மற்றொரு சாரார் புழுதியும் வாயுவும் கலந்து உருவானதுதான் பூமி என்கிறார்கள்.

விண் வெளிப் பிரயாணி வான வீதியிலே பாய்ந்து கொண்டிருக்கும் போது, தான் விட்டு வந்த உலகத்தைத் திரும்பிப் பார்த்தால் அதற்கு அந்தப் பெயர் தவறாக இடப்பட்டிருக்கிறது என்றுதான் நினைப்பான். செவ்வாய்க் கிரகத்தில் மனிதர்கள் இருந்து, அவர்களில் வான வெளி ஆராய்ச்சியாளர் இருப்பார்களானால் நமது பூமியை அவர்கள் தண்ணீர்க் கிரகம் என்றுதான் குறிப்பிடுவார்கள். உலகில் மூன்றில் ஒரு பாகத் துக்கும் குறைவாகத்தானே பூமி. மற்றதெல்

# கால்கேட்டின் மூலம் நாள் முழுவதும் வாய் துர்நாற்றத்தை அகற்றி பற்கள் சொத்தையாவதையும் தடுங்கள்!




ஏனெனில், ஒரே தேய்ப்பில் கால்கேட் டென்டல் கிரீம் துர் நாற்றத்தையும் சொத்தையையும் உண்டாக்கும் கிருமிகளில் 85 சத விகிதத்தை ஒழிக்கிறது.

கால்கேட் உடனடியாக வாய் துர் நாற்றத்தை 10ல் 7 சந்தர்ப்பங்களில் அகற்றுகிறது என்பதையும், உணவு சாப்பிட்டவுடன் கால்கேட்டினால் பற்களைத் துலக்கும் முறையால், பற்பசை வரலாற்றிலேயே இதுவரை கண்டிராத பெருமளவில், ஏராளமானவர்களுக்குச் சொத்தை ஒழிக்கப்படுகிறது என்பதையும் விஞ்ஞான பரிட்சைகள் நிரூபித்துள்ளன: இந்த சாதனை கால்கேட் ஒன்றுக்குத்தான் உண்டு!

சாப்பிட்டவுடன் வாயை கொப்பளித்தால் மட்டும் போதாது—சாப்பிட்டவுடன் வழக்கமாக கால்கேட் டென்டல் கிரீமினால் உங்கள் பற்களை நன்றாகத் துலக்குங்கள். இதன் வீச்சும், ஊடுருவும் தன்மையுமுள்ள நுரை பற்களின் இடைவெளிகளிலே புகுந்து, சொத்தைக்கும், துர் நாற்றத்துக்கும் காரணமாக இருக்கும் அழுகிய பதார்த்த அணுக்களை அகற்றுகிறது.

கால்கேட்டில் சேர்த்திருக்கும் நூதன நறுமணத்திற்காக, குழந்தைகள் அதனாலேயே பல் துலக்க விரும்புகிறார்கள்.

வழக்கமாக கால்கேட் உபயோகித்தால், அது:

- ✔ துர் நாற்றத்தை அகற்றுகிறது
- ✔ சொத்தையைத் தடுக்கிறது
- ✔ பற்களை அதி வெண்மையாக வைத்திருக்கிறது




நீங்கள் பற்பொடியை விரும்பினால், இந்த பலன்கள் அனைத்தையும் கால்கேட் டூத் பவுடர் மூலம் அடையலாம். ஒரு டப்பி பல மாதங்களுக்கு வரும்.

**பரிசுத்தத்திற்கும், வாயில் நறுமணம் கமழவும், வெண்ணிற பற்களைப் பெறவும் உலகத்திலேயே பெரும்பாலான மக்கள் மற்றெல்லா பற்பசைகளையும் விட கால்கேட்டையே பெரிதும் விரும்புகிறார்கள்.**

# ஹரி ஹரர், ஹரி ஹரேசுவரர்!

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

வட ஆர்க்காடு மாவட்டத்திலே காவேரிப்பாக்கம் என்னும் ஊருக்குத் தென்புறத்திலே ஓர் ஊர். அந்த ஊர் திருப்பாற்கடல் என்று விளங்குகிறது. இந்த ஊரில் கோயில் கொண்டிருப்பவன் பிரசன்ன வேங்கடேசன். அந்தப் பிரசன்ன வேங்கடேசனைப் பற்றி ஒரு சுவையான கதை. கதை இதுதான்.

அந்தப் பழைய காலத்திலே புண்டரீக மகரிஷி என்று ஒரு முனிவர். அவரது வழிபடு தெய்வம் மகாவிஷ்ணு. அது காரணமாக அந்தப் பரந்தாமனைத் தவிர வேறு தெய்வங்களைக் கண்ணெடுத்தும் பார்க்க மாட்டார். அந்தத் தெய்வங்கள் இருக்கும் திசைக்கே செல்ல மாட்டார். இந்தப் புண்டரீகர் காஞ்சியில் உள்ள அத்திகிரி அருளாளன், சொன்ன வண்ணம் செய்த பெருமாள், அஷ்டபுயகரர், உலகளந்தார், பச்சை வண்ணர், பவள வண்ணர் முதலிய பெருமாள்களை யெல்லாம் வந்தித்து வணங்கிவிட்டு மேற்கு நோக்கி நடந்து வருகிற போது இந்தத் திருப்பாற்கடல் பக்கமாக வந்திருக்கிறார். பெயரைக் கேட்டதுமே அங்கு அரங்கநாதன் பள்ளி கொண்டிருப்பான், அவனையும் வணங்கி விட்டு மேற்செல்லுவோமே என்று ஊருக்குள் சென்றிருக்கிறார். அப்போது ஒரு கோயில் அவர் கண்ணில் பட்டிருக்கிறது. அக்கோயில் வாயிலில் நந்தி இருந்திருக்கிறது. மதில் சுவர்களிலும் நந்தியின் வடிவங்கள் பல இருந்திருக்கின்றன. இவற்றைக் கண்டதும் 'அடடா! இது சிவன் கோயில் அல்லவா? இந்தப் பொல்லாத சிவன் ஊர்ப் பெயரைத் திருப்பாற்கடல் என்று வைத்துக் கொண்டல்லவோ நம்மை ஏமாற்றியிருக்கிறான். நானா ஏமாறுகிறவன்? இவனை ஏறெடுத்துப் பார்க்காமலேயே திரும்பி விடுகிறேன்' என்று வந்த வழியே திரும்பியிருக்கிறார். இவர் செய்வது தவறு என்பதை எடுத்துக் காட்டி அவரைத் திருத்தவும், உலகுக்கு ஓர் உண்மையை எடுத்துக் காட்டவும், விஷ்ணுவே ஒரு கிழ வேதியர் வடிவில் வந்து புண்டரீகரை வழி மறித்து, 'சுவாமி! தரிசனத்துக்கு வந்தவர் கோயிலுக்குள் நுழையாமலேயே திரும்பி விட்டீர்களே, காரணம் என்ன?' என்று கேட்டிருக்கிறார். புண்டரீகரும், 'நான் இது பெருமாள்கோயில் என்று நினைத்து இங்கு வந்து விட்டேன், பார்த்தால் அது சிவன் கோயிலாக இருக்கிறது. நானோ பெருமாளைத்தவிர வேறு யாரையும் வணங்குவதில்லை என்ற வைராக்கியமுடையவன். ஆதலால்தான் திரும்புகிறேன்' என்று சொல்லியிருக்கிறார். கிழவேதியரோ, 'என்ன சுவாமி! இது சிவன் கோயில் என்று யார் சொன்னது? நான் அங்கு சென்று தரிசனம் செய்து விட்டுத் தானே திரும்பி வருகிறேன். அங்கு கோயில் கொண்டிருப்பவன் நீர் வணங்கும் பரந்தாமனே. வாரும் என்னுடன்' என்று அழைத்திருக்கிறார். புண்டரீகருக்கோ ஒன்றும் சொல்ல முடியவில்லை. கிழ வேதியரை முழுதும் நம்பவும் அவர் தயாராக இல்லை. ஆதலால் கண்ணை ஒரு துண்டால் கட்டிக் கொண்டு கிழ வேதியர் கையைப் பிடித்தவண்ணம் கோயிலுள் நடந்திருக்கிறார். கோயிலின் கருவறை சென்றதும், கிழவேதியராக வந்த விஷ்ணுவே அவசரம் அவசரமாக அங்குள்ள லிங்க வடிவத்தை ஏந்தி நிற்கும் ஆவுடையார் பேரிலேயே ஏறி நின்று கொள்கிறார். புண்டரீகரும் கண் கட்டை அவிழ்க்காமலேயே அங்குள்ள வடிவைத் தம் கையாலேயே தடவிப் பார்க்கிறார். புண்டரீகரது கரங்களுக்குப் பரந்தாமன் அணிந்திருக்கும் ஆபரணங்கள் தெரிகின்றன; கையில் பிடித்திருக்கும் கதை தெரிகிறது. கைகளிலே ஏந்தியுள்ள சங்கு சக்கரம் தெரிகின்றன. இடையில் உடுத்திய பீதாம்பரம் தெரிகிறது. இத்தனையையும் தொட்டுத் தொட்டுப் பார்த்து அங்கிருப்பவர் மகா விஷ்ணுவே என்று உறுதிப் படுத்திக் கொண்டு கண் கட்டை அவிழ்க்கிறார். அப்போது தெரிகிறது அங்கு கோயில் கொண்டிருப்பவர் லிங்க வடிவில் உள்ள சிவனே என்றும் அவருக்கு உரிய பீடமாகிய ஆவுடையார் பேரிலே தான் இந்தப் பிரசன்ன வேங்கடேசன் ஏறி நின்றான் என்றும். ஆம்! உண்மையிலே அவரது கண் அன்றுதான் திறக்கப்படுகிறது. சிவன் வேறு விஷ்ணு வேறு அல்ல. இருவரும் ஒருவரே என்ற உண்மையும் விளங்குகிறது புண்டரீகருக்கு.



ஹரிஹரன் கோயில்

இதற்கு எதிர்க்கதை ஒன்றும் இருக்கிறது. அந்தக் கதை இது தான்: பண்டரிபுரத்திலே ஒரு செல்வச் சீமான். அவருக்கு நீண்ட

நாட்களாய்ப் புத்திரப்பேறு இல்லை. அதற்காகப் பாண்டுரங்கனை வழிபட்டு வந்திருக்கிறார். தமக்கு ஓர் ஆண் மகன் பிறந்தால் பாண்டுரங்கனுக்கு ஒரு தங்க அரைஞாண் பூட்டுவதாகப் பிரார்த்தனையே செய்திருக்கிறார். அவர் பிரார்த்தனையை நிறைவேற்றி வைத்திருக்கிறான் பாண்டுரங்கன். தம்முடைய பிரார்த்தனையை நிறைவேற்ற, அந்த ஊரில் தங்க வேலையில் பிரபலமாயிருந்த நரஹரி சோனார் என்னும் பக்தரை அணுகியிருக்கிறார் பிரபு. அந்தப் பக்தரோ நல்ல சிவபக்தர்; புண்டரீகர் எப்படிப் பெருமாளைத் தவிர வேறு தெய்வத்தைக் கண்ணெடுத்தும் பார்க்க மாட்டேன் என்ற வைராக்கியத்தில் இருந்தாரோ அதைப்போல் இவர் சிவனைத் தவிர வேறு தெய்வத்தைக் காணக் கூடாதென்னும்வைராக்கியத்தில் இருக்கிறவர். ஆகவே அவர் பாண்டுரங்கனது இடுப்பின் அளவை யாராவது எடுத்துக் கொணர்ந்து தந்தால்தான் அரைஞாண்செய்து தருவதாகச் சொல்கிறார். செல்வச்சீமானும் எப்படியாவது அரைஞாண் செய்து தந்தால் போதும் என்று பாண்டுரங்கனது இடையின் அளவை எடுத்து வந்து கொடுக்கிறார். நரஹரி சோனாரும் அரைஞாண் செய்து கொடுக்கிறார். அதை எடுத்துக் கொண்டு பாண்டுரங்கன் சந்நிதிக்குச் சென்றால் அது அளவில் குறைகிறது. திரும்பவும் அளவு எடுத்து மறுபடியும் அரைஞாண் செய்யச் சொல்கிறார். இந்தத் தடவையோ அரைஞாண் மிகவும் பெரிதாகி விடுகிறது. கடைசியில் தனவந்தர், நரஹரி சோனாரை 'நீர் எப்படியாவது கோயிலுக்கு வந்து, நீரே அளவு எடுத்துச் செய்து தர வேண்டும்' என்கிறார். என்ன சங்கடம்! இவரோ பாண்டுரங்கனைக் கண்ணால் பார்க்கக் கூடாது என்ற வைராக்கிய முடையவர். கடைசியில் தனவந்தர் விருப்பப்படியே தம் கண்களைக் கட்டிக்கொண்டு கோயிலுள் நுழைந்து பாண்டுரங்கனது இடையை அளவெடுக்கிறார். தடவித் தடவிப் பார்க்கிறார். என்ன அதிசயம்; நரஹரி சோனார் கைகளுக்கு அப்போது தட்டுப்பட்டவன் ஜடா மகுடதாரியான சிவபெருமானே. இடையிலே அணிந்த புலித்தோலும், பாம்பணியும், கைகளில் ஏந்திய மான், மழு, திரிசூலம் இவைகளே தட்டுப்படுகின்றன.- இவற்றைத் தெரிந்தவுடன் நரஹரி சோனார் கண்களை அவிழ்த்துப் பார்க்கிறார். அங்கு பழைய பாண்டுரங்கனே நிற்கிறான். கைகளுக்குத் தட்டுப்பட்ட பரமசிவனைக் காணோம். உண்மை விளங்குகிறது நரஹரி சோனாருக்கு: விஷ்ணு வேறு சிவன் வேறு அல்ல, இருவரும் ஒருவரே என்று.

இந்த இரண்டு கதைகளும் விளக்கும் உண்மை நமக்கும் விளங்கி விடுகிறது. இப்போது பக்தர்களுக்குள்ளே எத்தனைதான் சண்டை யிருந்தாலும், இந்த சிவனும் விஷ்ணுவும் யாதொரு பேதமும் இல்லாமல், ஒருவரில் ஒருவர் இணைந்து நிற்கும் இயல்பு பெற்றவர்களாகிறார்கள். இப்படி இணைந்து நிற்கும் கோலத்தைத் தானே சங்கர நாரணர் என்றும்



பக்கத்தில் உள்ள அம்பிகை கோயில்

ஹரிஹரன் என்றும் பக்தர்கள் வணங்கியிருக்கிறார்கள், ஆழ்வார்கள் பாடியிருக்கிறார்கள்.

அரன் நாரணன் நாமம்;
ஆன்விடை புள் ஊர்தி;
உரைநூல் மறை; உறையும்
கோயில்; — வரைநீர்
கருமம் அழிப்பு, அளிப்பு
கையது வேல் நேமி
உருவம் கார் மேனிஒன்று

என்று பொய்கை ஆழ்வார் பாடியது இந்தச் சங்கர நாராயண வடிவத்தைக் கண்டுதானே. இன்னும் பேயாழ்வார் தெய்வத் திருமலை சென்று வேங்கடவாணனைக் கண் குளிரக் கண்டு தரிசித்த பின் இப்படி சிவனும் விஷ்ணுவும் இணைந்து நிற்கும் கோலத்தையே கண்டிருக்கிறார். அப்படி அவர் பெற்ற அனுபவத்தையே,

தாழ்சடையும் நீள் முடியும்
ஒண் மழுவும் சக்கரமும்
சூழ் அரவும் பொன் நாணும்
தோன்றுமால்–சூழும்
திரண்டு அருவி பாயும்
திருமலை மேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து

என்று ஹரிஹர வடிவத்தைப் பாடவும் தோன்றியிருக்கிறது. தமிழ் நாட்டுத் திருத்தலங்களைக் கண்டு வரும்போது, திருநெல்வேலி மாவட்டத்தில் சங்கரன்கோயில் என்ற தலத்தில் சங்கர நாராயணர் வடிவைக் கண்டு தரிசித்து மகிழ்ந்திருக்கிறோம். வேங்கடத்துக்கு அப்பால் செல்லும் இத்தல யாத்திரையிலும் ஒரு ஹரிஹரனைக் காண்கிறோம். அந்த ஹரிஹரன் கோயில் கொண்டிருக்கும் தலம்தான் ஹரிஹர். அந்தத் தலத்துக்கே செல்கிறோம் நாம் இன்று.

ஹரிஹர், மைசூர் ராஜ்யத்தில் மைசூருக்கு வடக்கே இருநூறு மைல் தூரத்தில் இருக்

கிறது. மைசூர்-அரிசிக்கரை-பூனா ரயில் பாதையில் சென்றால் ஹரிஹர் என்ற ஸ்டேஷனிலேயே இறங்கலாம். காரில் சென்றால் மைசூரிலிருந்து ஷிமோகா சென்று அங்கிருந்து நாற்பதுமைல் தூரம் வடக்கு நோக்கிச் சென்றாலும் அடையலாம். இந்த ஊருக்குச் செல்ல ஷிமோகாவிலிருந்து பஸ் வசதியும் உண்டு.

ரயில்வே ஸ்டேஷனுக்குத் தெற்கே மூன்று பர்லாங்கில் துங்கபத்திரை நதிக்கரையில் இந்த ஹரிஹரேசுவரர் கோயில் இருக்கிறது. கோயிலுக்குக் கீழ்ப் புறம் கோட்டைச் சுவர் போல் ஒரு மண்டபம் இருக்கிறது. அந்த மண்டபத்துக்குள் நுழைந்து மேற்கு நோக்கிச் சென்றால் ஒரு திறந்த வெளி முற்றம் வந்து சேருவோம். அங்கு கிழக்கு நோக்கிய வாயிலுடன் கோயில் அமைந்திருக்கிறது. கோயிலைக் கோபுரம் ஒன்றும் அழகு செய்யாது. கன்னடக் கல்வெட்டுக்கள் நிறைந்த குத்துக் கற்கள் பல நின்று கொண்டிருக்கும். முன்சொன்ன மதில்வாயிலை ஒட்டி ஒரே கல்லால் உருவாகிய தீபஸ்தம்பங்கள் இரண்டு நின்று கொண்டிருக்கும்.

இவைகளையெல்லாம் விட்டுவிட்டே கோயில் முன் மண்டபம் வர வேண்டும். அந்த மண்டபம் விசாலமான மண்டபம். அதனை ஏந்தி நிற்கும் தூண்களெல்லாம் கடைசல் பிடித்த கருங்காலி மரத்தால் செய்யப்பட்டவையோ என்று சொல்லும்படி பளபளவென்று இருக்கும். கொஞ்சம் நெருங்கி அந்தத் தூண்களைத் தட்டிப் பார்த்தால் அவை மரத்தால் செய்யப்பட்டவை அல்ல, நல்ல கருங்கல்லால் ஆனவை என்பது தெரியவரும். "கல்லையா இப்படிப் பளபளக்க வைத்திருக்கிறார்கள் சிற்பிகள்?'' என்று அதிசயித்து நிற்போம். மண்டபத்தின் அழகையும் அந்த மண்டபத்தின் விளிம்புகளிலுள்ள கொடுங்கைகளையும் அதிலுள்ள சிற்ப வேலைகளையும் கண்டு மகிழ்ந்த பின் மேலும் நடந்தால் கருவறை வாயில் வந்து சேருவோம். அங்கிருந்து ஹரிஹரேசுவரனைத் தரிசிக்கலாம். அந்த ஹரிஹரன் நாலடி உயரமே உள்ள சிலா வடிவம். அரையில் ஒரு பட்டுக் கரை வேட்டியும் மேலே ஒரு ஷர்ட்டும் அணிந்து கொண்டு நவநாகரிக புருஷனாய் அவன் காட்சி தருவான். இந்த ஹரிஹர வடிவம், நமது தமிழ்நாட்டுச் சங்கரநாராயணரது வடிவம் போன்றதே. இடப் பக்கம் ஹரியாகவும் வலப்பக்கம் ஹரனாகவும் இருக்கும். கிரீடமும் சடா மகுடமும் தலையை அலங்கரிக்கும். நான்கு திருக்கரங்களில் இடப் பக்கம் உள்ள கரத்தில் சங்கு சக்கரமும், வலப் பக்கம் உள்ள கரத்தில் திரிசூலமும் உருத்திராக்கமும் இருக்கும். இரண்டு கைகள் நீண்டு உயர்ந்திருந்தால் இரண்டு கைகள் வடிவின் பக்கபலமாக அமைந்திருக்கும் இரண்டுபீடத்தின் மேல் தங்கியிருக்கும். அந்தப் பீடத்தில் ஒரு பக்கத்தில் பார்வதியும் கணபதியும் இருப்பார்கள். மற்றொருபக்கத்தில் லக்ஷ்மியும் சிஷ்ய சிறுவரும் இருப்பார்கள். சங்கரன் கோயிலில் உள்ள சங்கர நாராயணன் பக்கத்தில் இப்படி பார்வதி லக்ஷ்மி எல்லாம் இருப்பதில்லை. இத்தனையும் பார்த்த பின், ஹரிஹரேசுவரனின் திருவடி தரிசனம் காண விழைவோம்.

எனினும் இத்தலத்தில் நாம் திருவடி தரிசனம் காண இயலாது. ஏனெனில் பாதங்கள் இரண்டும் பூமிக்குள்ளேயே புதைந்திருக்கும்: இதற்குக் காரணம் வினவினால் தல வரலாற்றைப் பற்றித் தகவல் கிடைக்கும். தல வரலாறு இதுதான்.

இந்த வட்டாரத்திலே அன்று குகாசுரன் என்று ஓர் அசுரன் இருந்திருக்கிறான். அவன் பிரமனைநோக்கிக் கடுந்தவம் செய்திருக்கிறான்; தவத்தில் வெற்றி பெற்றுத் தனக்குத் தேவர்களாலும், ஏன் அரியினாலும், அரனாலுமே மரணம் ஏற்படக் கூடாது என்று வரம் பெற்றிருக்கிறான். அந்த வர பலத்தால் கர்வம் கொண்டு தேவர்களையும் மக்களையும் துன்புறுத்தி வந்திருக்கிறான். தேவரும் மற்றவரும் அரியிடமும் அரனிடமும் முறையிட, இருவரும் தனித்தனியாய் அவனை அணுகவோ அல்லது ஒழிக்கவோ இயலாது என்று கண்டு, இருவரும் இணைந்த ஒரு வடிவம் தாங்கி, அவ்வடிவுடனேயே அவனிடம் போரிட்டு வென்று அவனைப் பாதாளத்தில் அழுத்தியிருக்கின்றனர். மிகுந்த வரபலமுடைய அந்தக் குகாசுரனைப் பாதாளத்தில் அழுத்துவது என்பதுஎன்ன எளிதான காரியமா? அழுத்தம் அதிகம் கொடுக்க வேண்டியிருக்கிறது. அப்படி அழுத்தியதில் ஹரிஹரனின் கால்களுமே பூமியில் புதைந்துபோயிருக்கின்றன. இன்னும் அந்தக் குகாசுரன், பகவான் அழுத்திய காலை அவன் தலையிலேயே எப்போதும் வைத்திருக்கும் படியே வேண்டியிருக்கிறான். இதுவும் ஒரு காரணம் திருவடி இரண்டும் பூமியிலே அழுந்தி நிற்பதற்கு. பின்னர் அவன் வேண்டியபடியே அந்தத் தலமும் குகாரண்ய க்ஷேத்திரம் என்று பெயர் பெற்றிருக்கிறது.

இந்தக் கோயிலுக்கு வடபுறம் ஒரு சிறு கோயில் இருக்கிறது. அங்கு கோயில் கொண்டிருப்பவர் தேவியர்.ஆம் அங்கு பார்வதி தான் பிரதான தேவி; அவள் பக்கத்திலே லக்ஷ்மி தேவியும் சரஸ்வதியும் இருக்கின்றனர். தேவியர் மூவரும் சேர்ந்திருக்கும் கோலந்தானே அன்னை பராசக்தியின் கோலம். அந்தத் தேவியரையும் வணங்கி விட்டு ஊர் திரும்பலாம்.

இந்த ஹரிஹரேசுவரரது கோயிலைஹொய்சல மன்னனான இரண்டாம் நரசிம்மனின் சேனாதிபதியான போலால்வா என்பவர் 1223-ம் வருஷம் கட்டினார் என்று சரித்திர ஏடுகள் சொல்கின்றன. சரித்திர ஏடுகள் சொல்வானேன்? கோயில் முன் மண்டபத்திலுள்ள தூண்களே இந்தக் கோயில் ஹொய்சலர் திருப்பணிதான்என்று பறையறைகின்றனவே: பின்னர் பதினாலாம் நூற்றாண்டில் விஜயநகர சாம்ராஜ்யத்தை ஆண்ட நாயக்க மன்னர்கள் இக் கோயிலுக்குப் பல நிபந்தங்கள் ஏற்படுத்திப் பாதுகாத்து வந்திருக்கின்றனர். விஜயநகர சாம்ராஜ்யத்தை உருவாக்கும் பணியில் முனைந்து நின்ற ஹக்கா என்ற மன்னன் இந்த ஹரிஹரனிடத்தில் அத்யந்தப் பிரியம் உடையவனாக இருந்திருக்கிறான். அதனால் தன் பெயரையே ஹரிஹர ராயன் என்று மாற்றிக் கொண்டிருக்கிறான். அத்தனை பக்தி அந்த ஹரிஹரனிடம் அவனுக்கு. நாமும் அந்த ஹரிஹரனை வந்தித்து வணங்கி விட்டு நமது யாத்திரையைத் தொடரலாம்.



## சீரான ஆகாரமில்லாததால் நீங்கள் மெலிந்திருக்கிறீர்களா?

# ஆல்போஸாங் சாப்பிடுங்கள்

**மிகச் சிறந்தது**
**சாதாரண உணவுடன் சேர்ந்து**
**சிக்கனமான, விஞ்ஞான முறையில்**
**ஊட்டமளிப்பது**

தேநீர், காப்பி, பால், கஞ்சி, பழரசம் முதலியவைகளுடன் சேர்த்து அருந்தினால் மிக ருசியாக இருக்கும். சிறு குழந்தைகளுக்கும், வளரும் பிராயத்திலும், பிரசவகாலத்தில் தாய்மார்களுக்கும், சிந்திக்கும் தொழிலாளிகளுக்கும், முதியவர்களுக்கும், பலவீனம் இரத்தமின்மை மற்றும் நோயிலிருந்து தேறி வரும் போதும் ஆல்போ-ஸாங் சிறந்த டானிக் உணவாகிறது.




பௌடர் மற்றும் மாத்திரைகளாகவும் கிடைக்கிறது.

**ஜே. & ஜே. டீஷேன்,**
ஹைதராபாத்—டெக்கான்




## அத்தியாயம் 20

# கோலாலம்பூர்

**வ**ழவழப்பான தெருக்களுக்குப் பெயர் போன மலாய் நாட்டில் கோலாலம்பூரையும் சிங்கப்பூரையும் இணைக்கும் பிரதானமான சாலையில் குமாரி 'செவர்லட்' காரை ஓட்டி வந்தாள். குண்டும் குழியுமாயிராமல் அழகுற அமைந்திருந்த அந்த நெடுஞ்சாலையில் விலையுயர்ந்த பெரிய காரில் சவாரி செய்வது ஏதோ அராபியக் கதைகளில் வருகிற மந்திரக் கம்பளத்தில் பறப்பது போல் அத்தனை சொகுசாகத்தான் இருந்தது.

''அபராதம் விதித்ததோடு ஆளை விட்டு விட்டதுடன் லைசென்ஸையும் திருப்பித் தந்து விட்டார்கள் என்பதால் இப்போது ரொம்பவும் வேகமாகப் போக வேண்டுமென்பதில்லை'' என்று எச்சரித்தார் பின்புறத்தில் நன்குகச் சாய்ந்து அமர்ந்திருந்த கதிரேசன். ''அவசரப்படவே வேண்டாம்.''

''உனக்குச் சிரமமாக இருந்தால் நான் வேணுமானால் ஓட்டி வருகிறேனே?'' என்று தான் உதவத் தயாராக இருப்பதை வெளியிட்டான் வடிவேலு.

''ஆமாம், குமாரி! சற்று நேரம் அவன்தான் ஸ்டியரிங்கைப் பிடிக்கட்டுமே?'' என்று கதிரேசன் அந்த யோசனையை ஆமோதித்தார்.

''இது மிலிட்டரி லாரி இல்லை. அப்பா! நாஸுக்காகக் கையாள வேண்டும் இதை!'' என்று கூறி விட்டு விஷமத்தனமாக வடிவேலுவை ஓரக் கண்களால் பார்த்தாள் குமாரி.

''குமாரி!'' என்று கோபிக்கிற குரலில் அழைத்தார் கதிரேசன். ''அளவாகப் பேசக் கற்றுக்கொள்ள வேண்டும் நீ! எத்தனை நாட்களுக்குச் சிறு பெண்ணாகவே இருப்பது?''

'வேண்டும், உனக்கு! நன்றாக வேண்டும்!' என்பது போல் ஜாடை காட்டிப் பரிகசித்தான் வடிவேலு, கதிரேசன் அறியாதவாறு.

அழகு காட்டுகிற பாணியில் அவள் செவ்விய அதரங்கள் மின்னல் வேகத்

இல் நெளிந்து பின்னர் புன்னகையில் நிலைத்தன.

மகளின் மௌனத்தைக் கண்டு அவள் மனத்தைப் புண்படுத்தி விட்டோமோ என்று கதிரேசன் கவலைப் பட்டிருக்க வேண்டும். ''வடிவேலு ! குமாரி செய்து கொண்டு வந்திருந்த டிபன் எப்படி? பிரமாதமில்லையா?'' என்று அவனைச் சிலாகித்து உற்சாகப் படுத்துகிற நோக்கில் கேட்டார்.

''பண்டங்களின் ருசியை யார் கண்டார்கள்? அப்போதிருந்த பசியில் வயிற்றை நிரப்பிக் கொள்ளப் பத்து மலைச் சாரலில் உள்ள இலை தழைகளைக் குமாரி மேயச் சொல்லியிருந்தால் அதைக் கூடச் செய்து காட்டியிருப்பேன்! இல்லாது போனால் இருநூற்று நாற்பத்திரண்டு படிகளையும் எப்படி ஏறி இறங்கியிருக்க முடியும்?''

அப்பாவும் பெண்ணும் அடக்க மாட்டாது சிரிக்கையில் வடிவேலுவுக்கு மரகதச் சோலைகளுக்கிடையில் கழிந்த அந்தச் சில மணி நேரங்கள் தன் வாழ்நாள் முழுவதும் பசுமையாக மனத்தில் நிலைத்திருக்கக் கூடியன என்று தோன்றியது. குமாரி 'பிக்நிக்' கூடையைத் திறந்ததும், ''ஒன்றே ஒன்று! உம், இதோடு போதும்!'' என்று குறைந்தது பத்துப் பன்னிரண்டு தடவைகளாவது சொல்லித் தோசைகளையும் இட்டிலிகளையும் கேட்டு வாங்கித் தின்றிருப்பான் அவன்.

வேல் வழிபாட்டை முடித்துக் கொண்டு பத்துமலைக் குகையை விட்டு வெளிப்பட்டதும் விசாலமான அந்தக் குகையின் மேல் விதானத்திலிருந்து பாறைகள் தோரணம் கட்டியதுபோல் உருகித் தொங்குகிற அற்புதத்தைச் சில நிமிஷங்கள் நின்று கவனித்து அதிசயித்தான். அதைவிட அதிகமான ஆச்சரியத்தில் அவனை ஆழ்த்தினாள் குமாரி. துள்ளிக் குதித்துச் சில படிகள் இறங்கினாள். திரும்பி, உயர அவனை ஏறிட்டுப் பார்த்து, ''சீக்கிரம் வாருங்களேன்!'' என்று துரிதப்படுத்தினாள். அவன் அருகில் நெருங்கியதும், ''அதோ அந்தக் கிளையில் உட்கார்ந்திருக்கும் பட்சிகளைப் பாருங்கள்! இதோ இந்த மரத்தைச் சுற்றி வளைக்கும் கொடியைப் பாருங்கள்!'' என்பது போல் எதையாவது சொல்லி விட்டு ஆனந்த சாகரத்தில் ஆழ்ந்து போனாள். அவனுக்கு மிகச் சாதாரணமானவையாகத் தென்பட்ட விஷயங்கள் அவள் கண்களுக்குப் பெரு வியப்பளிப்பனவாகத் தோன்றுவதை எண்ணி வடிவேலு நகைத்தான். ''இதை



யெல்லாம் என்னல் பார்க்க முடியாது! வேணுமானல்இன்னும் இரண்டுதோசை களைக் கொடு; ஒரு கை பார்க்கி றேன்!'' என்றான்.

''வெந்நீர் ஊற்றுக்குப் போவோம், முதலில். சூடான ஜலத்தை இரண்டு வாளி மொண்டு விட்டுக் கொண்டா லாவது உங்கள் மனம் கனிந்து கரை யுமா என்று சோதிக்கலாம்!'' என்று கூறிக் குமாரி ஓடிச் சென்று காரில் ஏறிக் கொண்டாள்.

கதிரேசனுக்காகக் காத்திருந்து நிதான மாக அவருடன் நடந்தான் வடிவேலு.

வெந்நீர்க் கிணற்றைக் கண்டதோடு திருப்தியடைந்து விட்ட அவனை இளைப் பாற ஓர் ஓட்டலுக்கு அழைத்துக் கொண்டு போனர்கள், தந்தையும் மகளும். மறுநாள் மலாயாக் கூட்டரசின் தலைநகரைச் சுற்றிக் காண்பித்தார்கள்.

''கூட்டரசு என்பதாக ஏதோ ஒப் புக்கு ஒன்றை உருவாக்கியிருக்கி ருர்கள்; அவ்வளவுதான்!'' என்றாள் குமாரி.

''அது என்ன விஷயம்?''

''பிரிட்டிஷாரின் பாதுகாப்புக்கு ஆரம்பத்தில் உட்பட்ட நான்கு ராஜ் யங்கள் மட்டும் கூட்டரசில் சேர்ந் தன. அந்தந்த ராஜ்யங்களின் அர சர்கள் கூட்டரசின் தலைநகரில் அமைக் கப்பட்ட சக்திவாய்ந்த மத்திய அர சாங்கத்தினல் தங்களுடைய தனித் தன்மை பாதிக்கப்படுவதை விரைவி லேயே கண்டு கொண்டார்கள். கூட் டரசுக்கு வெளியே உள்ள மற்ற ராஜ் யங்களின் அரசர்களுக்குச் சமதை யாகத் தங்களுக்கும் எல்லாவிதமான அதிகாரங்களும் கிடைக்குமாறு செய்து கொண்டார்கள். கூட்டரசு என்ற பெயர் இருந்தாலும் தனித் தனி அரசாங்கங்களாகவேதான் இயங்கு கின்றன. இந்தச் சிறிய தீபகர்ப்பத்தில் இப்போது மொத்தம் பத்து தனித் தனி அரசாங்கங்கள் உள்ளன! ஜப்பா னியனுடைய நோக்கில் மிகவும் சௌக ரியமான ஏற்பாடு இது என்று சொல்லவும் வேண்டுமா?'' என்று விமரிசனம் செய்தார் கதிரேசன்.

ரயில் நிலையத்தைப் பார்வையிட் டார்கள். ''ஆங்கிலேயனிடம் ஆயிரம் குறைகள் இருக்கலாம். ஆனல் கட்ட டக் கலையில் மன்னனென்ருல் மன்னன் தான். மேல்நாட்டுப் பாணியில் ரயில்வே ஸ்டேஷனை எழுப்பாமல் கீழ்த் திசை நாகரிகத்தோடு ஒன்று கிற மாதிரியாக அமைய வேண்டும் என்று திட்டம் போட்டு நிறைவேற்றி யிருக்கிருன், பாருங்கள்'' என்று வடி வேலு பாராட்டியதை மற்ற இருவரும் ஒப்புக்கொண்டு தலையாட்டினர்கள்.

பூமலையை அடைந்ததும் கண்ணுக் கெட்டிய தூரம் இயற்கையாகவே பரவி நின்ற அந்தப் பசும் புல்வெளியில், மனேரம்மியமான சூழலில் அமர்ந்து சற்று நேரம் அளவளாவினர்கள். சிலுசிலு வென்று காற்று வீசுகிற சுகமும் மர நிழலின் அருமையும் வயி ருர உண்டதினல் ஏற்பட்ட மன நிறைவும் ஒன்ருகக் கூடிக் கதிரேசனை அசத்தி விட்டன. காரிலிருந்து எடுத்து வந்த இரண்டு திண்டுகளைத் தட்டித் தலைமாட்டுக்கு வைத்துக் கொண்டு ஒரு மரத்தடியில் அவர் கால் நீட்டிப் படுத்து விட்டார். ''களைப்பாக இருக் கிறது; கட்டையைக் கிடத்துகிறேன். இரண்டு மணி சுமாருக்கு என்னை எழுப்புகிருயா குமாரி? ஊருக்குக் கிளம்புவோம்'' என்று மூக்குக் கண் ணுடியைக் கழற்றியபடியே கேட்டார்.

''ஆகட்டும், அப்பா!'' என்றவள் பொழுதுபோக்காகக் கையிலிருந்த புத்தகத்தை மூடித் திறந்து பக்கங் களின் எண்ணிக்கையைக் கொண்டு ரன்களைக் கணக்கிடும் கிரிக்கெட் விளை யாட்டைத் தன்னுடன் ஆடுமாறு வடி வேலுவை வற்புறுத்தினுள். இரண்டு இன்னிங்ஸ்களிலும் தன்னுடைய கட்சி ஆட்டக்காரர்கள் தோற்றுப் போன தைக் கண்டதும் அவளுக்கு அலுத்து விட்டது. ''சீ! இன்றைக்கு எனக்கு அதிர்ஷ்டமேயில்லை'' என்று குறைப்பட் டுக் கொண்டு புத்தகத்தை அறைந்து மூடினுள். ''நான் ஒன்றும் விளை யாடத் தயாராக இல்லை!'' நிஜக் கலப்பற்ற கோபத்துடன் கஷ்டப்பட்டு முகத்தை 'உம்'மென்று வைத்துக் கொண்டு அவனை ஏறிட்டு நோக்கி ளுள் அவள். சட்டென்று அவள் தோற்றம் மாறியது. சதா துருதுரு வென்று சுழன்று வரும் அவள் விழிகள் இப்போது நிலைத்து நின்று அவன் இதயத்தை ஊடுருவ முயன் றன. எப்போதும் மகிழ்ச்சியில் விக சித்துக் காணப்படும் அவள் வதனம் ஏக்கம் குடிகொள்ளக் கூம்பியது. பத்து மலையில் பத்து முறைகள் ஏறி இறங்கினு லும் சிறிதேனும் களைப்படைய மாட் டாத இளமை மாருத, இனிமை குன் ருத அவள் மேனி நெட்டுயிர்ப்புக் களைச் சிந்திச் சிரமப்பட்டது.

''என்ன விழிக்கிருய்?'' என்று கேலி யாக அதட்டிக் கேட்டான் வடிவேலு.

''ஒன்றுமில்லை; உங்களுக்கு எங்கள் நாடு பிடித்திருக்கிறதா, இல்லையா என்று ஊகிக்க முயன்றேன்.''

"ஓ!" என்று பலமாகத் தலையாட்டினான் அவன். "ரொம்ப ரொம்பப் பிடித்திருக்கிறது!"

"அப்படியானால் இங்கேயே தங்கி விடுவதென்றாலும் அதற்குத் தயங்க மாட்டீர்கள் அல்லவா?"

"அதையெல்லாம் நான் யோசித்தது கிடையாது. நடைபெறவிருக்கும் யுத்தத்தின் முடிவு என்னவாகுமோ, யாருக்குத் தெரியும்?"

"நம்மில் யார் உயிர் பிழைப்போம் என்று தீர்மானிப்பதற்கில்லைதான். என்றாலும் போரின் முடிவு நமக்கேற்ற நல்ல முடிவு என்றே பேச்சுக்கு வைத்துக் கொள்வோம். அப்போதும் இந்தியாவுக்குக் கப்பலேறுவதில்தான் கண்ணாயிருப்பீர்களா?"

"நான் தமிழ் நாடு திரும்பாமல் இருக்க வேண்டிய அவசியம்தான் என்ன? மலாய் தேசம் என் மனத்தைக் கவர்ந்திருப்பது என்னவோ உண்மைதான். ஆனால் இங்கேயே நிரந்தரமாக வாசம் புரிவதென்பது வேறு காரியம்."

"எனக்குப் புரிகிறது. மண்ணை விரும்பினாலும் அதில் வாழும் மக்களை வெறுக்கிறீர்கள். முக்கியமாக என்னைக் கட்டோடு பிடிக்கவில்லை உங்களுக்கு." கையில் இருந்த ஆங்கில நாவலை மார்புற அணைத்துக் கொண்டு சரேலென்று எழுந்து சென்றாள் குமாரி. திரும்பிப் பாராமல் விரைப்பாக நடந்து போய்த் தகப்பனாருக்கு மிக அருகே 'பொத்'தென்று அமர்ந்து அடிமரத்தில் முதுகைச் சாய்த்து முழங்கால்களை மடக்கி உயர்த்திப் புத்தகத்தை அவற்றின் மீது தாங்கியவாறு பிரித்துப் படிக்க ஆரம்பித்தாள்.

'என்ன கோபம்! அப்பப்பா! பொத்துக் கொண்டு வருகிறதே!' என்று எண்ணியவனாகத் தனக்குள் சிரித்துக் கொண்டான் வடிவேலு. கதிரேசனின் உறக்கத்தைக் கலைக்கக் கூடாது என்கிற அக்கறை அவனுக்கு.

சீக்கிரத்திலேயே குமாரியின் அந்தச் செய்கைக்குச் சினம் மட்டும் காரணமல்ல; துயரமும்தான் என்பதை ஓசைப்படுத்தாமல் அழும்போது குலுங்கிய அவள் மென்தோள்கள் உணர்த்தின. 'வருத்த மிகுதியில் என்னெதிரே கண்ணீர் சிந்துவதைத் தவிர்க்கத்தான் அவள் முகத்தை மறைத்துக் கொள்ள விரைந்து சென்றாளா? அவளை எனக்குப் பிடிக்கவில்லை என்பதாக அவளாகவே கற்பனை செய்து கொள்வானேன்; பிறகு அதற்காக அவள் அழுவானேன்?' என்று வடிவேலு பலமாகச் சிந்திக்கலானான்.

## அத்தியாயம் 21

# சந்தேகம்

**பி**ன் ஸீட்டிலிருந்த கதிரேசன் ஏதோ பேசினார். வடிவேலுவின் எண்ணத் தொடர்பு அறுபட்டு நின்றது.

"என்ன கேட்டீர்கள்?" என்றான் திடுக்கிட்டு விழித்தெழுந்தவன் போல்.

கதிரேசன் நகைத்தார். "நீ தூக்கத்தில் ஆழ்ந்திருக்கையில் மலாய் நாட்டின் இத்தனை வளங்களும் யுத்தத்தினால் சர்வநாசமாகப் போவதை நினைத்து நான் துக்கப்பட்டுக் கொண்டிருந்தேன்" என்றார்.

"அப்படியெல்லாம் ஒன்றும் நேராது. நாங்கள் எதற்காக இருக்கிறோம்? கப்பல்களை விட்டுக் கரையில் இறங்கவே ஜப்பானியச் சிப்பாய்களை அனுமதிக்க மாட்டோம்" என்று பெருமை அடித்துக் கொண்டான் வடிவேலு.

"இப்படி நீ கூறுவாய் என்று நான் எதிர்பார்த்தேன். பிரிட்டிஷாரின் உள்ளத்தில் இருக்கும் நம்பிக்கையை நீயும் பிரதிபலிக்கிறாய். கப்பல்களில் வந்து சேருவான் ஜப்பானியன் என்று தவறாகக் கணக்குப் போட்டு, நீங்கள் கிழக்குக் கடற்கரையில் அவனைத் தடுத்து நிறுத்த ஆயத்தங்களைச் செய்து கொண்டிருக்கையில் அவன் அதற்கு நேர் எதிர்த்திசையில் நில மார்க்கமாகத் தாக்கப் போகிறான். ஆங்கிலேயத் தளபதிகள் 'ஆ' வென்று வாயைப் பிளக்கப் போகிறார்கள்!"

"அது எப்படிச் சாத்தியமாகும்?"

"ஜப்பானியர் சற்றும் எதிர்பாராத விதத்தில் நடந்து கொள்வதில் சமர்த்தர்கள். நமக்கு நேர் வடக்கேயுள்ள தாய்லாந்தின் ரகசிய நட்பைப் பெற்று அதன் தெற்குக் கோடியில் தங்களை ஸ்திரப்படுத்திக் கொள்வார்கள். போர்க் கருவிகளையும் பட்டாளங்களையும் கடல் மார்க்கமாக — தென் சீனக் கடலும் ஸயாமிய வளைகுடாவும் இணைகிற பகுதி வழியாக—கணக்கின்றிக் கொண்டு வந்து அங்கே குவித்துத் தங்களைப் பலப்படுத்திக் கொள்வார்கள். பின்னர் மலாயாவின் மேற்குக் கரை ஓரமாக முன்னேறுவார்கள்!"



நகர அபிவிருத்தி டிரஸ்டின் சர்க்கார் ஆர்ப்பிட்ரேடர் திரு சிவசங்கர முதலியார் அவர்களின் புதல்வி சௌ. யசோதாவுக்கும் திரு நாராயணசாமிக்கும் திருமணம் நடந்தது.



சென்னை ஐ. எஸ். ஆர். கம்பெனி மானேஜர் திரு ஆர். விஜயம் அய்யங்காரின் புதல்வர் திரு ராஜகோபாலனுக்கும் சௌ. இந்திராவுக்கும் திருமணம் நடந்தேறியது.



மணக்கால் ஸ்ரீ வேங்கடராமய்யர் அவர்களின் பேரன் திரு ரகுநாதனுக்கும் பம்பாய் ஸ்ரீ கல்யாணராமய்யர் அவர்களின் புதல்வி சௌ. ஜானகிக்கும் திருமணம் நடந்தது.

உலக அபிப்பிராயத்தைப் புறக்கணித்தேனும் உடனடியாக 'மடடார்' திட்டத்தை அமுலாக்கி ஸயாமுக்குள் படையெடுக்க வேண்டும் என்று மைக்கேல் துடித்ததன் தாத்பரியம் வடிவேலுவுக்கு இப்போது தெளிவாகியது.

''தாய்லாந்து என்றாலே ஸயாமிய மொழியில் சுதந்திர மக்கள் வாழும் தேசம் என்று அர்த்தமாதலால் அது ஜப்பானுக்கு அனுகூலமாகச் செயல்படாது என்று நினைக்கிறார்கள். ஸயாமியருக்குத் தொந்தரவு கொடுத்துக் கோபத்தைக் கிளறாது இருந்து விட்டால் தூரக்கிழக்கில் உள்ள விரல் விட்டு எண்ணிவிடக் கூடிய ஜன நாயக நாடுகளுள் ஒன்றாக விளங்கும் தாய்லாந்து இறுதி வரையில் நடுநிலைமை வகிக்கும் என்று கருதுகிறார்கள். சென்ற உலக யுத்தத்தில் அந்தத் தேசம் பிரிட்டனுக்குப் பக்கபலமாக இருந்தது என்கிற உண்மை இன்று மனமின்றியேனும் அது ஜப்பானுக்கு அனுகூலமாய்ச் செயல்படக் கூடும் என்பதை மறைத்து விடுகிறது. குடிபோதையில் இளஞ்சிவப்பு நிற யானைகளைக் கண்டு மிரளுகிற ஆங்கிலேயத் தளபதிகள் புனிதமான வெள்ளை யானைகள் உலவி வரும் அந்தத் தேசத்தின் முக்கியத்துவத்தை மறந்து விடுகிறார்கள்!''

இவ்வாறு நெருங்கிக் கொண்டிருக்கும் பயங்கரப் போராட்டத்தைக் குறித்து நேரம் போவதே தெரியாதவாறு பேசிக் கொண்டு வந்தார் கதிரேசன்.

அய்யர்ஹிதாம் நகருக்கு வந்து சேர்ந்ததும், ''குமாரி! காரை மெர்ஸிங்கை நோக்கித் திருப்புகிறாயா?'' என்று கேட்டார்.

''சரி, அப்பா!'' என்றாள் அவள்.

''அடடா! நேராகச் சிங்கப்பூர் செல்வீர்களென் றல்லவோ நினைத்தேன்'' என்றான் வடிவேலு. ''வழியில் எங்கேயும் தாமதிக்க எனக்கு அவகாசமில்லையே? நாளைக் காலையில் நான் ராணுவ முகாமில் ஆஜராக வேண்டும்.''

''கவலைப்படாதே, அப்பனே! நான் குறிப்பிடுகிற இடத்தில் என்னை இறக்கி விட்டு விட்டு நீங்கள் இருவரும் இன்றிரவே சிங்கப்பூருக்குப் போய்விடலாம். நான் என்னுடைய வேலைகளையெல்லாம் முடித்துக் கொண்டு நாளை நிதானமாக வந்து சேருகிறேன்'' என்றார் கதிரேசன்.

மேலும் சுமார் இரண்டரை மணி நேரம் பிரயாணம் செய்து மெர்ஸிங்கை அடைந்தார்கள். ''வழக்கமான இடம்தானே?'' என்றாள் குமாரி.

''ஆமாம்'' என்றார் அவர்.



மெர்ஸிங் நகரத்தைக் கடந்து என்டௌ செல்லும் சாலையில் கார் விரைந்தது.

எதற்காக எங்கே போகிறோம் என்பதொன்றும் அறியாமல் தவித்தான் வடிவேலு. ''திக்குத் திசை புரியவில்லையே!'' என்று அவன் வாய் விட்டுச் சொன்ன போது அவர்கள் நெடுஞ் சாலையை விட்டு விலகிக் கரடு முரடான ஒரு பாதையில் போய்க்கொண்டிருந்தார்கள். காடாந்தகாரமான அந்தப் பிரதேசத்தில் மோட்டாரின் முன் விளக்கு மட்டுமே பிரகாசித்துச் சில தென்னை மரங்களையும் ஒன்றிரண்டு பாறைகளையும் புலப்படுத்தின.

''இங்கேதான் அம்மா! நிறுத்திக் கொள்'' என்று மகளிடம் வேண்டினார் தகப்பனார். மோட்டார் நின்றது.

''பேச்சு மூச்சுக் காணவில்லையே? இந்த அமானுஷ்யமான இடத்தில் எங்கே போகிறீர்கள்?''

வடிவேலுவின் விழியில் இழையோடிய சந்தேகத்தைப் போக்க விரும்பி, ''அதோ, பார்!'' என்று சுட்டிக் காட்டினார் கதிரேசன். 'முணுக் முணுக்' கென்று சற்றுத் தூரத்தில் ஒரு விளக்கு எரிந்து கொண்டிருந்தது.

''அதோ பார்த்தாயா, வெளிச்சத்தை! அங்கே, கடற்கரையில் பர்ண சாலை போன்ற சிறிய குடிலை அமைத்துக் கொண்டு அமைதியாக வாழ்கிறார் என் நண்பர் ஒருவர். சிறந்த அறிஞர், கவிஞர், கலைஞர், ரஸிகர். அவருடன் உரையாடிக் கொண்டிருப்பதில் அலாதி இன்பம் எனக்கு. சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம், இங்கே வந்து விடுவேன். ஒரு நாளோ இரண்டு நாளோ

தங்கி அவர் கவிதைகளை அனுபவித்து விட்டுத் திரும்புவேன். பகல்பொழுதில் இந்தப் பக்கமாக வந்தால் அப்படியே சொக்கிப் போய் விடுவாய்! கொள்ளை அழகு இந்த இடம். முன் கூட்டியே நண்பருக்குத் தெரியப் படுத்திவிட்டு உங்கள் இருவரையுமே இன்னொரு நாள் அழைத்து வருகிறேன்.''

டார்ச் விளக்கைக் கையில் எடுத்துக் கொண்டு கீழே இறங்கிய கதிரேசன், அதனைப் பொருத்தி ஒற்றையடிப் பாதை ஒன்றினைக் கண்டுபிடித்து அதன் வழியே நடந்தார்.

காரைத் திருப்பினாள் குமாரி. மீண்டும் நெடுஞ்சாலையை அடையும் வரையில் மௌனமாகச் சிந்தித்த வடிவேலு, ''இலக்கிய ரசனையுடன் கூடிய கவிதை உள்ளம் படைத்தவரென்று ஆளைப் பார்த்தால் மதிப்பிடவே முடியாது!'' என்றான்.

குமாரி சிரித்தாள். ''அது அவர் வழக்கமாகக் கூறும் பொய்!''

''உண்மையை அவர் கூறவில்லை என்று நானும் கணித்தேன்!'' என்ற வடிவேலு, ''குமாரி! வண்டியைத் திருப்பு!'' என்று உத்தரவிட்டான்.

''நமக்குச் சம்பந்தமில்லாத விஷயத்தில் தலையிடுவானேன்?''

அவளோடு வாதாடிக் கொண்டிருக்கப் பிரியப்படாதவனாகச் சட்டென்று காரின் மோட்டாரை நிறுத்திச் சாவியை உருவி எடுத்துச் சட்டைப் பைக்குள் போட்டுக் கொண்டான் அவன்.

கோபம் பொங்கியது குமாரிக்கு. காரின் சாவியை அவனிடமிருந்து திரும்பப் பெற யத்தனித்து அவன் மீது பாய்ந்து பிடுங்கினாள். தன்னைத் தாக்கிய அந்த மென்கரங்களை இறுகப் பற்றி அவள் முதுகுக்குப் பின்னால் ஒடித்து எடுத்துப் போனான் அவன். அப்போதுதான் அவனோடு ஒட்டியபடி தான் இருப்பதை உணர்ந்து வெட்கியவளாக, ''தயவுசெய்து என்னை விட்டு விடுங்கள். இனி மேல் நான் நிதானமிழக்க மாட்டேன்'' என்று கெஞ்சினாள் அவள்.

''அப்பாவைக் காப்பாற்ற வேண்டுமென்கிற உன் ஆர்வம் எனக்கு விளங்குகிறது. ஆனால் நான் அதை அனுமதிப்பதற்கில்லை'' என்றான் வடிவேலு. கார் துடைக்கப் பயன்படும் துணியை இரண்டாகக் கிழித்து அவளுடைய கைகளையும் கால்களையும் அழுத்திக் கட்டினான். அப்படியே அவளைக் குண்டுக் கட்டாகத் தூக்கிப் பின் ஸீட்டில் போட்டு விட்டுக் காரைச் செலுத்த ஆரம்பித்தான். (தொடரும்)

# முறிந்த வியாபாரம்!

**தாமரை மணாளன்**

**மா**ரிமுத்து, ராஜுவேலு இருவரும் நுங்கம்பாக்கத்தில் காய்கறி வியாபாரம் தொடங்கிய நாளிலிருந்தே எனக்குப் பழக்கம்.

நுங்கம்பாக்கம் வட்டாரத்தில் 'பெரிய காய்கறிக் கடை' என்றால் மேற்படியார்களுடைய தகப்பனார் தங்கையா நாடாரின் கடையைத்தான் குறிக்கும். அதற்கேற்றபடி பெரும்போக்கான வியாபாரம்தான். நாற்சந்தியில் ஒரு கடை, வீடுகளில் கொண்டு விநியோகிக்க ஒரு தள்ளு வண்டி, பெரும் வாடிக்கைகள் என்று பெரியவர் காலத்தில் வெகு தோரணையாகத்தான் வியாபாரம் நடந்து வந்தது.

பெரியவர் 'செல்லாகி'ப் போனதும், பிள்ளைகளுக்குள் பிரிவினை விவகாரம் தலையெடுத்தது. அவர்களுக்கு ஓரளவு அறிமுகமானவன் என்ற முறையில் நான் அதில் தலையிட நேர்ந்தது. அப்போது ஏற்பட்ட நெருக்கம்தான் தொடர்ந்து அவர்களுடைய வியாபார நடவடிக்கைகளிலும் எனக்கொரு ஈடுபாட்டை ஏற்படுத்தியது.

நாடார் இறந்த பின் சுமார் பதினைந்து நாட்கள் வரையில்தான், இருவரும் பழைய 'தங்கையா நாடார் விலா'சத்தில் தொழில் நடத்தியிருப்பார்கள். திடீரென்று ஒருநாள் என்னிடம் வந்து நின்றான் இளையவன் ராஜுவேலு.

''சார்! நீங்க கொஞ்சம் நம்ப வீட்டுக்கு வந்து அண்ணனுக்கும் எனக்கும் பாகம் பிரிச்சுக் கொடுத்திடணும். திருஞ்ஞானம் பிள்ளையும் முருகேச முதலியாரும் கூட வர்றாங்க'' என்றான். அவன் குறிப்பிட்ட நபர்களும் நானும், அந்தப் பகுதியில் மத்தியஸ்தம் செய்யக்கூடிய அளவு அந்தஸ்து பெற்ற பெரிய மனிதர்கள் என்பதாக ஒரு பொதுஜன அபிப்பிராயம் உண்டு.

''என்னப்பா, உனக்கும் உன் அண்ணனுக்கும் தகராறு?'' என்று விசாரித்தேன்.

''ஐயையோ! அப்படியெல்லாம் ஒண்ணுமில்லீங்க. சண்டைக்கு இழுத்தாலும் என் அண்ணன் வரமாட்டான்!'' என்றான்.

''பிறகு ஏன் பிரிக்கணும்? வியாபாரத்தைச் சேர்ந்தே நடத்துங்களேன்'' என்றேன்.

அவன் ஒரு கணம் தயங்கினான். பின், ''என் அண்ணனுக்கு வியாபாரம் ஒத்து வரலீங்க'' என்றான்.

வியாபாரத்தின் அரிச்சுவடியே எனக்குத் தெரியாது. எனவே அது இவனுக்கு ஒத்துப் போய், இவனுடைய அண்ணன் மாரிமுத்துவுக்கு மட்டும் ஒத்துப் போகாமல் இருக்கும் சூட்சமம் எனக்குப் புலனாகவில்லை. பிரிவினை வைபவத்தின் போதுதான் அது இலேசாகப் புரிய ஆரம்பித்தது.

பாகப் பிரிவினை விவகாரம் அவ்வளவு இலேசானதாக இல்லை. எப்படிப் போனாலும் சிக்கலாகவே இருந்தது. ஆனால் அந்தச் சிக்கல் இளையவனை ராஜுவேலு பக்கத்திலிருந்துதான் விளம்பியது. முக்கியமான சொத்துக்கள் கடைத் தளவாட சாமான்களும், தள்ளு வண்டியும்தான். வண்டியை ஒருவனுக்கும் கடைத் தளவாடங்களை ஒருவனுக்குமாகப் பிரித்துக் கொடுத்து விட்டால் விஷயம் சுலபத்தில் தீர்ந்து விடும். ஆனால் அப்படிச் சுலபமாகத் தீர்க்க ராஜுவேலு இடம் கொடுப்பதாக இல்லை.

''கடையை நீ எடுத்துக் கொள்கிறாயா?'' என்று அவனிடம் கேட்டால், ''வண்டியிருந்தால் 'பெரும் கை'களாக நாலு பங்களா வாடிக்கை பிடிக்கலாம்'' என்றான். 'அப்படியென்றால் வண்டியைத்தான் எடுத்துக் கொள்ளேன்!'' என்று கேட்டபோது, ''கடையில்லா விட்டால் ரொக்கத்துக்கு வரும் சில்லறைக் கிராக்கிகள் போயிடுமே!'' என்று தாடியைச் சொறிந்தான். எல்லாவற்றையும் அவனிடம் கொடுத்தால்தான் திருப்திப்படுவான் போலிருந்தது. ஆனால் மூத்தவனை மாரிமுத்துவோ, 'எனக்கென்று எது தந்தாலும் சரிதான், தராவிட்டாலும் சரிதான்' என்ற பாவனையில் நிச்சலனமாக நின்று கொண்டிருந்தான்.

ஆனமட்டும் பார்த்தோம். எப்படி மத்தியஸ்தம் செய்தாலும் ராஜுவேலுவின் 'முகமுறிவை'யும் அதிருப்தியையும் நாங்கள் சம்பாதித்துத்தான் ஆகவேண்டும் போல் இருந்தது. கடைசியில் விவகாரத்தை மூலையடி விநாயகர் பக்கம் தள்ளி விட்டோம். அவர் முன் பூச்சீட்டு போட்டுப் பார்ப்பது என்று முடிவு செய்தோம்.

அப்படியே செய்யப்பட்டது. மூத்தவனுக்குத் தள்ளுவண்டி என்றும், இளையவனுக்குக் கடைச் சாமான்கள் என்றும் விநாயகர் மத்தியஸ்தம் செய்து வைத்தார்.

* * *

**அ**ன்றிலிருந்து அவர்கள் இருவருடைய நடவடிக்கைகளையும் கவனிப்பது எனக்குப் 'பொழுதுபோக்கா'கி விட்டது.

சுமார் மூன்று மாத காலத்துக்குள் ராஜுவேலு கையில் நல்ல ஓட்டம். கடையை எவ்வளவோ விஸ்தரித்து விட்டான். பழைய காய்கறி வியாபாரம் ஒரு பக்கம்; இன்னொரு பக்கத்தில் வெற்றிலை பாக்கு மிட்டாய் வகைகளோடு, ஜனரஞ்சகமான பத்திரிகைகள், எட்டணா மர்ம நாவல்கள், 'கவர்ச்சி' இலக்கியங்கள் இத்யாதி அங்கே விற்பனையாயின.

தினந்தோறும் மாலையில் ஐந்தரை மணி சுமாருக்கு நான் அவன் கடைப் பக்கம் போய் விடுவேன். திருஞ்ஞானம் பிள்ளை முருகேச முதலியாரும்கூட ஐந்து நிமிஷங்கள் முன்னாலேயே அங்கு வந்து சேருவார்கள். என்னைக் கண்டதும், ராஜுவேலு பழைய





பெஞ்சு ஒன்றை வாசற்பக்கம் எடுத்துப்போட்டு விட்டு வெற்றிலை பாக்கும் புகையிலையும் எங்கள் அருகே வைத்துவிடுவான். சுமார் ஒன்றரை மணி நேரம் அவன் கடைவாசலில் பொழுதைப் போக்குவது எங்கள் நித்திய கர்மாக்களில் ஒன்றாகி விட்டது.

கொத்தவால் சாவடியிலிருந்து 'நோக்கம்போல் அள்ளி'க் கொண்டு வரப்பட்டிருக்கும் வாடல் வதங்கல்களை யெல்லாம் தண்ணீரில் நனைத்து, (அதாவது அழுக்குகளைக் கழுவுவதாக ஐதீகம்; ஆனால் ஊற வைப்பது நடைமுறை!) அவற்றைப் பளபளவென்று மாப்பிள்ளை முறுக்குடன், விற்பனைக்கு வைக்கும் ஒப்பனை சாஸ்திரம் அங்கே உண்டு. மார்க்கட்டில் எல்லா வியாபாரிகளாலும் தீண்டப்படாமல் புறக்கணிக்கப்பட்டிருக்கும் 'தாழ்த்தப்பட்ட' சரக்குகளையும் கனிந்த இதயத்துடன் வாரி யெடுப்பது ராஜுவேலு ஒருவனே. அவற்றைக் தன் கடைக்குக் கொண்டு வந்து உயர்ந்த ரகச் சரக்குகளுடன் இரண்டறக் கலந்து, எல்லாவற்றுக்கும் ஒரே உயர்ந்த அந்தஸ்து, ஒரே உயர்ந்த விலை என்று ஏற்படுத்தி, அங்கே சமத்துவத்தை அதன் பரிபூரணத் தன்மையுடன் ஸ்தாபிப்பான். ஆனால் ராஜுவேலுவைவிட அவன் கையாளும் தராசுக்குச் சமத்துவத் தாகம் அதிகம். நாலு கைப்பிடி பீன்ஸை எடுத்துத் தட்டில் போட்டால் என்ன நிறையைக் காட்டுமோ, அதே நிறையை இரண்டு கைப் பிடி அளவு எடுத்துப் போட்டாலும் காட்டும் !

ஆனால் யாராவது விற்பனைக்குக் கொண்டுவரும் பழைய பேப்பரை நிறுக்கும்போது மட்டும் சிபிச் சக்கரவர்த்தியையே நிறுத்து வாங்கிய புறாவாக மாறி விடும்!

நான் பத்திரிகைக் கடைக்குப் போகும் பாதையில் தான் மாரிமுத்துவின் வீடு இருந்தது. காலை நேரங்களில் அநேக முறைகளில் நான் கவனித்திருக்கிறேன். விடியற் காலையில் மார்க்கட்டிலிருந்து கொள்முதல் செய்து கொண்டு வந்திருக்கும் காய்கறிகளை ஒரு கோணியை விரித்து அதில் தட்டி மாரிமுத்துவும் அவன் மனைவியும் ரகம் வாரியாகப் பிரித்துக் கொண்டிருப்பார்கள். அப்போது அவர்கள் பக்கத்தில் தனியாக ஒரு குவியல் காய்கறிகள் இருக்கும். அந்தக் குவியல், அழுகியதும் வாடிப் போனதுமான பதார்த்தங்களைக் கழித்து வைத்திருப்பது! அந்தக் கழிவு, மொத்தத்தில் பத்தில் ஒரு பாகமாவது இருக்கும் என்பது என் கணக்கு. இப்படிக் கழித்துவிட்டு, சுத்தமானவற்றை மட்டும் கூடைகளில் நிரப்பி வண்டியில் வைத்துத் தள்ளிக் கொண்டுபோய், ஒவ்வொரு வீட்டு முன்பும் நின்று மாரிமுத்து குரல் கொடுக்கும்போது, முத்தையும் பவளத்தையும் ஏந்திக் கொண்டு சத்தியத் தூதன் விலை கூறுவது போல் எனக்குப் பிரமை ஏற்படும். கழிவு நீக்கப்பட்ட அந்தச் சரக்கின் விலையும் யதார்த்தமான மார்க்கெட் விலையை யொட்டித்தான் இருக்கும். அவன் கழித்த பொருளின் நஷ்டத்தை அந்தச் சத்திய தேவதைதான் அவனுக்கு ஈடு கட்டிக் கொடுக்கவேண்டும் என்று நான் நினைத்துக்கொள்வேன்.

அவனைப் பற்றி எங்கள் 'மூவர்' சந்திப்பின்போது கூட ஒரு முறை பேச்சு வந்தது. "வியாபாரத்திலேயும் தர்மத்தை நிலை நாட்டுவதற்கென்றே பிறந்தவன் மாரிமுத்து!" என்றார் முருகேச முதலியார்.

"அபூர்வப் பிறவி!" என்றார் கிருஷ்ணம்பிள்ளை.

அவர்கள் இருவருடைய கருத்துக்களும் மிகப் பொருத்தமானவை என்று நான் ஏற்றுக் கொண்டேன்.

* * *

என் நண்பர் ஒருவர் வீட்டில் கலியாணம்; காய்கறி, தேங்காய், பழம் முதலியவைகளை மொத்தமாக விநியோகம் செய்ய நம்பிக்கையான நபர் தேவை என்று என்னிடம் தெரிவித்தார். எனக்கு உடனே மாரிமுத்துவின் ஞாபகம்தான் வந்தது. அவனை அழைத்துச் சென்று 'மிகவும் யோக்கியமானவன்' என்று அறிமுகப்படுத்தினேன்.





நண்பர் நல்ல செல்வந்தர். ஒரே மகளின் திருமணமாதலால் சிறப்பாகச் செய்வதாக இருந்தது. அவருடைய தேவைகளை அறிந்ததும் மாரிமுத்து என்னிடம் வந்து தலையைச் சொறிந்தான். ''சார்! எல்லாவற்றையும் நான் விநியோகம் பண்றதுன்னு ரொம்பக் கஷ்டம். செய்யறதை, உங்க வாக்கைக் காப்பாத்றுகிறாப் போல நல்ல விதமாகச் செய்யணும். இலையையும் தேங்காயையும் நான் காண்டிராக்ட் எடுத்துக் கொள்கிறேன். காய்கறிக்கும் வாழைப்பழத்துக்கும் தம்பியிடம் சொல்லுங்க'' என்றான். லாபம் தரும் தொழிலில்கூட ஒரு மனிதனுக்கு இவ்வளவு நிதானமும் பொறுப்புணர்ச்சியுமா என்று வியந்தேன்.

ராஜுவேலுவிடம் சென்று விஷயத்தை விவரித்தேன். உடனே அவன், ''என்ன சார்! என்னிடம் முதலிலேயே சொல்லி யிருக்கக் கூடாதா? எல்லாவற்றையும் நானே எடுத்துக் கொண்டிருப்பேனே! கொஞ்சமாகப் பார்த்தாலும் இரு நூறு ரூபாய் லாபம் தேறுமே!'' என்று இழுத்தான். எனக்கு முதலில் சிரிப்பு வந்தாலும் பின், 'வியாபாரி என்றால் இப்படியல்லவா இருக்க வேண்டும்?' என்றுதான் தோன்றியது.

கடைசியில் மாரிமுத்து கேட்டுக் கொண்டபடியே காண்டிராக்டை அவனுக்குக் கொஞ்சமாகப் பிரித்து ஒரு நியாயமான விலை நிர்ணயித்து முடித்துக் கொடுத்தேன்.

கலியாண வீட்டில் அவர்கள் இருவரையும் நான் அதிகமாகச் சந்திக்க முடியாவிட்டாலும், அவர்களுடைய வியாபார வண்ணங்களைக் கண்டறியும் சந்தர்ப்பங்கள் நேர்ந்தன.

உக்கிராண அறையிலிருந்து சமையல்காரர், 'என்ன காய்கறி வாங்கிப் போட்டிருக்கு! கத்தத் திராபை! அப்புறமானால் நம்ம சமையலைக் குற்றம் சொல்றது !'' என்று யாரிடமோ எரிச்சல்பட்டுக் கொண்டிருந்தது என் காதில் விழுந்தது. காய்கறிப் பொறுப்பு ராஜுவேலுவுடையது !

இன்னொரு சமயம் ஏதேச்சையாகத் தாம்பூலப் பைகள் கட்டுமிடத்தருகே போய் நின்றேன். பழங்களை ஒரு புறமும், தேங்காய்களை ஒரு புறமுமாகக் குவித்துப் போட்டிருந்தது. அவற்றைக் கண்டதும் எனக்கு 'என்னவோ' போலிருந்தது. தேங்காய்களெல்லாம் காண்டிராக்ட்படி நிர்ணயிக்கப்பட்டிருந்த விலை அளவுக்குச் சற்று 'மூளைப்பாக'வே தோன்றின. ஆனால் வாழைப்பழங்கள் கன்ட்ராக்ட் விலை அளவுக்கு மிகவும் 'சல்லிசாக'த் தெரிந்தன. முன்னது மூத்தவன் பொறுப்பு; பின்னது இளையவனுடையது !

கல்யாணம் முடிந்து நாலைந்து நாட்களாகியிருக்கும்.

''என்னங்க, மாரிமுத்துவுக்குக் கல்யாண வீட்டுக் காண்டிராக்ட் பிடித்துக் கொடுத்தாலும் கொடுத்தீங்க. நாலைந்து நாட்களாக நம்மைக் காய வைத்து விட்டான். காய்கறியே கொண்டு வரலை. லாபம் பலமாக இருந்திருக்கும் போலிருக்கு. ஓய்வு எடுத்துக் கொள்கிறான் போலிருக்கு...'' என்று வந்து சொன்னாள் என் மனைவி.

எனக்குத் திகைப்பாக இருந்தது. மாரிமுத்து அப்படி இருக்கக் கூடியவனல்லவே !

இந்த நாலைந்து நாட்களும் வேறு ஒரு சொந்த வேலையாக அலைந்து கொண்டிருந்ததால் மாரிமுத்துவைப் பற்றிய சிந்தனையே எனக்கு ஏற்படவில்லை. ராஜுவேலு கடைப்பக்கம் கூடப் போக வாய்ப்புக் கிடைக்கவில்லை. அதனால் எந்த விவரமும் எனக்குத் தெரியவில்லை.

விஷயத்தைத் தெரிந்து கொள்ளும் ஆர்வத்துடன் மாரிமுத்துவின் வீட்டுப் பக்கம் சென்றேன். வழக்கமாக அவன் வீட்டு வாசலில் நிற்கும் வண்டியைக் காணவில்லை. வியாபாரத்துக்குக் கிளம்பி விட்டானோ என்று யோசித்துக் கொண்டு குடிசை வாசலைக் கவனித்தேன். வாசற்புறத்தில் ஆள் புழக்கத்துக்கான அறிகுறியில்லை. கதவில் சிறு பூட்டு ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது.

புதிருடன் அக்கம் பக்கம் பார்த்தேன். அச்சமயம் பக்கத்துக் குடிசையிலிருந்து ஒருவர் வெளிப்பட்டார்.

''மாரிமுத்து எங்கே?'' என்று அவரிடம் விசாரித்தேன்,

"வண்டியை விற்றுவிட்டு வீட்டையும் காலி பண்ணிவிட்டு நேற்றே போயிட்டானே!" என்றார் அவர்.

"வண்டியை விற்று விட்டானா? அப்படன்னு வியாபாரம்....?" என்று எதுவும் புரியாமல் கேட்டேன்.

"வியாபாரத்தை விட்டு விட்டானுங்க. வியாபாரத்திலே சன்னஞ் சன்னமா நஷ்டமாகிக் கொண்டே இருந்ததாம். நாலு நாளைக்கு முன்னாலே ஒரு கலியாண வீட்டில் காண்டிராக்ட் எடுத்தானாம். அதிலேயும் ஏகப்பட்ட நஷ்டமாம். கடையிலே வண்டியை விற்றுக் கடனையெல்லாம் அடைச்சிட்டு, சம்சாரத்தோட கொத்தவால்சாவடியிலே கூடை தூக்கிப் பொழைக்கலாம்னு போய் விட்டானுங்க" என்று தெரிவித்தார் அவர்.

எதிர்பாராத அதிர்ச்சியால் தடுமாறிப் போனேன். கல்யாண வீட்டில் தாம்பூலப் பைகள் கட்டுமிடத்தில் நான் கண்ட காண்டிராக்ட் விலைக்கு மீறிய தேங்காய்க் குவியலும், கணவனும் மனைவியும் அழுகிய காய்கறிகளை ஒதுக்கி வைத்த காட்சியும் என் நினைவில் தோன்றின. அவற்றின் விளைவா இவ்வளவு கொடூரமாக மாறியிருக்கிறது? என்றாலும் அந்த உண்மையை நிர்ணயிக்க முடியவில்லை. ராஜுவேலுவை விசாரித்தால் தெளிவான விவரம் அறியலாம் என்று அவன் கடையை நோக்கி நடந்தேன்.

ராஜுவேலுவின் கடை வாசலில் எனக்காக அடுத்த அதிர்ச்சி காத்திருந்தது. அவன் கடையும் பூட்டியிருந்தது!

அவன் கடையை யொட்டியிருந்த வீட்டு வாசலில் நின்ற நபரிடம், 'இன்றைக்குக் காய்கறிக் கடை அடைத்திருக்கிறதே ஏன்?" என்று விசாரித்தேன்.

"மூணு நாளா அது அடைத்துத்தான் இருக்கு. கடைக்காரன் ராஜுவேலுவைப் போலீசிலே பிடிச்சுக்கிட்டுப் போயிட்டாங்க இல்லே, அதனால்தான்!" என்றார் அவர்.

என் குழப்பம் பன்மடங்காகியது. "போலீசிலேயா? ஏன்?" என்று பரபரப்புடன் அவரிடம் விசாரித்தேன்.

"ராஜுவேலு நாலைஞ்சு நாட்களுக்கு முன்னாலே ஒரு கலியாண வீட்டுக்குக் காய்கறி சப்ளைக்குப் போயிருந்தானாம். அங்கே எடை போடுவதில் ஏதோ திருட்டுத்தனம் செய்திருக்கிறான். தராசு, படிக்கல் எல்லாம் போலியாம். இதைக் கலியாணத்துக்கு வந்திருந்த போலீஸ் அதிகாரி ஒருவர் கவனித்திருக்கிறார். கலியாண வீட்டில் வைத்துக் கலாட்டா செய்யக் கூடாது என்று மறு நாள் கடைக்கு வந்து சோதனை போட்டார். அப்புறம் என்ன? திருட்டுத் தராசும் போலி எடைக் கற்களும் வைத்திருந்ததற்காகக் கைது செய்து வழக்குப் போட்டிருக்கிறார்கள். கேஸ் ரொம்பப் பலம்னு பேசிக் கொள்கிறார்கள். பாவம், அவன் கையில் ஏதோ நாலு காசு நடமாடிச்சு. இப்போ பேர் கெட்டதோடு, அவன் கையிலிருந்ததையெல்லாம் இந்தக் கேஸ் இழுத்துடும் போல் இருக்கு" என்றார் அவர்.

எனக்கு ஏற்பட்ட குழப்பத்தில் எதையும் மனத்தில் நிலைநிறுத்தி அளவிட முடியாதவாறு வீட்டை நோக்கி நடந்து கொண்டிருந்தேன். அப்பொழுது சொல்லி வைத்தாற்போல் கிருஷ்ணம்பிள்ளையும் முருகேச முதலியாரும் எதிர்ப்பட்டார்கள்.

அவர்களைக் கண்டதும், "தங்கையா நாடாருடைய பிள்ளைகளின் விஷயம் தெரியுமா?" என்று பரபரப்புடன் கேட்டேன்.

"ஓ, தெரியுமே!" என்று அலட்சியமாகக் கூறிச் சிரித்தார் கிருஷ்ணம்பிள்ளை.

"பாவம்...." என்று இழுத்தாற்போல் ஆரம்பித்தேன்.

அதற்குள் அவர் இடைமறித்து, "இதில் என்னய்யா பாவம்? ஒருவன் அயோக்கியன். இன்னொருவன் பிழைக்கத் தெரியாத முட்டாள். இரண்டு பேரும் இந்த உலகத்திலே வாழுறதுக்கு யோக்கியதை இல்லாதவனுங்க" என்றார். ஆமாம்! பழைய கிருஷ்ணம்பிள்ளைதான் அப்படிச் சொன்னார்.

"சரியாகச் சொன்னீங்க" என்று தம் பங்குக்கு முருகேச முதலியாரும் கூறிச் சிரித்தார்.

நான் சிறிது நேரம் யோசித்துப் பார்த்தேன். அவர்களுடைய இந்த அபிப்பிராயமும் முற்றிலும் சரியென்றே எனக்குத் தோன்றியது. பிறகென்ன, நானும் அவர்களுடன் சேர்ந்து சிரித்தேன்!

கோவிந்தன் ஒரு சிறிய ஆள்

ஒரு பெரிய தொழிற்சாலையில் வேலை செய்தான்

குடும்பம் நடத்த ஆசைப்பட்டான்

ஆனுல் மணம் செய்து கொள்ளக் கட்டவில்லை

இப்பொழுது அதெல்லாம் பழங் கதையாகிவிட்டது

சிறந்த குடும்பம் நடத்துகிருன்





குழந்தைகள் பள்ளியில் படிக்கிருர்கள்

அவன் சந்தோஷமாக இருக்கிருனு?



நிச்சயமாக!

ஏன்? அவன் நேஷனல் அண்டு கிரிண்ட்லேஸ் பாங்கியில் பணம் சேமித்தான். ஐந்தே ரூபாயுடன் கோவிந்தன் ஒரு சேமிப்புக் கணக்கைத் துவங்கினுன். அவனுடைய பணம் பத்திரமாக இருந்ததுடன் வருஷத்திற்கு 3 சதவீதம் வட்டியும் கொடுத்தது. ஒவ்வொரு மாதமும் அவன் ஒழுங்காகச் சேமித்து வந்தான். கொஞ்ச காலத்திலேயே கணிசமான பணம் பாங்கியில் சேர்ந்து விட்டது. அவன் புத்திசாலி. தன் வருங்காலத்திற்காக, தன் குடும்பத்திற்காக, சந்தோஷமான, சிறந்த நாளைக்காக... அவன் சேமித்து வைத்தான்.

உங்களுடைய குடும்பத்திற்காக சேமிப்பது பற்றி நீங்கள் எப்பொழுதாவது சிந்தித்திருக்கிறீர்களா?

# நேஷனல் அண்டு கிரிண்ட்லேஸ் பாங்க் லிட்.,

இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது

கிளைகள்: சென்னை: 3, நார்த் பீச் ரோடு, 378, நேதாஜி சுபாஷ் சந்திரபோஸ் ரோடு (வாயிட்ஸ் கிளை) 6, அரமனைக்காரத் தெரு 158, மவுண்ட் ரோடு.

தூத்துக்குடி: 44, பீச் ரோடு

HGB/7D-TAM

# காலம் கடந்த பின்...

கிருஷ்ணா



கடிதத்தைப் படித்து முடித்ததும் சீதாவின் நெற்றி நடுவே சுழித்தது. சில வினாடி காலம் பொட்டுக்களில் இரு விரல்களையும் அழுத்தப் பதித்துச் சிந்தித்த அவள் உடனேயே ஒரு முடிவுக்கும் வந்து விட்டாள்.

'ஆம்; போகத்தான் வேண்டும்!....'

சீதா புறப்பட்டு விட்டாள்.

''வருவதற்கு ஒரு வாரமாகுமா டீச்சர்?'' என்று கேட்டாள் ராதா.

''சொல்ல முடியாது ராதா! ஆறு மாதங்கள் ஆனாலும் ஆகலாம்.....''

டீச்சரின் இந்தப் பதிலைக் கேட்டு மாணவிகள் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டனர். வரிசையாக இருந்த தையல் இயந்திரங்கள் ஒன்றில் துணியைத் தைத்துக் கொண்டிருந்த ஒரு மாணவி தைப்பதை நிறுத்தி விட்டு ஆசிரியையின் முகத்தைப் பார்த்தாள்.

''அப்படியானால் .... அது வரையிலும்..'' என்று இழுத்தாள் ராதா.

''கவலைப்படாதே ராதா ... வகுப்புக்கள் எப்பொழுதும் போல நடக்கட்டும். நான் இல்லா விட்டால் என்ன? நீயும் உன் அண்ணாவும் பொறுப்பாய்க் கவனித்துக் கொள்ள மாட்டீர்களா?'' என்று உறுதியாகச் சீதா சொன்னவுடன் ராதா அதைத் தலையசைத்து ஏற்றுக் கொள்ளத்தான் வேண்டியிருந்தது. ராதாவும் அவள் அண்ணனும் உதவித் தையல் ஆசிரியர்கள்.

சீதா புறப்பட்டு விட்டாள்.

வண்டி செங்கல்பட்டைத் தாண்டியதும் சீதாவின் மனத்தில் நீராவிக் கொப்புளங்கள் போல் எண்ணக் குமிழிகள் மேல்நோக்கி எழும்பின.

ஒரு வேளை அவள் புறப்பட்டதே தவறு தானோ? கிட்டத்தட்ட பத்து வருஷங்கள் இருக்கும் இழையைப் பார்த்து. பத்து வருஷங்களா? மேலேகூட இருக்கும். அந்தக் குடும்பத்திலிருந்து சீதா கத்திரிக்கப்பட்டு இருபது வருஷங்கள் இருக்காதா? நாகம்மாளின் பெரிய பெண்ணுக்கே பத்தொன்பது இருக்குமே!..

எத்தனையோ ஆண்டுகளுக்குப் பிறகு வந்த 'அந்த'க் கடிதத்தைச் சீதாவிடம் கொடுத்தார் தபால்காரர். இருபது வருஷகால உறுதியையும் உடைத்தெறிந்து விட்டுச் சீதாவைப் புறப்படச் செய்தது அந்தக் கடிதமோ அல்லது கடிதத்தில் இருந்த உருக்கமான வாசகங்களோ அல்ல. முன்பின் தெரியாத யாருக்கானாலும் சரி, ஓர் அவசரம், அவசியம் என்றால் சீதா கண்டிப்பாகப் புறப்பட்டுத்தான் இருப்பாள். உலகத்தில் இன்பங்களைக் காணாமல் துன்பங்களையே கண்ட சீதாவுக்கு உலகம் முழுவதிலுமே இரக்கம் பெருகியிருந்தது.

பொன்வளனூர் கிராமம் வருவது வரையிலும் இருந்த தைரியம் அந்த மண்ணை மிதித்ததும் ஓடியே போய் விட்டது. அடுத்த வண்டியிலே சென்னைக்குத் திரும்பி விடலாமா என்



னும் தோன்றியது. 'வந்தது தான் வந்தாகி விட்டது. இனி என்ன? முன் வைத்த காலைப் பின் வைக்கக் கூடாது.'

மாட்டு வண்டி ஒன்றைப் பேசிக் கொண்டு புறப்பட்டாள் சீதா. வழி நெடுகிலும் பழைய தோற்றங்கள் தான். பசுங் கழனிகள், ஏற்றங்கள், பனை மரங்கள்! ஆக எல்லாமே பழசு தான். காலத்தின் ஓட்டத்தி னால் அந்தக் குக்கிராமத்தில் எந்தவிதமான புதுமையையும் செய்ய முடியவில்லை போலும்!

பழைய காலத்துத் தணிந்த கூரை வீட் டின் முன் வண்டி நின்றது.

வண்டிச் சத்தத்தைக் கொடுத்தனுப்பி விட்டுப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு சீதா உள்ளே பிரவேசித்தாள்.

''சீதா! வந்தாயா, அம்மா! இந்தப் பாவி யின் முகத்தில் விழிக்கவும் உனக்கு மனசு வந்ததாம்மா?....''

படுக்கையில் கிடந்த மெலிந்த உருவம் தன் பலம் அனைத்தையும் திரட்டிக் கொண்டு அன்பாகச் சீதாவை வரவேற்றது. சீதா தன் மாமியாரின் கால்மாட்டில் உட்கார்ந்து கொண்டாள். விலகியிருந்த போர்வையை இழுத்து மூடினாள்.

''சீதா.... எனக்குத் தெரியும், நீ வந்து விடுவாய் என்று.....'' மிருவி உணர்ச்சி வசப்பட்டுத் திணறினாள்.

சீதா நேருக்கு நேர் விழிகளைப் பார்க்க முடியாமல் தலையைக் குனிந்து கொண்டாள்.

''சீதா! ஒரு வாரமாச்சு. ஒரு கை கவா தினமே இல்லே. ஒரு காலும் மரத்தாற்போல் இருக்கிறது. பேச்சைக் கவனித்தாயா? அது உளறலாகி விட்டது. எனக்கு இவ்வளவும் வேணும் சீதா. உலகமே அப்படித்தான் சொல்லிக் கொண்டிருக்கிறது.''

''வைத்தியம் ஏதாவது....''

''வைத்தியமா?'' மிருவி கோணலாகச் சிரித்தாள் பதிலுக்கு.

சீதா பெருமூச்சு விட்டாள்.

''இதோ பாரு, சீதா! இனிமேல் நான் பிழைக்கப் போவதில்லே. பெற்ற தோஷத் துக்கு அவன் தானாகவே வந்து கொள்ளி போடட்டும். ஒரு வார்த்தைகூடச் சொல்லி அனுப்பாதே. என்னுடைய நகைகள் இருக்கு பாரு. அதையெல்லாம் நீயே எடுத்துக்கொள். நீ நடத்துகிற தையல் பள்ளிக்கூடத்தைப் பற்றி நானும் கேள்விப்பட்டேன். உன்னாலே பத்துப் பேர் பிழைக்கிறார்கள். அந்த நல்ல காரியத்துக்கு என் நகைகள் பயன்படட்டும்.''

''இப்போது அதைப் பற்றி என்ன அம்மா! உடம்பை அலட்டிக் கொள்ளாதீர்கள். நிம் மதியாக இருங்கள். நான் போய்க் குளித்து விட்டுக் காப்பி போட்டுக் கொண்டு வரு கிறேன்'' என்ற சீதா பெட்டியைத் திறந்து



மாற்றுடையை எடுத்துக் கொண்டு கிணற் றடியை நோக்கிச் சென்றாள்.

மடமட வென்று நீர் இறைத்துத் தலை யில் ஊற்றிக் கொண்டாள். வாளியைத் தலைக்கு மேல் உயர்த்துகையில் நெற்றி விளிம் பில் வாளியின் முனை இடித்து விட்டது. 'அம்மா!' என்று வேதனையுடன் அடிபட்ட இடத்தைத் தடவுகையில், தலை முடிகளால் மறைக்கப்பட்டிருந்த ஒரு வடு......உள்ளத் திலும் வலித்தது. கையால் நெருடினாள். நினைவுகள் புரண்டன.

அன்றும் இதே கிணறுதான். இதே துவைக்கும் கல்தான்.

சுந்தரம் கையில் கழியுடன் நின்றான்.

''அடித்து அடித்துப் பெண் பாவத்தைக் கொட்டிக் கொள்ளாதேடா!'' என்று மேலுக்கு — மீனாட்சி — சீதாவின் மாமியார் சொன்னாள்.

''பாவமானாலும்! புண்ணியமானாலும்! ஒன்று அவள் சாகவேண்டும், இல்லை, நான் சாக வேண்டும்!''

கழி ஓங்கி இறங்கியது.

நெற்றியைப் பிடித்துக் கொண்டு விழுந் தாள் சீதா. ரத்தம் வழிந்தது.

நெற்றி வடுவை வருடினாள் சீதா. மேலே ஊற்றப்படும் குளிர் நீருடன் கண்களின் வெதுப்பு நீரும் கன்னத்தில் வழிந்தன. காலம் எவ்வளவுதான் மாறினாலும் சில நிகழ்ச்சிகள் வடுப் போலவே நன்றாகப் பதிவாகி விடு கின்றன அல்லவா?

சுந்தரத்தைச் சீதா என்று கைப்பிடித் தாளோ அன்றே இரு குடும்பங்களுக்குள் ளும் கலக விதை விழுந்து விட்டது.

சண்டை எதற்காக ஆரம்பித்தது என்று தெரிவதற்குள்ளேயே அது பூதாகாரமாக உருவெடுத்து விட்டது.

சீதாவின் தந்தை செய்வதாகச் சொன்ன தங்க ஒட்டியாணத்தையும், கொடுப்பதாகச் சொன்ன ரொக்கத்தில் ஆயிரத்தையும் கொடுக்காமல் ஏமாற்றி விட்டாராம்! கார ணம் இதுதான்; பெண்ணின் கழுத்திலோ தாலி ஏறியாகி விட்டது.

எப்படியோ சீதா புக்ககம் வந்து சேர்ந்து விட்டாள்.

குற்றங்கள் ஒவ்வொன்றாக அதிகரிக்க ஆரம்பித்தன. கல்யாணத்தில் போட்ட காப்பி தண்ணீராக இருந்ததிலிருந்து நாயனம் வாசித்த லட்சணம் வரையில் குற்றமாகவே சொல்லப்பட்டது.

கடைசியாகச் சீதா பிறந்த வீடு திரும்பி னாள். அங்கே ஊரில் எல்லோரும் பேச ஆரம் பித்தவுடன் அவளை அவளுடைய தகப்பனார் புக்ககத்தில் கொண்டு விடுவார்; சுவரிலடித்த பந்து போல் அடுத்த வாரமே திரும்ப வந்து நிற்பாள் சீதா. இப்படிக் கொஞ்ச காலம் நடந்தது. கடைசியில் ஒட்டியாணம் செய்து,- ஆயிரம் ரூபாயும் கொடுத்து மேற் கொண்டு கொசுறும் கொடுத்த பின்பும் கூட அன்றைக்குப் பிடித்த பிடியிலிருந்து மீனாட்சியம்மாள் இறங்கிக் கொள்ளத் தயாராக இல்லை.

சீதாவின் அழகு முகம், அவளுடைய கூந் தல் வனம், கண்கள், வாழைத் தண்டு போன்ற உருண்டையான கரங்கள்.... எல் லாமே தவறானதொரு கவர்ச்சியாகத் தென் பட்டன மீனாட்சிக்கு. தனக்கு வேண்டாத மருமகளாகி விட்ட சீதாவை, படிப்படியாக மகனுக்கும் வேண்டாத மனைவியாக்கிக் கொண்டிருந்தாள் மீனாட்சி.

சுந்தரம் அப்பாவி. இரண்டாம் பாட புத்தகத்தில் வரும் வண்ணானும் கழுதையும் கதையைப் போன்றவன். அம்மா சொல்வது அத்தனையும் உபநிஷத வாக்கியங்களாகவே தோன்றும் அவனுக்கு. காரணம் அவன் தகப்பனில்லாமல் தாயின் சிறகடியில் ஒதுங் கியே வளர்ந்தவன். திட நிலையற்ற மனம்; சுயமாக நிர்ணயிக்க முடியாத பலவீனம்.... அப்புறம் கேட்பானேன்!

மாமியார், கணவன் இருவரும் பொல்லாத வர்களாயிருக்கவே இடுக்கியில் மாட்டிக் கொண்ட நிலையில் சீதா அந்தக் குடும்பத் தில் தவித்த தவிப்பு! அப்பப்பா!

தன் பெண்ணின் விடியாத துக்கத்துக் காக உருகி உருகியே சீதாவின் தகப்பனார் இறந்தார். தாயற்ற பெண்தானே சீதா. இப்பொழுது தந்தையும் இல்லாது ஆகி விடவே மீனாட்சியின் குளிர் அடியோடு விட்டுப் போயிற்று. ஒரு வழியாகச் சீதாவை இம்சித்து அடித்து மிரட்டி மறு கல்யாணத் துக்கு எழுதி வாங்கிக் கொண்டு விட்டான் சுந்தரம். படிப்படியாக ஒதுக்கப்பட்டு வந்த சீதா, முடிவாகவும் ஒதுக்கப்பட்டாள்.

இளையாள் நாகம்மாள் வந்தபின் மீனாட்சி யின் கொடி சற்று இறக்கம் கண்டது. நாகம் மாள் சுந்தரத்தைத் தன் வசமாகத் திருப்பிக் கொண்டாள். நாகம்மாள்தான் உலகம் என் னும் நிலைக்குச் சுந்தரம் வந்தவுடன் மீனாட்சி யைத் துரும்புக்குச் சமானமாக உதறிவிட்டுக் கணவனுடன் கிளம்பி விட்டாள் நாகம்மாள்.

ஆயிற்று. உடம்பு பலமும் பண பலமு மாக மீனாட்சி இருபதாண்டுகளை ஓட்டி விட் டாள். நாடி நரம்புகள் தளர்ந்து, தோல் சுருங்கி, கண்களிலும் பள்ளம் விழுந்தவுடன் இறவாத மனமும் இறந்து கொண்டது.

குப்பை இருக்கும் இடத்தைக் குனிந்து பெருக்கவே மூச்சு முட்டியது. காப்பி போட் டுக் கொள்வதற்குள் கை நடுக்கத்திலும் ஒன்று பாலாவது கொட்டும்; அல்லது டிக்காக்ஷனா வது சாயும்.

பல்லைக் கடித்துக் கொண்டாள் மீனாட்சி. 'யாரும் வேண்டாம், எல்லாரும் ஒழியட்டும். என் கட்டை நல்ல கட்டை. புண்ணிய ஜீவன். 'பொடுக்'கென்று போய் விடும்' என்று புலம்பிக் கொண்டே நகர்ந்து நகர்ந்த வாறு தன் காரியங்களை யெல்லாம் பார்த்துக் கொண்டாள்.

அந்தப் புண்ணிய ஜீவன் போக மறுத் தது. இரண்டு நாள் ஜுரத்தில் ஒரு கையும் காலும் சற்று வாங்கி விடவே, தன் கட் டையைப் படுக்கையைத் தவிர வேறு எங்கும் போட முடியாத நிலை ஏற்பட்டு விட்டது மீனாட்சிக்கு.

பக்கத்து வீட்டுப் பெண் நாலு நாட்களுக் குக் கவனித்துக் கொண்டாள். நாலு நாட்கள் என்ன, நாலு மணி நேரத்திலேயே கிழவி அவஸ்தையை உணர்ந்து விட்டாள். சதா கண்ணீரோடு புழுவாய்த் துடித்தாள்.

# ஒவ்வொரு தூவுதலிலும் இரட்டிப்புச் சருமப் பராமரிப்பையளிக்கும் டால்கம்




அதைப் போன்றுதான் குடிகூரா டால்கம் இயங்கு றது—குடிகூரா இலேசாக, மருந்து கலந்திருப்பதால். மிகச் சில டால்க்குகளே இயங்கும் வழியில் உங்களுடைய சருமத்தை சிறப்பாகப் பேணுகிறது.

குடிகூரா வேர்க்குரு தோன்றாமல் தடுக்கிறது. அழற்சியுண்ட சருமத்திற்கு இதமளிக்கிறது. மற்றும் துர்நாற்றத்தையெழுப்பும் வியர்வையை உறிஞ்சி உங்களை நாள் முழுவதும் உடல் பூராவும் பரிமள புத்துணர்ச்சியுடனிருக்க வைக்கிறது. குடிகூரா தூவிக்கொள்ளும் ஒவ்வொரு தரமும் அதன் சேர்த்தியாயிணைந்த ஒரு தனிப்பட்ட சுகந்தம் உள்ளக் கிளர்ச்சியைத் தூண்டுகிறது.

இன்றே ஒரு குடிகூரா டப்பா வாங்குங்கள்—110 வருஷத்திய பரம்பரையையுடையது இந்த டால்கம்.

## குடிகூரா

குடும்ப முழுவதற்கும் ஏற்ற சர்வ-காரிய டால்கம்

குடிகூரா ஆயின்மெண்ட் புண்கள், வெளிச் சொறிசிரங்குகள் மற்றும் இதர சரும அழற்சிகளையும் குணப்படுத்தி விரைவில் சரும ஆரோக்கியத்தைச் சேர்க்கிறது.

NATIONAL C 30162A

---

"பெரிய வேட்டையோ?"



"இல்லை — மூட்டைதான்!"

# tik-20






## டிக்-20

மூட்டைப்பூச்சிகளைக் கொல்லுகிறது

TFY-3

# வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்

## சிவப்பு லேபில்

இருமல், ஜலதோஷம், இன்ப்ளூவென்ஸா
மூச்சுக்குழல் தொற்றுநோய்கள்
காசநோய் ஆகியவற்றிற்குச் சிறந்தது.




வெறும்
மருந்து
மட்டுமல்ல
நம்பிக்
கைக்குப்
பாத்திர
மான
டானிக்கும்
இதுவே.

காலத்தால் தேறிக் கைவந்த மருத்துவ நிபுணர்களுக்கு இணங்க தயாரிக்கப்படும், நம்பிக்கைக்குரிய டானிக்காகிய வாட்டர் பரீஸ் காம்பவுண்ட், மருத்துவத் துறையினர்களால் பெரிதும் சிபார்சு செய்யப்படுகின்றது

**மருந்தாகப் பயன்படும்:** இருமலையும், ஜலதோஷங்களையும் சட்டென்று வன்மையாகக் கண்டித்து... நுரையீரல்களைத் தெளிவுறச் செய்யும் கபமறுக்கும் மருந்துகளாகிய கிரியோஸோட், குவயகால் ஆகிய இரண்டும் வாட்டர்பரீஸ் காம்பவுண்டிலே அடங்கியுள்ளன.

**டானிக்காகவும் உதவும்:** நோய்களை எதிர்க்கும் சக்தியை உடம்பு தானாகவே உண்டுபண்ணிக்கொள்ளுமாறு உதவுவதோடு மீளமீளத் திரும்பிவரும் தொற்றுநோய்களினின்று நீடிய பாதுகாப்பை அளிக்கிறது வாட்டர்பரீஸ் காம்பவுண்ட்; பசியைத் தூண்டி, ஜீரண சக்திக்குத் துணைபுரிந்து, இரத்தபுஷ்டியளித்து, இழக்கநேர்ந்த தாதுப் பொருள்களுக்கு ஈடுசெய்கிறது.

வார்னர்-லாம்பர்ட் பார்மஸூடிகல் கம்பெனி (வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். ஏ. வில் இணைக்கப்பெற்றது)

WCRY-I-TAM

தெளிந்துவிட்ட மனத்தில் சீதாவின் உருவம் தான் ஒளியாய்த் தெரிந்தது. சீதா சென்னையில் ஒரே ஒரு தையல் இயந்திரத்துடன் தொழில் ஆரம்பித்து இப்பொழுது ஒரு பெரிய பள்ளிக் கூடமே நடத்துகிறாள் என்பதை யெல்லாம் உறவினர் வீட்டுக் கலியாணத்துக்காகப் போயிருந்த பொழுது கிரஜி தெரிந்து கொண்டிருந்தாள்.

பக்கத்து வீட்டுப் பெண்ணைக் கொண்டே ஒரு கடிதமும் சீதாவின் விலாசத்துக்கு எழுதிப் போட்டாள் கிரஜி.

பழைய நினைவுகளிலிருந்து மீண்ட சீதா குளித்து விட்டு, அடுப்பைப் பற்ற வைத்து விரைவில் காப்பியைப் போட்டாள். கையில் காப்பியை எடுத்துக் கொண்டு அவள் கூடத்துப் பக்கம் வந்தவுடன் அங்கே ஒரு பெட்டியும் படுக்கையும் வைக்கப்பட்டிருந்ததைக் கண்டு திடுக்கிட்டாள். மீனாட்சி படுத்திருந்த அறைக்குள் அவள் நுழைந்ததும் அங்கு நின்று கொண்டிருந்தவரும் காலடி அரவம் கேட்டுத் திரும்பினார்.

''நீ..... நீ.....'' என்று திகைத்தார் அவர்.

''நான் வரச் சொல்லி எழுதினேன். இந்தப் பாவிக்கும் ஒரு நல்ல கதி கிடைக்கும் என்று பகவான் கருணை காட்டி விட்டான். என் கடைசிக் காலத்துக்குத் தெய்வம் போல வந்து விட்டாள் சீதா'' என்றாள் மீனாட்சி.

சுந்தரம் பதிலே பேசவில்லை.

சீதா அவரை ஏற இறங்கப் பார்த்தாள். ஒருவிதமான சலனத்தையும் காட்டிக்கொள்ளாமல் காப்பியை ஆற்றி மீனாட்சிக்கு ஒவ்வொரு வாயாக விட்டாள். சற்று நேரத்துக்கெல்லாம் இன்னும் ஒரு டம்ளரில் காப்பி வந்து சேர்ந்தது. சுந்தரம் அதை எடுத்துக் கொண்டார்.

''நீ இப்பொழுது எதற்காக இங்கு வந்தாய்? நான்தான் சொல்லியனுப்பவே இல்லையே....'' என்று மகனை நோக்கி முனகினாள் கிழவி மீனாட்சி.

''நீ சொல்லியனுப்பாவிட்டால் எனக்குத் தெரியாதா? உடம்பு சரியில்லாமல் படுத்து விட்டாய் என்று பக்கத்து வீட்டுக் கிச்சாமி வந்தபோது சொன்னான்.... எனக்கும் இப்பொழுது பள்ளிக்கூடம் லீவுதானே.... பார்த்து விட்டுப் போகலாம் என்று வந்தேன்'' என்றார் சுந்தரம்.

கிழவி பேசவில்லை. மகன் எதற்கு வந்திருக்கிறான் என்று அவளுக்குத் தெரியாதா என்ன? கல்லும் கல்லாய்ப் பழைய காலத்து நகைகள் இருக்கின்றனவே. இந்தக் காலத்தில் ஐம்பது சவரன் என்றால் இலேசா? பள்ளிக்கூட வாத்தியார் வேலையில் என்னத்தைப் புரட்டிவிட முடியும்? நாகம்மாளோ வந்த சுருக்கிலேயே பெற்றுத் தள்ளி விட்டாள். மூத்தது இரண்டும் பெண். இருபதும் பதினெட்டுமாய் வயதை விழுங்கிவிட்டு நிற்கிறார்கள்.

சுந்தரத்துக்குத் தவிப்புத்தான். பெண்களைக் கலியாணம் செய்து கொடுக்க வேண்டும். பிள்ளைகளைப் படிக்க வைக்க வேண்டும். குடும்பம் நடத்தியாக வேண்டும்! நாகம்மாளுக்கு வேறு சதா நோய். அடிக்கடி அவள் படுத்து விடுவாள்.

சுந்தரம் சற்று நேரம் நின்று பார்த்தார். மீனாட்சி ஒன்றும் பேசவில்லை.



ஹோட்டல்காரர்: நேற்று நீங்கள் டிபன் சாப்பிட்டு விட்டுப் பணம் கொடுக்காமல் போய் விட்டீர்கள்!

வந்தவர்: இருக்காது, அப்படி நான் போயிருந்தால் இப்ப நான் இங்கு வந்திருக்க மாட்டேன்!

சுந்தரம் மெதுவாகக் கிணற்றடிப் பக்கம் நகர்ந்தார். குளித்து விட்டு மாற்றுடை உடுத்திக் கொண்டு விபூதி எடுப்பதற்காகப் பூசை அறைக்குள் வந்தவர் ரேழியில் பளபளவென்று துடைக்கப்பட்டு நீர்த் துளிகள் மின்னும் பசும் இலையையும், வெள்ளி டம்ளர் நிறைய நீரையும் கண்டார்.

விபூதி இட்டுக் கொண்டு இலையின் முன் உட்கார்ந்து கொண்டார் சுந்தரம். சீதா பரிமாற ஆரம்பித்தாள். மெல்லிய இரண்டு பொன் வளையல்களுடன் கூடிய அந்தக் கரங்கள் இரண்டும் தமக்குச் சொந்தமானவை என்ற நினைப்போடு சுந்தரம் அவளை ஒரு முறை நிமிர்ந்து பார்த்தார்.

இருபது வருஷ காலம் அவளை ஒன்றும் அப்படிப் பிரமாதமாக மாற்றிவிட வில்லை. தலையின் உச்சியில் இரண்டொரு நரைகள் தெரிந்தன; அவ்வளவுதான்.

சுந்தரம் ஏனோ பெருமூச்சு விட்டார்.

தகாததொன்றைச் செய்து விட்ட குற்ற உணர்வோடு சாப்பிட்டார். சீதாவுடன் பேச முன்னிட்ட நாவை அடக்கிக் கொண்டார்; உதடு வரையிலும் ததும்பி வந்த வார்த்தைகளைச் சிரமத்துடன் விழுங்கிக்கொண்டார். இலையில் அவருக்குப் பிடித்தமான உணவு வகைகள் உள்ளன்புடன் உணர்ந்து செய்த சுவையுடன் பரிமாறப்பட்டிருந்தன. அதை உணர்ந்தும் வெளிப் பேச்சற்ற நிலையில் சாப்பிட்டு முடித்தார் சுந்தரம். அவர் சுவைத்து ருசித்துச் சாப்பிட்டதைப் பார்த்தால், அந்த மாதிரி சாப்பிட்டே ரொம்ப காலம் ஆகியிருக்கும் போலிருந்தது.

மறு நாள் காலையில் ஊருக்குப் போய்விடுவார் என்று எதிர்பார்த்திருந்தாள் சீதா. காலையில் ஐந்து மணிக்கே வண்டி. ஆனால் இரவு திண்ணையில் படுத்திருந்த சுந்தரம் விடிந்து ஆறு மணிக்கு மேல்தான் எழுந்தார்;

பத்து நாட்கள் ஓடி விட்டன.

மீனாட்சியம்மாள் நிலைமை நாளுக்கு நாள் மிகவும் மோசமாகி விட்டது. படுக்கையை

விட்டு நகர முடியாத நிலையில் சீதா அவளைத் தேர்ச்சி பெற்ற ஒரு நர்ஸின் திறமையோடும், தாய்மையின் கனிவோடும் கவனித்து வந்தாள்.

உதய நேரம். பூக்களின் மலர்ச்சி ஆரம்பிக்கும் அந்த வேளையில் சுந்தரத்தின் வீட்டில் 'மூணுக் மூணுக்'கென்று எரிந்து கொண்டிருந்த விளக்கில் சுடர் அணைந்து புகைந்தது.

மீனாட்சியின் பாபங்கள் சாம்பலாகி நீரில் கரைக்கப்பட்டன. பொன்வளனூர் கிராமம் முழுதும் திரண்டு கிடந்தது மீனாட்சியின் வீட்டில். நாகம்மாளும் தன் குழந்தைகளுடன் வந்திருந்தாள். மேலியின் காரியங்கள் 'ஜாம் ஜாம்' என்று நடந்தன.

நாகம்மாள் உள்ளூறக் குமுறிக் கொண்டிருந்தாள். கூட்டத்தினால் எதையும் சொல்லிக் கொள்ள முடியாத நிலை அவளுக்கு. ஒதுங்கினாற் போல் ஒதுங்கிப் புருஷனிடம் பாத்தியதை கொண்டாடி, நகைகளைப் பிடுங்கிக் கொள்ள எப்படியோ சமயத்துக்கு வந்து விட்டாள் என்று தனியாகச் சிக்கிக் கொண்டவர்களிடம் சீதாவைப் பற்றித் தூற்றினாள் நாகம்மாள். அவளுக்கேற்றபடியே அவர்களும் விசிறி விட்டார்கள்.

எல்லாக் காரியங்களும் முடிந்தன. வந்தவர்கள் எல்லாரும் ஒவ்வொருவராகப் புறப்பட்டுக் கொண்டிருந்தனர். சீதாவும் தன் பெட்டி, படுக்கைகளை யெல்லாம் சித்தப்படுத்திக் கொண்டிருந்தாள்.

வாசற்படியருகில் நாகம்மாளும் சுந்தரமும் நின்று கொண்டிருந்தனர். நாகம்மாள் உருட்டி உருட்டி விழித்தபடியே கணவனின் காதருகில் கிசுகிசுத்தாள்.

''கேளுங்கள்! கம்மா நின்று கொண்டிருக்கிறீர்கள். நகைகளை யெல்லாம் படுக்கையோடு படுக்கையாகச் சுருட்டி எடுத்துக் கொண்டு போய் விடப் போகிறாள்....''

சுந்தரத்துக்குத் தயக்கம்! தாயை இழந்த துன்பம் வேறு. அதுவுமல்லாமல் இந்த ஒரு மாதத்தில் மௌனப் பணிவிடைகளாலேயே சீதா அவரைக் கவர்ந்திருந்தாள்; ஒரு புனிதமான நினைவை அவர் உள்ளத்தில் பரவ விட்டிருந்தாள்.

பளபள வென்று துடைத்துச் சுத்தப்படுத்தப்பட்ட சுந்தரத்தின் உள்ளத்தில் சீதா 'பளிச்'சென்று கம்பீரமாகத் தெரிந்தாள். அவள் அருகில் நெருங்கிப் பேச, அவருடைய குற்றமே அவரைக் கூசவைத்தது.

''நீங்கள் கேட்கிறீர்களா? நானே கேட்கட்டுமா? ஊரில் எல்லாரும் சொல்லிக் கொள்கிறார்கள். உங்களைக் காவல் காக்க அனுப்பி என்ன பிரயோசனம்? கிழங்காட்டம் நகைகளை யெல்லாம் கிழவி விற்று அந்தப் பணத்தை யெல்லாம் இவள் தையல் இழவுக்கு எழுதி விட்டாளாம்....''

நாகம்மாள் பல்லைக் கடித்துப் பொருமினாள். மீண்டும் கணவனை நோக்கி உருட்டி விழித்தாள்.

சுந்தரம் அறைக்குள் நுழைந்தார். நாகம்மாள் கதவு மறைவில் நகர்ந்து கொண்டாள்.

''நீயிருக்குப் புறப்பட்டுவிட்டாயா சீதா?''

''புறப்படலாம் என்றிருக்கிறேன்'' என்றாள் சீதா நிலம் நோக்கியபடியே.

''அப்படியா! பகல் வண்டிக்கா?''

''ஆமாம்'' என்றாள் சீதா:

கதவு மறைவிலிருந்து எட்டிப் பார்த்துக் கணவனை மீண்டும் விழித்தாள் நாகம்மாள்.

சுந்தரம் ஒரு முறை எச்சிலை விழுங்கிக் கொண்டு ''ஆமாம், அம்மா ஏதோ நகைகளை வைத்திருப்பதாக....'' என்று அவர் இழுத்துச் சொல்வதற்குள் சீதா முந்திக் கொண்டு, ''ஆமாம்'' என்றாள்.

சுந்தரம் தொண்டையைச் சொறிந்து கொண்டு, ''அம்மா செய்ததும் நியாயம் தான் சீதா. உன்னால் எத்தனையோ பெண்களுக்கு வேலையையும் திறமையையும் கொடுக்க முடியும். உனக்குப் பணத்தின் தேவை பெரிதுதான்....'' என்று இழுத்தார்.

''யார் அப்படிச் சொன்னது?''

சுந்தரம் சீதாவின் இந்தப் பதிலால் திடுக்கிட்டுச் சீதாவை முகத்தோடு முகம் நேராகப் பார்த்தார்.

சீதா எழுந்து உள்ளே சென்றாள். திரும்பி வரும் சமயம் ஒரு பெட்டியுடன் வந்தாள்.

''இதற்குள் அம்மா என்னிடம் கொடுத்த நகைகளெல்லாம் இருக்கின்றன. அவர்கள் கொடுத்த வில்லும் இருக்கிறது. நான் இந்த நகைக்காகவோ, சொத்துக்காகவோ இங்கே வரவில்லை. என் கணவரின் தாயார் நோய் வாய்ப்பட்டிருக்கிறார்; அவருக்குப் பணிவிடை செய்தால் அடுத்த ஜன்மத்திலாவது ....

சீதா திடீரென்று குலுங்கிக் குலுங்கி அழுது விட்டாள். ''சீதா....'' என்றவாறே அவள் தோளைத் தொட நீண்ட தம் கையைப் பின்னால் இழுத்துக் கொண்டார் சுந்தரம்.

மடமட வென்று உள்ளே நுழைந்த நாகம்மாள் பெட்டியைத் திறந்து வில் பிரகாரம் நகைகளை ஒவ்வொன்றாகச் சரி பார்த்துக் கொண்டிருந்தாள்.

ஒரு விநாடிக்குள் தன் பழைய உறுதியைத் திரும்பப் பெற்றுவிட்ட சீதா பெட்டி படுக்கைகளை எடுத்து வாசல் திண்ணையில் கொண்டு வைத்து விட்டு வந்தாள்.

''நான் போய் வரட்டுமா?''

''நீ போகத்தான் வேண்டுமா சீதா ?'' என்ற சுந்தரம் அழுதே விடுவார் போல் இருந்தது.

''நீங்கள் போகக் கூடாது பெரியம்மா!'' என்று அவருடைய குழந்தைகளில் இரண்டு சீதாவின் கரங்களைப் பற்றிக் கொண்டன.

''நீ போக வேண்டாம் சீதா! இந்த வீட்டிலேயே இரு. நான் கவனித்துக் கொள்கிறேன்'' என்றார் அவர் கெஞ்சலாக.

சீதா ஒரு புன்னகை பூத்தாள்.

''மன்னித்து விடுங்கள். உங்களை நான் என்றுமே எதிர்த்துப் பேசியதில்லை. இன்று பேசுகிறேன். நான் போகத்தான் வேண்டும்.''

சீதா நகர்ந்து விட்டாள்.

வாசலில் வந்து நின்ற மாட்டு வண்டியில் சீதா ஏறிக் கொண்டாள். பொன்வளனூர் ரயில்வே நிலையத்தை நோக்கி வண்டி வேகமாகக் கிளம்பியது.

சுந்தரம் வண்டி மறையும் வரையிலும் பார்த்துக் கொண்டே யிருந்தார். யாரும் இல்லாத இடமாகப் பார்த்துப் போய் உட்கார்ந்து கொண்டு மன உளைச்சல் தீர ஒரு தரம் அழுது விட்டு வரவேண்டும் போலிருந்தது அவருக்கு.

# மழை விட்டும்...

மேஜர் மார்த்தாண்டம் தினம் அந்த வழியேதான் 'வாக்கிங்' போய் வருவார். தினமும் குறிப்பிட்ட இடத்திலே ஒரு பிச்சைக்காரன் உட்கார்ந்து பிச்சை கேட்ட வண்ணம் இருப்பான்.

அவனுக்கு ஒன்றும் பிச்சை கொடாமல், ஒரு நாள் போனார், இரண்டு நாள் போனார். அப்புறம் அவர் மனம் கேட்கவில்லை. இரண்டு பைசா பிச்சை போட்டார். கடைசியில் தினம் 'வாக்கிங்' போய் வரும் வழக்கத்தைப் போலவே, அந்தப் பிச்சைக்காரனுக்கு இரண்டு பைசா பிச்சை போடுவது என்ற பழக்கமும் அவருக்குப் படிந்து விட்டது.

அவர் யோசனை எங்கு சென்றிருந்தாலும், அந்த இடம் வந்ததும் அவர் கைகள் தாமாக மணிபர்ஸை எடுத்து இரண்டு பைசாக்களைப் பொறுக்கி, அவன் விரித்திருக்கும் துணிகளில் போட்டுவிடும். பிச்சைக்காரனுக்கும் ஒரு பழக்கம் படிந்து விட்டது. அவர் வந்தால், பிச்சை கேட்கும் கூவுவதைக்கூட நிறுத்திக் கொண்டு விட்டான்.

அன்று மாலை வழக்கம் போலவே, மார்த்தாண்டம் அந்தப் பக்கம் வந்தார். அவர் கைகள் பர்ஸைத் திறந்து இரண்டு பைசாக்களை எடுத்துப் பிச்சைக்காரனுக்குப் போடப் போயின. என்ன ஆச்சரியம்! அன்று அங்கு பிச்சைக்காரனைக் காணவில்லை. உடம்புக்கு என்னவோ, ஏதோ என்று எண்ணினார். அவன் உட்கார்ந்திருக்கும் இடத்துக்கு அருகில் புத்தம் புதிய கார் ஒன்று நின்று கொண்டிருந்தது. எனவே, அதைத் தாண்டித் தம் போக்கில் நடக்கலானார்.

"சாமி! பிச்சை போடாமல் போகிறீங்களே!" என்ற குரல் அவரை அழைத்தது.

அவருக்கு ஒரே வியப்பாகி விட்டது. 'பிச்சைக்காரனைக் காணோம். ஆனால் அவன் குரலே கேட்கிறதே!' என்று மீண்டும் திரும்பிப் பார்த்தார். அவன் இருக்கும் இடத்தில், அதே கார்தான் நின்று கொண்டிருந்தது. 'ஒரு வேளை அவன் இறந்து விட்டானோ, அவன் ஆவி பேசுகிறதோ?' இப்படி எண்ணி மேலே நடையை எட்டிப் போட்டார்.

"சாமி, சாமி!" என்று கை தட்டிக் கூப்பிடவே, திரும்பிப் பார்த்தார். காரின் அருகில் பிச்சைக்காரன் நின்று கொண்டிருந்தான்.

அவர் வியப்பு எல்லை மீறி விட்டது. வாய் திறந்து எதுவும் கேட்கத் தோன்றாமல் திகைத்து நின்றார். அவனாக அவர் அருகில் வந்து, "உங்கள் புண்ணியத்திலே இந்தக் கார் கிடைச்சதுங்க!" என்றான்.

அவர் 'எப்படி' என்று கேட்கவில்லை. வியப்பு அளவுக்கு மீறிவிட்டால், யாருக்கும் பேசத் தோன்றாது இயல்புதானே? அவர் வாய் அடைத்து நின்றார். அவனாகவே சொன்னான்: "நான் தவறாமல் நீங்க பிச்சை போட்டு வந்தீங்களல்லவா? அதைச் சேர்த்து வைச்சிருந்தேன், வாயைக் கட்டி வயிற்றைக் கட்டி. என்னதான் பிச்சை எடுத்தாலும் ஆசை யாரை விட்டதுங்க? யாரோ சொன்னாங்கன்னு கால் ரூபாய்க் காசுக்கு ஒரு லாட்டரிச் சீட்டு வாங்கினேன். நான் கனவில்கூட நினைக்கலீங்க! ஆனால் பாருங்க! முதல் பரிசாக இந்தக் கார் கிடைச்சிருக்குதுங்க!"

எச்சிலைக் கூட்டிக் கொண்டு "ரொம்பச் சந்தோஷம் அப்பா!" என்று சொல்லி நகர்ந்தார் மார்த்தாண்டம்.

"சாமி! பேசாமல் போறீங்களே, சாமி! பழக்கத்தை மாத்தாதீங்க!" என்றான் பிச்சைக்காரன் மீண்டும்.

"அதுதான் நீ பணக்காரனாயிட்டியே, அப்பா! இனிமேல் நான் என்னத்துக்குப் பிச்சை போடவேண்டும்? நீதான் பிச்சை எடுக்கணும் ?"

"அப்படிச் சொல்லப்படாது, சாமி! நீங்க எப்போதும் போலப் போடற பிச்சையைப் போட்டு விட்டுத்தான் போகணும் சாமி!" என்று கெஞ்சினான் பிச்சைக்காரன்.

"எதற்கப்பா, நீதான் கார் வாங்கிட்டியே! இனி பிச்சை வேடுப்பானேன்?" என்றார் மார்த்தாண்டம்.

"முன்னாலே என் வயிற்றுப் பாட்டுக்கு மட்டும் பிச்சை எடுத்தேன். இப்போ இதன் வயிற்றுப் பாட்டையும் கவனிக்க வேண்டியிருக்கிறதே! பெட்ரோல் வாங்கி ஊற்ற, இதை ஓட்ட டிரைவர் வைத்துக்கொள்ள வென்று பெரிய பிச்சையாக அல்லவா எடுக்க வேண்டியிருக்கிறது!" என்றான் பிச்சைக்காரன்.

மேஜர் மார்த்தாண்டம் ராணுவத்தில் பணிபுரிந்தவர் ஆயிற்றே! கார் ஓட்டிப் பழக்கப்பட்டவராயிற்றே! 'அவனுக்கே டிரைவராகச் சேவகம் செய்யத் தொடங்கிவிட்டால் என்ன?' என்ற எண்ணம் அவர் மனத்தில் ஓடியிருக்குமானால்...

நாம் வியப்பதற்கென்ன இருக்கிறது?— விலைவாசி விஷமாக ஏறியிருக்கும் இந்த நாளில் ?

—குறும்பன்



கணவன்: தீபாவளிக்குப் புடவைகள் வாங்கப்போகணும் என்றாயே, இன்னிக்கு இடி, புயல், மழை எல்லாம் வரப்போகிறது என்று இந்தப் பேப்பரிலே போட்டிருக்கிறார்களே !

மனைவி: வேறு பேப்பர் வாங்கிப் பாருங்கள்.

# ஜம்மியின் லிவர்க்யூர்



குழந்தைகளின் ஈரல், குலைக்கட்டி கோளாறுகளுக்கு

## வழக்கமான மாதாந்திர விஜயம்

| இடம் | தேதி | நேரம் | விலாசம் |
|---|---|---|---|
| ஈரோடு | 1 | 9 to 11 காலை | நவபவன் லாட்ஜிங் |
| சேலம் | 2 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | கோயம்புத்தூர் லாட்ஜ் பிராஞ்சு |
| திருப்பூர் | 3 | 9 to 11 காலை | ஆர். எஸ். வாசன் & கோ., கெமிஸ்ட்ஸ் |
| கோயம்புத்தூர் | 4 | 9 to 11 காலை | சல்வர் & கோ., கெமிஸ்ட்ஸ் |
| மேட்டுப்பாளையம் | 4 | 3 to 5 மாலை | பழனியப்பா பார்மஸி<br>13-311 மெயின் ரோடு |
| திண்டுக்கல் | 5 | 9 to 11 காலை | சி. ஆறுமுகம் பிள்ளை & சன்ஸ்<br>ஜெனரல் மெர்ச்சன்ட்ஸ் |
| மதுரை | 6 & 7 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | உடுப்பி போர்டிங் லாட்ஜிங், மேல மாசி வீதி |
| ஸ்ரீவைகுண்டம் | 8 | 9 to 11 காலை | என். கோமதிநாயகம் பிள்ளை மெடிகல் ஷாப் |
| தூத்துக்குடி | 8 | 3 to 5 மாலை | வி. எஸ். சங்கரலிங்கம் பிள்ளை<br>மெடிகல் ஸ்டோர்ஸ் |
| நாகர்கோயில் | 9 | 10 to 12 பகல் | என். திரவியம் & கோ., கெமிஸ்ட்ஸ் |
| திருநெல்வேலி ஜங். | 10 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | சந்திர விலாஸ் ஹோட்டல் |
| அம்பாசமுத்திரம் | 11 | 9 to 11 காலை | கோமதி மெடிகல் ஸ்டோர்ஸ், |
| தென்காசி | 12 | 9 to 11 காலை | எஸ். கிருஷ்ணா & கோ., மெடிகல் ஸ்டோர்ஸ் |
| ராஜபாளையம் | 13 | 9 to 11 காலை | அசோகா போர்டிங் & லாட்ஜிங் |
| ராமநாதபுரம் | 14 | 9 to 11 காலை | ராஜன் மெடிகல் ஹால் |
| காரைக்குடி | 15 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | ஏவி. எம். பிஎஸ். ரெஸ்ட் ஹவுஸ் |
| புதுக்கோட்டை | 16 | 9 to 11 காலை | வசந்தா லாட்ஜ் |
| புதுப்பட்டி | 16 | 3 to 5 மாலை | முருகன் மெடிகல் ஸ்டோர்ஸ் |
| ராமேஸ்வரம் | 20 | 10 to 12 பகல் | ஆர்.கே. ஏங்கப்பாசார், B.A. வர்த்தகம் தெரு |
| கரூர் | 25 | 10 to 12 பகல் | சென்ட்ரல் மெடிகல் ஸ்டோர்ஸ் |
| கரக்பூர் | 4 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | யுனைடெட் மெடிகல் ஸ்டோர்ஸ்<br>என். டி. இ. 155, ரயில்வே மார்க்கெட் |
| ஜாம்ஷெட்பூர் | 15 | 9 to 11 காலை<br>3 to 5 மாலை | பீடி. கெமிஸ்ட்ஸ், சாக்சி |

## ஜம்மி வெங்கடரமணய்யா & சன்ஸ்

திருச்சிராப்பள்ளி கிளை : கும்பகோணம்

குறிப்பு — எல்லா நாட்களிலும் வழக்கம்போல எமது கிளினிக்கில் ஆலோசனைகள் கூறப்படும்.

சாமா

# நல்ல நாளில்...

ஜயராமன்:—சங்கரி, இந்தத் தீபாவளி தினத்தில் ஒரு பிரதிக்ஞை எடுத்துக் கொள்ளலாம் என்றிருக்கிறேன். இன்று முதல் யாருடனும் விரோதம் பாராட்டப் போவதில்லை. இது வரையில் நான் யாரிடமெல்லாம் விரோதம் பாராட்டி வந்தேனோ அவர்கள் பெயர்களையெல்லாம் எழுதி ஒரு பட்டியல் தயாரித்து விட்டேன்.

சங்கரி:—எங்கே அந்தப் பட்டியல்? கொடுங்கள். அதில் என் பெயர் முதலில் இருக்கிறதா என்று பார்க்கிறேன்!

ஜயராமன்:—சங்கரி! என்ன இப்படிக் கேட்டு விட்டாய்? உன்னை அந்தப் பட்டியலிலே சேர்க்கும்படியாக அவ்வளவு விரோதமா உன்னிடம் காட்டியிருக்கிறேன்?

சங்கரி:—சும்மா விளையாட்டுக்காகக் கேட்டேன். அது இருக்கட்டும். இந்தப் பட்டியலை வைத்துக் கொண்டு என்ன செய்யப் போகிறீர்கள்?



ஜயராமன்:—உம்! அப்படிக் கேள், சங்கரி! இத்தனை ஆசாமிகளையும் ஒவ்வொருவராக நேரில் சந்தித்து 'இனிமேல் நாம் விரோதிகள் இல்லை; நண்பர்கள்' என்று சொல்லி விட்டு வரப்போகிறேன்.

[ஆனந்த நடை போட்டுக் கொண்டு போகிறான் ஜயராமன்.]

ஜயராமன்:—(ராமுவின் வீட்டுக்குப் போய்) நமஸ்காரம்! கங்காஸ்நானம் ஆயிற்றா?

ராமு (அதிர்ச்சியடைந்து):—யார்? ஜயராமனா? பத்து ரூபாய் கைமாற்றாக வாங்கிக் கொண்டு அடுத்த மாதம் தருகிறேன் என்று சொன்னதற்கு என்னை மரியாதையில்லாமல் பேசி விட்டீரே! இப்போது எதற்கு வந்தீர்?

ஜயராமன்:—மிஸ்டர் ராமு, என்னை மன்னிக்க வேண்டும்....!

ராமு:—மன்னிக்கிறதாவது, மண்ணாங் கட்டியாவது? கொஞ்சங்கூட உமக்கு என் மீது நம்பிக்கை இல்லையா?

ஜயராமன்:—நான் நம்பிக்கையோடுதான் இருந்தேன். அந்தக் காசுக்கடை கந்தசாமி தான், 'போயும் போயும் ராமுவுக்கா கடன் கொடுத்தீர்? அவன் இந்த ஜன்மத்துக்குத் திருப்பித் தர மாட்டானே ஐயா!' என்றார். அதனாலேதான் நான் உம்மிடம் கடுமையாக நடந்து கொண்டு விட்டேன். மன்னிக்கணும்.



ராமு (ஆத்திரத்துடன்):- கந்தசாமியா அப்படிச் சொன்னார்? இப்பொழுதே அவரை நேரில் கண்டு இதைப் பற்றிக் கேட்டு உலுக்கி எடுத்து விடுகிறேன்!

ஜயராமன் (கெஞ்சும் குரலில்):— வேண்டாம், விரோதம்! என்மாதிரி நீரும் இனிமேல் யாருடனும் விரோதம் வேண்டாம் என்று தீர்மானித்துக் கொள்ளுங்கள்!

[ராமு ஜயராமனின் கெஞ்சலைப் பொருட்படுத்தாமல் கந்தசாமியினிடம் அவனையும் இழுத்துக் கொண்டு ஓடுகிறான்.]

ராமு (ஆத்திரத்துடன்):—கந்தசாமி, என்னைப் பற்றி ஜயராமனிடம் மட்டமாகச் சொன்னது நீதானா? இந்தா, வட்டியும் முதலுமாக வாங்கிக் கொள்!

கந்தசாமி:—கை ஓங்காதே அப்பா! எந்த அயோக்கியப் பயலோ அப்படிச் சொல்லப் போக என்னைத் தாக்கி விட்டாயே!

ஜயராமன்:—நீர் சொன்னதாகப் பூக்கடை பொன்னம்பலம் சொன்னாரே, ஐயா!

கந்தசாமி (கோபத்துடன்):—என்ன! பூக்கடை பொன்னம்பலமா? அவனை இப்பொழுது என்ன செய்யப் போகிறேன், பார்!

[ஜயராமனைப் பிடித்து இழுத்துக் கொண்டு காசுக்கடை கந்தசாமி பூக்கடை பொன்னம்பலத்தினிடம் போகிறார். இப்படியாக நபர் மாறி மாறிச் சண்டை வலுக்கவே, ஜயராமன் தப்பினால் போதும் என்று வீட்டுக்கு வருகிறான். அவனுக்காக விறகுக்கடை வேணு காத்திருக்கிறான்.]

ஜயராமன்:—என்ன, வேணு! தீபாவளி யெல்லாம் ஆச்சா?

வேணு:—விறகுக் கட்டையினாலேயே உன் மண்டையைப் பிளக்கிறேன், வா! இல்லாத கதையைக் கட்டி விட்டுச் சண்டை மூட்டி விடுகிறாயா, நீ?

[வேணு கை ஓங்க ஜயராமன் உள்ளே ஓடிக் கதவைத் தாளிட்டுக் கொள்கிறான்.]

சங்கரி:—நீங்கள் விரோதத்தை ஒழிக்கப்போய் ஊர் முழுவதும் பகையோடு வந்திருக்கிறீர்களாக்கும்!



# குழந்தை வளர்ப்பு — சில சோதனைகள்

குழந்தை வளர்ப்பு பற்றி மேனாட்டு அறிஞர் டாக்டர் வில்லியம்பீனாக் எம். டி., எம். ஆர். ஸி. பி. (லண்டன்) எம். ஆர். ஸி. எஸ். (இங்கிலாந்து) அவர்கள் எழுதிய புத்தகத்தின் மலிவுப் பதிப்பைப் புத்தகக் கடையில் பாதி விலையில் வாங்கிப் படித்ததுடன் தமிழ் நாட்டில் பிறந்து வளர்ந்த டாக்டர் [மிஸ்] திரிபுவன சுந்தரி அவர்கள் அனுபவ பூர்வமாக எழுதியுள்ள தனிச் சிறப்பு மிக்க நூலையும் கரைத்துக் குடித்ததின் அவர்களுடைய யோசனைகளுக்கிணங்க நடக்கப் போய் ஏற்பட்ட சில சோதனைகளை இங்கே விவரிக்கலாம் என எண்ணுகிறேன்.

குழந்தை வளர்ப்பில் தனக்கு எந்தவிதமான பொறுப்பும் இல்லை என்று சில பேர்வழிகள் தட்டிக் கழித்து விட்டுப் போகிறார்களே, அது போன்ற வழக்கமெல்லாம் எனக்குக் கிடையாது என்பதை ஆரம்பத்திலேயே ஆணித்தரமாக எடுத்துரைக்க விரும்புகிறேன்.

''நொடியில் சமைத்து விடுகிறேன்! சித்தே குழந்தையை வைச்சுக்குங்கோ!'' என்று மனைவி கூற வாயெடுத்ததுமே, ''ஐயோ! அப்புறம் பஸ் கிடைக்காது; லேட் ஆச்சுன்னு மானேஜர் வள்வள்ளுன்னு விழுவான்'' என்று கூறிவிட்டு எட்டு மணிக்கே கம்பிநீட்டித் தெருக்கோடி திருநாவுக்கரசுடன் வம்பளந்து பொழுதைப் போக்கி, ஓட்டலில் டிபனையும் முடித்துக் கொண்டு நிதானமாய்ப் பதினொரு மணி சுமாருக்குக் காரியாலயத்துக்குப் போய்ச் சேருகிற வஞ்சனையெல்லாம் எனக்குத் தெரியாது. அதே போல் மாலையில் கிளப்பில் சீட்டாடியபடி ஹாய்யாக அரட்டை அடித்து விட்டுக் குழந்தைகள் தூங்கிய பிறகு வீட்டுக்குத் திரும்பி, ''ஆபீஸில் இடுப்பொடிகிற வேலை'' என்று புளுகுவதற்கு உண்டான சாமர்த்தியமும் எனக்குப் போதாது. அதனால் நான் படுகிற அவஸ்தை (அடைகிற ஆனந்தத்தைக்காட்டிலும் அதிகமில்லைதான்). நக வளைவுக்குறிகளுக்கிடையில் உள்ள வார்த்தைகள் மனைவி என் தோளுக்கு மேலாக நான் என்ன எழுதுகிறேன் என்று எட்டிப் பார்த்த போது எழுதப்பட்டவை அல்ல என்பதை வாசகர்கள் கவனிக்க வேண்டும்.

இதனால் தானோ என்னவோ, ''உனக்கு என்னடி அம்மா குறைச்சல்? உன் புருஷனைப் போல ஒருத்தர் அமைஞ்சுட்டால் ஒண்ணு ரெண்டென்ன? இரட்டைக்குழந்தைகளாகவே எட்டு தரம் பெத்துக்கலாம்!'' என்று பக்கத்து வீட்டு மாமி என் மனைவியிடம் வேலி ஓரமாய் நின்று விமர்சனம் செய்து கொண்டிருந்ததை ஒரு ஞாயிற்றுக்கிழமை என்று மத்தியானம் கேட்க நேர்ந்தது. விடுமுறை தினத்தில் பாதி பாழாகிப் போய் விட்டதென்று சொல்லவா வேண்டும்? மனத்தில் இனம் புரியாத ஒரு கலக்கம் குடி கொண்டது. இரவு மகா பயங்கரமான ஒரு சொப்பனம். பதினாறு குழந்தைகள் சுற்றிச் சூழ்ந்து படாதபாடு படுத்தி வைக்க ராவணனுக்குள்ளது போல் எனக்குப் பத்து தலைகளும் இருபது கைகளும் முளைத்து விடுகின்றன. அப்படி இருந்தும் போதவில்லை. ஒரு கை அடிக்க, ஒரு கை அணைக்க, ஒரு கை புட்டிப் பால் கொடுக்க, ஒன்று தலை வார, ஒரு வாய் கதை சொல்ல, மற்றொன்று தாலாட்டுப் பாட, இன்னும் ஒன்று அதட்டிக் கோபிக்க...... அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்தேன்.

''ஏன்னா? என்ன? என்ன? ஏன்னா!'' என்று விளித்தும் கேட்டும் என்னை மலர மலரப் பார்த்து விழித்தாள் மனைவி.

நான் விஷயத்தைச் சொன்னேன். அவள் இடி இடியென்று சிரிக்கவுமில்லை, அவள் முகம் பயத்தில் பேயறைந்தது போல் மாறவுமில்லை. பின்னர்.....? சொன்னால் நம்ப மாட்டீர்கள்! என்றாலும் கூறி விடுகிறேன்! அவள் ஏக்கப் பெருமூச்சு விட்டாள்! ''நண்டும் சுண்டுமாய் ஒரு டஜன் தவழ்ந்து கொண்டிருந்தால் அலாதியான அழகாய்த்தானிருக்கும்'' என்றவாறே என் பக்கமாய் அவள் மெல்லச் சாய்வதை இரவு விளக்கின் மங்கலான ஒளியில் கண்டேனோ இல்லையோ, பாயைச் சுருட்டிக் கொண்டு எடுத்தேன் ஓட்டம் மொட்டை மாடிக்கு!

படுக்கையைப் பிரித்துப் போட்டு இரைக்க இரைக்க அதில் விழுந்தேன். மருட்சி நீங்கவும் நினைவு மாறவும் நீண்ட பொழுதாயிற்று.

பிறக்காத குழந்தைகளைப் பற்றிய கனவு இத்துடன் நிற்கப் பிறந்த குழந்தைகளைப் பராமரிப்பது பற்றி யோசிப்போம்.

என்னுடைய குழந்தைகளின் மொத்த எண்ணிக்கை: இரண்டு.

நெ. 1: பெயர்: சாந்தா; வயது: நான்கு வருஷம் இரண்டு மாதம்.

நெ. 2: பெயர்: காந்தா; வயது: எட்டு மாதம்.

வயது வித்தியாசத்திலிருந்தே நான் திட்டமிட்டுச் செயலாற்றுவதில் அக்கறை கொண்டிருப்பது நன்கு புலனாகும். இரண்டு பதினைந்தாண்டு (கல்யாண)த் திட்டங்களை வகுத்து அவற்றின் வெற்றிக்காகப் பாடுபட்டு வருகிறேன் இப்போது.

நாலு வயதே நிரம்பியிருந்தாலும் பெரியவள் படு சுட்டி. ஒரு படப் புத்தகம் வாங்கித் தந்தால் பத்து நிமிஷங்களுக்குள் சுக்குச்

கக்காகக் கிழித்தெறிந்து விட மாட்டாள். ஒரு பாப்பா பொம்மையைக் கொடுத்தால் அதைக் குருடாக்கி மூடமாக்கி நொண்டியாக்கிச் சித்திரவதை செய்ய மாட்டாள். என்னுடைய 'டிரெயினிங்' அப்படி! சொப்புகளை வாரி இறைக்கவே கூடாது; மாடிப்படியில் மோட்டார் வண்டியை வைத்தால் அதன் மேல் அப்பா கால் அழுந்த, சக்கரம் உருள, அப்பா தடுமாறிச் சாய, அவர் மண்டை பிளக்க, டாக்டருக்குத் தண்டம் அழவேண்டி நேரிடும் என்பதெல்லாம் அவளுக்கு அத்துப்படி. அதை அதை அதன் அதன் இடத்தில் வைக்க வேண்டும் என்பது அவள் என்னிடம் கற்றுக் கொண்ட முதல் பாடம்.

பாருங்கள், ஒரு நாளைக்கு என்னுடைய பேனாவைக் காணோம், எழுதுகோலைக் காணோமென்றால் அதை என் தொழிலுக்கே வந்த ஆபத்தாக அல்லவோ கருத வேண்டும்? ஆகவே சற்றும் தாமதிக்காமல் பரண் முதல், மாடிப்படிக்குக் கீழ் வரை சல்லடை போட்டுச் சலித்துத் தேடினேன்; அகப்படவில்லை. மனம் சோர்ந்து கைகாலெல்லாம் சளைத்துக் கடைசி கடைசியாக மகளை, "பேனாவைப் பார்த்தாயா சாந்தா?" என்று நம்பிக்கையற்ற குரலில்தான் கேட்டேன். ஏனென்றால், "நான் தொடவில்லையே?" என்ற பதில்தான் கிடைக்கும் என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். தனக்கு மிக மிகப் பிரியமான குண்டூசிக் 'குஷனை'க் கூட அவள் என் மேஜை மீதிருந்து எடுக்க மாட்டாள்; பேனாவையா எடுத்திருக்கப் போகிறாள் ?

ஒரு மூலையில் தன் பாட்டுக்குச் சமைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்த சாந்தா விருட்டென்று திரும்பினாள். "ஆமாம் பார்த்தேன்" என்றாள். திகைப்பும் வியப்பும் கலந்து பொங்க, "எங்கே அது?" என்று கேட்டேன்.

"வாசலில் குப்பைத் தொட்டியில் போட்டு விட்டேன்" என்று பதில் கிடைத்தது.

குழந்தையைக் கோபிக்கக் கூடாதென்று எவ்வளவோ அடக்கிக் கொள்ள முயன்றும் பலனில்லை. என்னையும் மீறி, "ஏன் அங்கே எறிந்தாய்?" என்று அதட்டினேன்.

"நீதானே அப்பா அதை அதை, அதன் அதன் இடத்தில் வைக்க வேண்டும் என்று சொல்லித் தந்திருக்கிறாய்" என்று நாத் தழுதழுக்கக் கேட்டாள் மகள்.

"என் கண்ணே!" என்று அப்படியே வாரி அணைத்து உச்சி முகர்ந்தேன் நான். எப்போது பார்த்தாலும் ஒழுகிக் கொண்டிருக்கும் அந்த ஓட்டைப் பேனாவைச் சரியான இடத்தில் வைத்து விட்டாள் அவள். அதில் என்ன தவறைக் கண்டுபிடிக்க முடியும்? பெருமிதப் பூரிப்புடன் அவளை முத்தமிட்டு மறுபடியும் விளையாட அனுமதித்து விட்டு மாடிப் படிகளில் ஏறியபோது நிம்மதி நிறைந்த நெஞ்சத்துடன் ஒரு பெருமூச்செறிந்தேன் நான். நிம்மதி, ஓட்டைப் பேனா ஒரு வழியாகக் குப்பைத் தொட்டிக்குப் போய் ஒழிந்ததே என்பதற்காக மட்டுமல்ல; பேனாவுக்குப் பக்கத்திலேயே மேஜை மேல் நான் எழுதி வைத்திருந்த கதை குப்பைத் தொட்டிக்குப் போகாமல் பிழைத்ததே என்பதற்காகவும் தான்! என் மகளுக்குத் தெரியாதா ஐயா, எதை எதை எங்கெங்கே வைக்க வேண்டும் என்று?

தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும் என்பதால் நல்ல பழக்க வழக்கங்கள் குழந்தைப் பருவத்திலேயே ஏற்பட்டு விட வேண்டும் என்பதில் நான் மிகுந்த அக்கறை எடுத்துக் கொள்வேன். "விருந்தினர் யாரேனும், வீட்டுக்கு வரும் போது உங்கள் பெண், 'மாமா! நெக்கு என்ன வாங்கிண்டு வந்தே?' என்று கேட்காமல் இருக்கிறாளா?" என்பதாக என்னை யாரேனும் வினவினால் தைரியமாக, "அப்படியெல்லாம் என் மகள் நடந்து கொள்ளவே மாட்டாள்" என்று கொஞ்சமும் தயங்காமல் பதிலளிப்பேன் நான். குழந்தைகள் இருக்கும் வீட்டுக்கு வருபவர்கள் வெறும் கையோடு வரக்கூடாதுதான் என்றாலும் குழந்தைகள் அப்படிக் கேட்பது அதைவிடப் பெரிய தவறல்லவா?

நண்பன் வேணு வந்த போது கையை வீசிக் கொண்டுதான் வந்தான். நான் அதைக் குறித்துச் சற்றேனும் கவலைப்படவில்லை. "சாந்தா! அம்மாவிடம் போய் மாமாவுக்கு டிபன் காப்பி எல்லாம் கொண்டு வரச் சொல்லு" என்று ஏவினேன். அவளும் சலித்துக் கொள்ளாமல் எல்லாக் காரியங்களையும் செய்து நல்ல பெயர் வாங்கினாள்.




"பாப்பா! இங்கே வா!" என்று அன்போடு அழைத்தான் வேணு. "உனக்கு ஒரு ரகசியம் சொல்லட்டுமா?" என்று கேட்டுக் குழந்தையைத் தூக்கி வைத்துக் கொண்டு காதோடு ஏதோ கூறி விட்டுப் பெரிதாகச் சிரித்தான்.

என் மகளும் சிரமமின்றிக் 'களுக்' என்று நகைத்தாள். பிறகு, "மாமா! நான் நோக்கு ஒரு ரகசியம் சொல்றேன்" என்றாள். அவன் காது எட்டுகிற மாதிரியாக மாடிப்படிகளில் ஏறி நின்று கொண்டு குசுகுசுத்தாள்.

அவ்வளவுதான்! வேணுவின் முகம் கறுத்துச் சிறுத்தது. அவசரம் அவசரமாக, "நான் போயிட்டு இன்னொரு நாளைக்கு வரேண்டா. அவசர ஜோலி" என்று விடைபெற்றுக் கொண்டான்.

எனக்குச் சங்கடமாக இருந்தது. நண்பன் தலை மறைந்ததும், "சாந்தா! மாமாகிட்டே என்ன சொன்னே?" என்று கேட்டேன்.

"அது ரகசியம்னு? அதைக் கேட்டாளோ?" என்றான் அவன்.

"அப்பாவுக்கு மட்டும் சொல்லு;பரவாயில்லே."

"சரி" என்று என் காதோடு காதாக அவன் பின்வருமாறு கூறினான்: "மாமா வந்து என் கிட்டே 'நெல்லுக்குள்ளே அரிசி யிருக்கு; எள்ளுக் குள்ளே எண்ணெய் இருக்கு' அப்படின்னு ரகசியம் சொன்னது. நானும் பதிலுக்கு ஒரு ரகசியம் சொன்னேன். 'பாக்கெட்டுக் குள்ளே காசு இருக்கு; கடைக்குள்ளே நிறைய பிஸ்கோத்து இருக்கு' அப்படின்னேன்."



என் செல்வத்தைத் தட்டிக் கொடுத்து அனுப்பியதுடன் மனைவியை அழைத்துத் திருஷ்டி சுத்திப் போடு என்றும் உத்தர விட்டேன். 'மாமா! நெக்கு என்ன வாங் கிண்டு வந்தேள்?' என்று கேட்டாளா ஐயா என் மகள்? நீரே சொல்லும்!

இப்படித்தான் இன்னொரு தடவை தம்பதி சமேதராய்க் கிருஷ்ணன் வந்திருந்தான். அப் போது நான் சிறுமி சாந்தாவை பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டு கதை சொல் லிக் கொண்டிருந்தேன். தினம் இதற்காகப் பத்து நிமிஷ நேரமேனும் நான் ஒதுக்கிக் கொள்வது வழக்கம். இந்தச் சமயத்தில் நண்பன் வந்ததும் சுவாரசியமான கட்டத் தில் கதையை இடையில் நிறுத்தி, மகளுக்கு ஏமாற்றமளிக்க நான் விரும்பவில்லை. "உட் காருடா கதையை முடிச்சுட்டு வந்துடறேன்" என்று கூறிவிட்டுக் கதையைத்தொடர்ந்தேன்: "கடைசியில், விண்டிரல்லா அந்த ராஜ குமாரனை ஜாம் ஜாம்மென்று கல்யாணம் பண்ணிக் கொண்டாள். இரண்டு பேரும் ரொம்ப நாளைக்குச் சந்தோஷமாக வாழ்ந் தார்கள்" என்று கதையை முடித்ததும், நண்பன் கிருஷ்ணன் "ஏண்டா குழந்தை யிடம் போய்ப் பொய்யும் புளுகும் அளக்கிறே? கல்யாணம் பண்ணிண்டதற்குப் பிறகு மனுஷன் சந்தோஷமாக வாழறதாவது? நடக்கிற காரியமா?" என்று ஒரு போடு போட்டான்.

இதற்கு என்ன பதிலளிப்பது என்று எனக்கு விளங்கவில்லை. அதற்குள் சாந்தா முந்திக் கொண்டாள்: "ஐயய்ய! மாமா! உங்களுக்கு இது கூடத் தெரியலையே! இது கதை மாமா! கதை! கதை யிலே அப்படித்தான் நடக் கும். கதைக்குக் காலுண்டா கையுண்டா? நீங்களும் மாமி யும் சண்டை போட்டுக் காமல் சந்தோஷமாயிருக்க மாட்டேள்னு எனக்குத் தெரியும்!"

இப்படிக் கூறிவிட்டு கதைப் புத்தகத்தைக் கட்டி அணைத்துக்கொண்டு தூங்கு வதற்குப் போய் விட்டாள் சாந்தா.

கிருஷ்ணனுடைய முகத் தில் ஈயாடவில்லை. "கிருஷ்ணா! இது உனக்கு வேண்டியது தாண்டா" என்றேன் நான். அப் புறம் பேஷான 'ஓவல்' ஒரு கப் கொடுத்துத் தான் அவனைச் சமாதா னப்படுத்தி அனுப்ப வேண்டியதாயிற்று.

பெரியவனுடன் நடத்து கிற போராட்டம் இது வென்றால் சின்னவள் செய்கிற அட்டகாசத்துக்குக் கேட்கவே வேண்டாம். நடு ராத்திரி சரியாக இரண்டு மணிக்குச் சங்கு ஊதுவது போல் 'வீல்' என்று கத்துவாள். அகோரப் பசி அப் போதுதான் எடுக்கும் அவளுக்கு. 'சே சே சே சே சே' என்று அலுத்துச் சலித்துக் கொண்டே என் மனைவி பாலைக் கரைத்துப் புட்டியில் ஊற்றிக் கொடுப்பாள். "இந்த வழக்கத்தைக் கண்டிப்பாக மாற்றியாகவேண் டும். நடு ராத்திரியில் அவதி அவசரக் கூட்டுவ தென்று என்ன பொல்லாத்தனம்!" என்று தினம் தினம் முணுமுணுப்பாள்.

"கூடவே கூடாது!" என்று நானும் விடா மல் மூட்டுக்கட்டை போடுவேன். "டாக்டர் ஸ்பாக்ஸ் என்ன சொல்கிறார் தெரியுமா? 'குழந்தை தானுகவே இந்தப் பழக்கத்தை விட்டு விடும். நம்முடைய சோம்பேறித்தனத் துக்காக இரவு இரண்டு மணிக்குப் பால் புகட்டுவதை நிறுத்திக் குழந்தையைத் துன் புறுத்தலாகாது' என்கிறார்."

இப்படி மேற்கோள்களையும் ஆதாரங்களை யும் எடுத்துக் காட்டியதுடன், விளக்கைப் போட்டுக் கொண்டு தூங்கி வழிந்தபடியே படித்துக் காட்டியுமிருக்கிறேன் இல்லாளுக்கு. இருந்தும் பயன் என்ன? அவள் பொறுமை இழந்து விட்டாள். "குழந்தையிடம் அத்தனை கரிசனமென்றால் நீங்களே பாலைக் கரைத்துக் கொடுக்கிறதுதானே?" என்று அடித்துக் கேட்டு விட்டாள்.

என் தன்மான உணர்ச்சி உந்தித் தள்ள வீறு கொண்டெழுந்தேன் நான். "என்னை என்ன வெறும் வாய்ப் பந்தல் வீசுகிறவன் என்றெண்ணி விட்டாயா? நாளைமுதல் நானே இரவு நேரங்களில் சாந்தாவைக் கவனித்துக் கொள்ளப் போகிறேன்" என்று அவள் சவாலை ஏற்றுக் கொண் டேன். ஏனய்யா இப்படிப் பரிதாபமாக முகத்தை வைத்துக் கொள்கிறீர்? இரண்டு சொட்டுக் கண்ணீர் தான்விட்டுத் தொலையுமேன் எனக்காக!



மறுநாள் இரவு தலை யணையைத் தட்டிப் போட் டுப் படுத்ததும் ஒரு காகி தத்தை என்னிடம் நீட்டி னுள் மனைவி.

"இது தொலைந்து போவ தற்கு முன்னும் நன்றாகப் படித்து உருப்போட்டு

உயிரினும் உயரியது!

*

# காரியர் "62"

ஆம், உயிரினும் உயரியது!—"என் கண்ணின் கருமணி"...அதற்காக என் உயிரையும் அர்ப்பணிப்பேன்! அவர் மிகைபடக் கூறவில்லை—டிரக் ஓட்டிக்கு அவருடைய டிரக்தான் எல்லாமாகும்...அவர் ஜீவனோபாயம்.. அவர் உயிர். டிரக் ஓட்டி டயரில் விரும்புவன யாவுமுடையது காரியர் "62".* காரியர் "62", புத்தம் புதிய சியெட் டயர்... இணையற்றது—குளுமையான ஓட்டம் மற்றும் அதிக மைலேஜுக்கு ஏற்ப மூடப்படாத பக்கவாட்டு ரிப்புகள்... அதிக நீடித்த உழைப்பிற்கிசைந்த ஆழ்ந்த டிரெட் அமைப்பு...மிக பத்திரமான டிரக் ஓட்டம் கொடுப்பது.

## ‹சியெட்›

## காரியர் "62"— புத்தம் புதிய டயர்



சியெட் டயர்ஸ் ஆப் இந்தியா லிமிடெட்

* சில இடங்களில் இருப்பு மிதமாகவுள்ளது.



ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுக்கப் பட்டதை ஒட்டி ஐஸன்ஹோவருக்கு நாட்டின் பல பாகங்களிலிருந்தும், பரிசுப் பொருள்கள் ஏராளமாக வந்து குவிந்தன. தமது சில நண்பர்களை அழைத்துக் காட்டி, ''இப்பொருள்களில் உங்களுக்கு எது மிகவும் பிடித்திருக்கிறது?'' என்று கேட்டார்.

அவரவர் தங்கள் தங்களுக்குப் பிடித்த பொருள்களைக் கூறிப் புகழ்ந்தார்கள்.

ஆனால் ஐஸன்ஹோவர், ''எனக்குப் பிடித்த பொருள் எது, தெரியுமா?'' என்று கேட்டு மூலையில் சாத்தியிருந்த துடைப்பத்தைக் கையில் எடுத்தார்.

எல்லோருக்கும் ஒரே வியப்பு. 'இதென்ன இவர் இப்படிச் சொல்கிறாரே' என்று! இமை கொட்டாமல் அவரையே பார்க்கலாயினர்.

''ஏன், தெரியுமா? தேர்தலில் வெற்றி பெற்றால், அரசியல் வாழ்வில் உள்ள தூசி, துப்பட்டைகளைத் துடைத்துத் துப்புரவாக்குவதாகக் கூறியிருந்தேன். அது என்றென்றும் எனக்கு நினைவிருக்க வேண்டும் என்பதற்காக யாரோ முன்பின் அறிமுகமில்லாத நண்பர் ஒருவர் இத்துடைப்பத்தைப் பரிசாக அனுப்பியுள்ளார். 'நீயும் துப்புரவாக இருக்க வேண்டும், அரசியல் வாழ்வையும் துப்புரவாக்க வேண்டும்' என்பதை நினைவுறுத்துவதே போல இவ்வன்பளிப்பு அமைந்துள்ளதால், இதைப் போற்றிப் பாதுகாப்பதெனத் தீர்மானித்துள்ளேன்!''

ஐஸன்ஹோவரின் இப்பேச்சைக் கேட்டதும் நண்பர்களின் வியப்பு ஆனந்தமாக மாறியது.

வைத்துக் கொள்ளுங்கள்'' என்றான். அடுப்பைப் பற்ற வைத்து வெந்நீர் போடுவதில் தொடங்கிக் குழந்தையை மடியில் எந்தவிதமாக வைத்துக் கொண்டு புட்டியிலுள்ள பாலைப் புகட்ட வேண்டும் என்பது வரையில் எல்லா விவரங்களும் அதில் ஆதியோடந்தமாக எழுதப்பட்டிருந்தன.

தாளின் மறுபக்கத்திலோ குழந்தை பிறந்த முதல் வாரத்திலிருந்து ஒன்றரை வருஷம் வரையில் அதற்குத் தரப்பட வேண்டிய பாலின் அளவுகள் குறிக்கப்பட்டிருந்தன. அதோடு இத்தனை ஸ்பூன் பால் பவுடர் போட்டு இத்தனை அவுன்ஸுக்கு வெந்நீர் விட்டுக் கரைக்க வேண்டும் என்றும் எண்ணிக்கைகள் ஏராளமாயிருந்தன.

''அட நாராயணா!'' என்னும் போதே எனக்குத் தலையைச் சுற்றியது.

''குழந்தையை வளர்ப்பதென்றால் இலேசுப்பட்ட காரியமா?'' என்று சற்றும் இரக்கமின்றி என்னைத் தவிக்க விட்டு விட்டு சந்தோஷமாகச் சிரித்தபடியே சுகமாகப் படுத்துக் கொண்டாள் அவள். இதை அப்படியே மனப்பாடம் செய்ய வேண்டிய அவசியம்தான் என்ன என்று அவளிடம் கேட்க வாயெடுத்த எனக்கு ஒரு கதை நினைவுக்கு வந்தது. பெண் பார்க்க ஒருத்தன் வந்திருக்கையில் 'அவருக்குக் காப்பி கொண்டு வந்து வை அம்மா' என்றாராம் பெண்ணின் தகப்பனார்; பெண் காப்பிப் போட சமையலறைக்குள் போனாள். அங்கே ஷெல்பின் மேல் தட்டில் சிறு உரலும் உலக்கையும் வைத்திருந்தது. பாலை அடுப்பில் வைத்த பெண் அதைப் பார்த்தாள். அவ்வளவுதான். அவள் கற்பனைக் குதிரை மாயக் குதிரைபோல் சிறகடித்துப் பறக்கஆரம்பித்தது. 'இவருக்கும் எனக்கும் கல்யாணமென்று ஆகி, ஒரு வருஷத்துக்கு அப்புறம் ஒரு குழந்தையும் பிறந்து, அவனுக்கும் ஐந்து வயது ஆகி, பிறகு சீடை முறுக்கு எடுக்க இந்த அலமாரியில் இருட்டுத்தனமாக ஏற, அப்போது கை தட்டி இந்த இரும்பு உரல் அவன் தலையில் விழுந்து, அவன் பிராணனும் போய் விட்டால் நான் என்ன பண்ணுவேன்?' என்று கதறி அழுதாளாம். என் மனைவியுடைய தர்க்கமும் இந்த ரீதியில்தான் போகும் என்றதும் ஒரு யோசனை தோன்றவே, ''இதோ பார்! நம் பெண்ணுக்கோ எட்டு மாதம் நிறைந்து விட்டது. ஆகவே எட்டாம் மாதம் முதல் பதினெட்டாம் மாதம் வரையில் உள்ள எண்ணிக்கைகளை மனத்தில் நன்றாகப் பதிய வைத்துக் கொண்டால் போதாதா? பாதி வேலை மிச்சமாயிற்றே?'' என்றேன்.

அவள் உடம்பு நாணிக் கோணிக் கொண்டது. ''அடுத்தது ஆண் பிள்ளையாகத்தான் பிறக்கும் என்று அம்மா சொல்லியிருக்காள்.'' வெட்க மிகுதியில் போர்வையை இழுத்து முகத்தை மூடிக்கொண்டாள் அவள். ''எதற்கும் முன் ஜாக்கிரதையாக....''

''......நான் எல்லாவற்றையுமே மனப்பாடம் செய்து விடுகிறேன்'' என்று கூறி விட்டுப் பதினேழாம் வாய்ப்பாட்டை விடக் கடினமான அந்த அட்டவணையை ஒன்பதாவது முறையாக உரக்கப் படித்தேன்.

தரத்திற்கும்
உறுதிக்கும்
நிகரற்றது



# ஹத்திபாயின்
## ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள்

நீடித்து உழைப்பவை, ஜொலிப்புடன் திகழ்பவை

ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள் தயாரிப்பவர்களில் முதன்மையானவர்கள்.

**ஹத்திபாய் துளஸிதாஸ் & சன்ஸ்** 122, கன்ஸராசால், பம்பாய் 2




# பூ போல ஒரு பெண்

மலையடிவாரத்திலிருந்து நாங்கள் மேலே புறப்பட்ட போது வானம் மப்பும் மந்தாரமுமாக இருந்தது. இன்னும் ஒன்றே கால் மணி நேரத்தில் கோடைக்கானலுக்குப் போய் விடலாம். ஆனந்தகிரியின் சின்னச் சின்ன வீடுகளில் ஏதோ ஒன்றின் இருண்ட அறையில் கழுத்து வரையில் இழுத்து மூடிய கம்பளிப் போர்வையோடு சகுந்தலை படுத்துக் கொண்டிருப்பாள். அவள் அப்படிப் படுத்துக் கொண்டிருப்பாள் என்பதை நினைக்கும் போது மட்டும் அங்கே போவதற்கு இன்னும் ஒன்றே கால் மணி நேரமாகும் என்பதைப் பொறுத்துக் கொள்வது மிகவும் வேதனையாயிருக்கும் போலத் தோன்றுகிறது. சுழித்துச் செல்லும் மலைச் சாலைகளில் பயணம் செய்து கோடைக்கானலின் முகப்பாகிய சண்பகனூரைக் கடந்து ஆனந்தகிரியில் நுழைவதற்குக் கடிகாரம் வகுத்த காலப் பிரமாணப்படி இன்னும் ஒன்றே கால் மணி நேரமாகும் என்பது நிச்சயமானாலும், — என் அந்தரங்கம் வகுப்பதற்கு ஆசைப்படுகிற காலப் பிரமாணப்படி இந்த விநாடியே அங்கு போய்ச் சேர்ந்து விட்டாலும் நல்லதுதான். காலம் நிகரென்று வேகமாக ஓட வேண்டும் போலவும்-அதுவும் எனக்காகவே என்னோடு சேர்ந்து வேகமாக ஓட வேண்டும் போலவும் தவியாய்த் தவிக்கிறேன் நான். இன்று இப்போது என்னுடைய ஒவ்வொரு விநாடிக்கும் மதிப்பு அதிகம். ஒவ்வொரு விநாடியிலும் ஒரு மணி நேரத்தின் கனம் விழுந்து அமுக்கிக் கொண்டிருக்கிறாற்போல் உணர்கிறேன். இன்னதென்று சொல்ல முடியாதபடி ஊமைவலியாய் நெஞ்சு வலிக்கிறது. என்னுடைய மனத்தைப் போலவே, வெயிலுமில்லாமல், மழையுமில்லாமல் வானமும் ஊமைக் குழப்பமாய்க் குழம்பிக் கிடக்கிறது. பூதம் பூதமாய் மேகங்கள் கருண்டு கவிந்து தொங்கிக் கொண்டிருக்கின்றன. சகுந்தலையும் நானும் வழக்கமாகச் சந்தித்துக் கொண்டிருந்த நாட்களில் எத்தனையோ சாயங்கால வேளைகளில் இப்படி மேகங்கள் கருட்டிக் கவிந்து கொண்டிருக்கும் சரத் காலத்து வானத்தின் அழகை எத்தனையோ முறை வியந்து பேசியிருக்கிறோம். நானும் சகுந்தலையும் இந்த உலகத்து அழகுகளைப் பார்த்து, வியந்து, சுவைத்து, அநுபவித்து, உணர்ந்து, தனித் தனியாக மகிழ்வது கூட வித்தியாசமென்று கருதி ஒன்றாகவே மகிழ்ந்தோம்; ஒன்றாகவே வியந்தோம்; ஒன்றாகவே அநுபவித்தோம்.

ஆமாம்! .... அது ஒரு காலம்; — ஒரு காலமாவது, இரண்டு காலமாவது; — காலம் எப்போதும் ஒன்றேதான். குடைராட்டினம் எத்தனை முறை சுற்றி வந்தாலும், சுற்றுகிற குடை ஒன்றுதானே? சுற்றுக்கள் வேண்டுமானால் பலவாயிருக்கலாம்.

மரணப் படுக்கையில் கிடக்கிறாள் என்ற ஒரே காரணத்துக்காக இப்போது அவள் இருக்கிற இடத்தைத் தேடி அவளைப் பார்க்கப் போக வேண்டியிருக்கிறது. அவள் இருக்கிற இடமும் சூழ்நிலைகளும் நரகமாக இருந்தாலும் அந்த நரகத்தில் அவளுடைய கால்கள் மிதித்துக் கொண்டு நிற்கிற இடம் மட்டும் சொர்க்கமாயிருக்கும். அவளுடைய பாத கமலங்களுக்கு அத்தனை சக்தி உண்டு. அந்தப் பாத கமலங்கள் எந்த மண்ணை மிதித்துக் கொண்டு நிற்கின்றனவோ அந்த மண்ணில் திருமகள் விலாசம் பொங்கித் ததும்பும். அவள் ஓர் உயர்ந்த ஜாதிப் புஷ்பத்தைப் போன்றவள். இல்லையானால் அவளுடைய ஞாபகம் இத்தனை நாட்களுக்குப் பின்பும் என் இதயத்தில்

மணந்து கொண்டிருக்க முடியாது. நினைத்தாலும் மணக்கக் கூடிய சிறப்பு உயர்ந்த ஜாதிப் பூக்களுக்குத்தான் உண்டு என்பார்கள்; சகுந்தலையின் ஞாபகமும் அப்படி என் இதயத்தில் மணந்து கொண்டிருந்தது.

நன்றாக அரைத்த சந்தனம் போல் மென்மையும், தண்மையும், செழிப்பும் பொருந்திய சண்பக நிறத்துத் தோள்களில் சிறு சிறு பூக்கள் மினிரும் மஞ்சள் சோளி, காதோரம் சரிந்து குழலும் கூந்தல், அதன் பொலிவை எடுத்துக் காட்டுகிறாற் போல் ஒரு கொத்துக் கதம்பம், பச்சென்று செழுமையாய்த் தோன்றும் கண்களின் மேலெழும்பி நிமிர்ந்த இமைகளின் பூமயிர், கழுத்தின் தந்தவண்ணத்தைப் பளிச்சென்று எடுத்துக் காட்டும் முத்துமாலை, நெற்றியில் குங்குமத் திலகம், வெளேரென்று வெண்ணெய்த் திரட்சி போல் தளதளவென்று நீண்ட முழங்கைகளில் நவநாகரிகமாக ஒற்றை வளை, பக்கத்து மேஜையில் ஆட்டிவிடும் போது இடுப்புக்குக் கீழேயும், மேலேயும், தனிமையாய்ச் சுழல்கிற ஆடும் பொம்மை ஒன்று. அந்தப் பொம்மை ஆட்டிவிட்டு இயங்கிய பின்பே நாட்டியத்தின் அழகைக் காண்பித்தது. அது ஆடியதுதான் நாட்டியமாயிருந்தது என்றால் அவள் ஆடாமல் உட்கார்ந்திருந்ததே சௌந்தரிய நிருத்தியமாயிருந்தது என்று சொல்ல வேண்டும். சில பொருள்கள் இயங்கினால்தான் அழகு. சில பொருள்கள் இயங்கா விட்டால்தான் அழகு. இன்னும் சில பொருள்கள் இயங்கினாலும் இயங்கா விட்டாலும், எப்படியானாலும் அழகுதான். சகுந்தலையும் அப்படித்தான். அவளுடைய அமைதியிலும் அழகின் இயக்கம் உண்டு. அவளுடைய இயக்கத்திலும் அமைதியின் அழகு உண்டு. அவளுடைய பார்வையில் பேச்சு உண்டு. பூவைப் போல் ஒரு பெண் அவள். மௌனமாய் மொட்டுப் போல் கூம்பியிருந்தாலும் அவள் அழகுதான். இதழ் விரித்து முகம் மலர்ந்து பேசினாலோ அவள் அழகு மணக்கவும் செய்யும். அந்த மணத்துக்குப் பொருத்தன்மை எப்போதுமே உண்டு.

''வாழ்க்கையின் அடுத்த நுனி தெரிகிற வரை, தெரிந்த நுனி சிக்கல் இல்லாமல் நீளவிருக்கும்'' — என்று எவனோ ஒரு தீர்க்கதரிசி சொல்லி வைத்திருக்கிறான். இந்த விஷயத்தை இப்படிச் சொல்லியதற்காகவே அவனைத் தீர்க்கதரிசி என்று கொண்டாடலாம். என்னைப் பொறுத்த வரையில் சகுந்தலையின் ஞாபகம் ஒரு நுனி. அதன் மறுநுனி; தெரிகிற வரை — ஒரு வேளை மறுநுனியே இல்லாமற் போனாலும் அது அழகுதான். பத்துப் பதினைந்து ஆண்டுகளுக்கு முன்னால் ஏதோ ஒரு புகழ் பெற்ற மருந்துக் கம்பெனியின் சுற்றும் பிரதிநிதியாகத் தமிழ் நாட்டு நகரங்களில் அலைந்து கொண்டிருந்த போது இந்த ஞாபகத்தின் முதல் நுனி நிகழ்ந்தது. மறுநுனி இன்றுவரை கிடைக்கவே இல்லை. அதனால் என்ன? சில விஷயங்களைச் சிந்திக்கும் போது அவற்றுக்கு மறுநுனி அகப்படாமலும் போகலாம். அதற்காக அவற்றைச் சிந்திக்கத் தொடங்குவதே பிழை என்று வாளாவிருக்க முடியாது அல்லவா?

நான் எங்கள் மருந்துக் கம்பெனியின் சார்பாகக் கோடைக்கானலில் உள்ள முக்கியமான சில டாக்டர்களையும், மருந்துக் கடைகளையும் பார்த்து வரச் சென்றிருந்த சமயம் அது: பங்குனி, சித்திரை மாதத்து வெயிலில் கோடைக்கானலுக்குப் போய் விட்டு வரச் சொல்லுகிற கம்பெனிக்காரனை வாயார வாழ்த்தாமல் வேறென்ன செய்ய முடியும்? கோடைக்கானலில் அதிக நாட்கள் தங்க வேண்டுமென்ற ஆசையில் ஒரு டாக்டரைப் பார்க்க ஒரு நாள் வீதம் செலவழித்துப் பக்தி சிரத்தையோடு கம்பெனி வேலையைச் செய்து கொண்டிருந்தேன் நான். பக்தி, சிரத்தை, இரண்டுமே, கோடைக்கானலின் மேல்தான்: கம்பெனியின் மேல் அல்ல.

'டாக்டர் சந்திரசேகரன் — பில்லர் ராக்ஸ் ரோடு — கோடைக்கானல்'— என்ற முகவரி ஒன்று மீதமிருந்தது. மருந்துக் கம்பெனியின் சார்பாகக் கோடைக்கானலில் நான் சந்திக்க வேண்டிய கடைசி மனிதர் டாக்டர் சந்திரசேகரனாக இருந்தார். பில்லர் ராக்ஸ் பாறைகளைப் பார்த்து விட்டுத் திரும்புகிற வழியில் அந்த டாக்டரையும் பார்த்து முடித்த பின் கோடைக்கானலிலிருந்து விடைபெறலாமென்று எண்ணம். 'நல்லது கடைசியாகத் தெரியும்' என்பார்களே; — அது எவ்வளவு பொருத்தமான வசனம்? பில்லர் ராக்ஸ் பாறைகளைப் பார்த்து விட்டுத் திரும்புகிற வழியில் டாக்டர் சந்திர சேகரனையும்பார்த்தவன்— முதலில் பார்த்த பில்லர் ராக்ஸ் மலைகளைவிட அழகான பொருளை டாக்டர் வீட்டில் தான் காண முடிந்தது. முதலிலேயே தெரிந்திருந்தால் பில்லர் ராக்ஸ் மலைகளை அப்புறம் பார்த்துக் கொள்ளலா

# பொன்முடி



மென்ற எண்ணத்தோடு டாக்டர் வீட்டுக்கே முதலில் சென்றிருக்கலாம். பில்லர் ராக்ஸ் மலைகளிடம் எங்கள் கம்பெனியின் மகத்துவம் வாய்ந்த மருந்துகளைப் பற்றியோ, அவற்றின் வீர தீரப் பிரதாபங்களைப் பற்றியோ, ஒன்றும் சொல்லி இளக வைக்க முடியாதென்பது நிச்சயம். மருந்துக் கம்பெனியைப் பற்றி அந்த மலைகளுக்கு என்ன கவலை?

டாக்டர் சந்திரசேகரன் அவர்களுடைய அழகான வீட்டுக்குள் நுழைகிற போது மருந்துக் கம்பெனியின் பிரதிநிதியாக நுழைந்தவன் வெளியேறுகிற போது ஏதோ ஒரு விதத்தில் நோயாளியாக வெளியேறினேன் என்பது உண்மை. அழகான பொருளைப் பார்ப்பதனால் ஆரோக்கியம் வளருமே தவிர நோய் பெருகுவது எந்த விதத்திலும் சாத்தியமில்லையே; என்றாலும் மருந்துக் கம்பெனிப் பிரதிநிதியே நோயாளியாகத் திரும்பினால் கம்பெனி என்ன ஆவது, என்றாலும் நீங்கள் கேள்வி கேட்டுப் பயனில்லை.

உடம்பைப் பாதிக்காத நுண்ணிய நோய்கள் எத்தனையோ இந்த உலகத்தில் உண்டு. அப்படிப்பட்ட நுண்ணிய நோய்களில் ஆசையும் ஒன்று. சகுந்தலையைப் பற்றிய ஞாபகத்தை நான் ஒரு நோயாகச் சொல்லக்கூடாதென்பதுதான் என் விருப்பமும். ஆனால் வேறுவிதமாகச் சொல்லவும் முடியவில்லை. சிலவற்றைச் சொல்ல முயலும் போதும், சிலவற்றை நினைக்க முயலும் போதும், நாம் சொல்லிலும், நினைப்பிலும் எத்தனை பெரிய ஏழைகள் என்பது நமக்கே புரிகிறது. இப்படி வெளிப்படையாக ஒப்புக் கொள்ளக் கூசுகிற வறுமைகள் ஏராளமாக மனிதர்களிடம் உண்டு. ஏராளமான மனிதர்களில் நானும் ஒருவனாக இருப்பதனால் இந்த வறுமை என்னிடமும் இருக்கலாம். இந்த வறுமை என்னிடம் இல்லாமல் போயிருந்தால்தான் நான் வருத்தப்பட வேண்டும். இருப்பது பெருமையாகத்தான் தோன்றுகிறது. ஏனென்றால் சகுந்தலையின் ஞாபகம் என் நினைப்பில் ஒரு நோய்தான். டாக்டர் சந்திரசேகரன் அவர்களுடைய வீட்டு முன்புறம் பெரிய தோட்டம் நிறையப் பட்டு ரோஜாப் பூக்கள். வாயிற்படி ஏறி வீட்டுக்குள் நுழைகிற வரை உள்ள பாதையின் இருபுறமும் குழந்தைகளின் முகங்களைப் போல் பெரிய பெரிய ரோஜாப்பூக்கள் எத்தனை அழகாய்ச் சிரித்துக் கொண்டிருக்கின்றன?

இங்கே இந்த வழியோரத்து ரோஜாப் பூக்களின் மேலிருந்து பார்வையை மீட்டுக் கொண்டு வீட்டு வாசற்படிகளில் ஏறி எதிரே நிமிர்ந்து பார்த்தால் மற்றோர் பெரிய ரோஜாப்பூச் சிரித்துக் கொண்டு நின்றது. அந்தப் பெரிய ரோஜாப்பூவின் நடுவே இரண்டு சின்னஞ்சிறு பட்டு ரோஜா மொட்டுக்களைப் போல உதடுகள் அசைய உள்ளே வந்து உட்காருமாறு நாற்காலியைச் சுட்டிக் காண்பித்தாள் அந்தப் பெண்.

''டாக்டர் சந்திரசேகரன் அவர்கள் வீட்டில் இருக்கிறார் அல்லவா?''

''இல்லை! வெளியே போயிருக்கிறார். இன்னும் சிறிது நேரத்தில் திரும்பி விடுவார். இப்படி வந்து உட்காருங்கள்'' — என்று அந்த ரோஜாப்பூ வாய் திறந்து பேசியது.

நான் உட்கார்ந்து கொண்டதும் பக்கத்து மேஜையருகே இன்னொரு நாற்காலியில் அவளும் உட்கார்ந்து கொண்டாள். டாக்டரின் மகளாயிருக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டேன் நான். சுபாவத்திலேயே அவள் எப்போதும் துறுதுறுவென்றிருக்க வேண்டும். இல்லா விட்டால் நாற்காலியில் உட்கார்ந்ததும் பக்கத்து மேஜையிலிருந்த நாட்டியமாடும் பொம்மையைக் கைகளால் சுழற்றி விட்டதும், ''நான் அநுமானம் செய்வது தவறாயிருந்தால் தயவுகூர்ந்து என்னை மன்னித்து விடுங்கள். நீங்கள் ஏதாவதொரு மருந்துக் கம்பெனியின் பிரதிநிதியாயிருக்க வேண்டும்'' என்று சாமர்த்தியமாகப் பேச்சை ஆரம்பித்ததும் அவள் சுபாவத்தைப் புரிந்து கொள்ள வைக்கும் நிகழ்ச்சிகளாக அமைந்திராது.

''என் பெயர் சகுந்தலை. டாக்டரின் மூத்த பெண். மருத்துவக் கல்லூரியில் படித்துக் கொண்டிருக்கிறேன். இப்போது கோடை விடுமுறை'' என்று அவள் தன்னைத்தானே அறிமுகம் செய்து கொண்ட விதம், ''நீங்களும் உங்களை இன்னாரென்று அறிமுகம் செய்து கொள்ளலாமே?'' என்று தூண்டுவதாயிருந்தது. நான் சற்றே விளையாட்டாகப் பேசி என்னை அவளுக்கு அறிமுகம் செய்து கொண்டேன்.

''நான் அறிமுகம் செய்து கொள்ள வேண்டிய அவசியமே இல்லை. என்னைப் பார்த்தவுடனே நான் இன்னாராகத்தான் இருக்க வேண்டுமென்று நீங்கள் புரிந்து கொண்டு சொல்லி விட்டீர்கள்'' என்று சிரித்துக் கொண்டே சொன்னேன்.

''அப்படியில்லை! நான் அநுமானம் செய்ததைத் தப்பாக எண்ணுகிறீர்கள். இந்த மருந்துக் கம்பெனிப் பிரதிநிதிகளுக்கு என்றே சில அடையாளங்கள் எல்லாம் உண்டு. ஐந்தரை அடிக்குக் குறையாமல் உயரம் மடிப்புக் கலையாத உடை. பளபளவென மின்னும் புதிய சூட் கேஸ். விநயமான பேச்சு. தங்கள் கம்பெனி மருந்துகளைக் காட்டிலும் எதிரே அமர்ந்து பேசுகிறவர்களைச் சொக்கப்படுத்துகிற வார்த்தைகள், மலர்ச்சி குறையாத முகம், சிரிப்புக்குப் பஞ்சமே இல்லாத உதடுகள்......'' என்று பாதி விளையாட்டாகவும், பாதி மெய்யாகவும், அவள் பேசிக் கொண்டே போன போது அதைக் கேட்டுக் கொண்டிருந்த எனக்குப் பொறுமை பறி போய் விட்டது.

''மன்னிக்க வேண்டும்! மருந்துக் கம்பெனிப் பிரதிநிதியாக விளக்கி மாத்திரைகளின் பிரதாபங்களையும், இன்ஜெக்ஷன் மருந்தின் ஏற்றங்களையும், மிக்சர்களின் மாண்புகளையும் எடுத்துரைப்பதற்காகவே என் தாயார் என்னைத் தவம் செய்து பெறவில்லை. நான் பிறந்திருக்கா விட்டால் இந்த விசால பாரதத்தில் உள்ள மருந்துக் கம்பெனிகள் பொருத்தமான பிரதிநிதி ஒருவன் அவதாரம் செய்யாமல் போய் விட்டானே என்று வருந்திக் கடைகளை இழுத்து மூடியிருக்கப் போவதில்லை. ஏதோ தற்சமயத்துக்கு நான் இந்த உத்தியோகத்தைத்தான் அடைய முடிந்தது. இந்த உத்தியோகம் என்னைத்தான் அடைய முடிந்தது.''

# சிறந்த அமிலநாசினியும், மலமிளக்கியும்




## நம்பிக்கை

ஒவ்வொரு துறையிலும சில தயாரிப்புகள்தான்
சிறந்த குணமும், பல வருடங்களாக நம்
பிக்கையானதாகவும் பெயர் பெற்று உயர்ந்த இடம்
பெற்றிருக்கின்றன. இந்த நம்பிக்கையான தன்
மைதான் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா உலகில்
எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டும் 75
வருடஙகளுக்கு மேலாக சிபார்சு
செய்யப்பட்ட உலகமறிந்த
தாயரிப்பும் ஆகும்.

அதிகாரம் பெற்ற தயாரிப்பாளர்கள்
டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் (மான்யுபாக்சரிங்) பிரைவேட் லிமிடெட்

''ஐயோ! பார்த்தீர்களா? பார்த்தீர்களா? ஏதோ வேடிக்கையாகப் பேசலாமென்று நானு வார்த்தைகள் சொல்ல வந்தால் உடனே என்னைத் தவறாகப் புரிந்து கொள்கிறீர்களே? நான் டாக்டருக்குப் படிக்கிற பெண். என்னுடைய 'மெடிக்கல் ஞானம்' எந்த அளவுக்கு வளர்ந்திருக்கிறதென்று நானே சோதித்துத் தெரிந்து கொள்ளா விட்டால் எப்படி? இன்னதற்கு இன்ன மருந்து என்று தெரிந்து கொள்வதற்கு முன் 'இன்ன மனிதர் இன்ன காரியத்தைச் செய்பவராகத் தான் இருக்க வேண்டும்' என்று ஊகித்துத் தெரிய வேணுமோ; இல்லையோ? ஒரு மருந்துக் கம்பெனியின் பிரதிநிதி எப்படி இருப்பார் என்று கூடக் கண்டுபிடிக்கத் தெரியா விட்டால் என்னுடைய 'மெடிக்கல் ஞானம்' ஸைபர் என்று வைத்துக் கொள்ள வேண்டியதுதான்.''

''அப்படி இருந்தாலும் தவறில்லை. ஏன் என்றால் எல்லா ஞானமும் கடைசி எல்லையாக ஓடிப் போய்த் தொட்டுக் கண்டுபிடிக்கிற முடிவு ஸைபர் தான்....''

''ஏதேது? நீங்கள் பெரிய வேதாந்தியாக இருக்கிறீர்களே?''

''மருந்துக் கம்பெனியின் பிரதிநிதிக்கு—வேதாந்தம் தெரியக் கூடாதென்று எந்த சாஸ்திரத்திலாவது சொல்லியிருக்கிறதோ?''

''என்னை மன்னித்து விடுங்கள். நீங்கள் பெரிய கோபக்காரராயிருக்கிறீர்கள்....'' என்று சகுந்தலை நாற்காலியை விட்டு எழுந்திருக்கவும் டாக்டர் சந்திரசேகரன் அவர்களின் கார் உள்ளே நுழையவும் சரியாயிருந்தது.

''இதோ அப்பாவே வந்து விட்டார். இனி உங்கள் பாடு, அவர் பாடு'' என்று சொல்லி என்னைத் தீர்க்கமாக ஒரு முறை உற்றுப் பார்த்து விட்டு உள்ளே போய் விட்டாள் சகுந்தலை. அவளை முதலில் சந்தித்து விட்டு அதன் பின்பு சாரமற்ற என் கம்பெனி வேலைகளை ஒரு கம்பெனியின் பிரதிநிதி என்ற முறையில் ஒரு டாக்டரிடம் தொடங்கினேன். சகுந்தலையைச் சந்தித்துப் பேசிய பின் வியாபாரப் பேச்சுப் பேசுவது வேண்டாத காரியத்தைச் செய்வதுபோலக் கூசக் கூடியதாயிருந்தது. சிலரிடம் பேசி நிறைந்த பின் வேறுவிதமான சிலரிடம் பேசப் பிடிக்காமற் போவதும் ஓர் இயல்பு. டாக்டர் சந்திரசேகரனிடம் எங்கள் மருந்துக் கம்பெனியின் 'பாம்ப்லெட்டு'களையும், அறிக்கைகளையும், மாதிரி மருந்துகளையும் கொடுத்து விவரித்துப் பேச வேண்டிய காரியம் என்னுடையதாயிருந்தாலும் அந்தக் காரியத்தைச் செய்வதற்குக் கூட எனக்கு அப்போது அலுப்பாயிருந்தது. பத்து நிமிஷங்களுக்குப் பின் சகுந்தலை ஒரு 'டிரேயில்' இரண்டு கப் தேநீருடன் எங்களுக்கு முன் பிரவேசித்த போது மீண்டும் எனக்குச் சுறுசுறுப்பு வந்துவிட்டாற்போல் இருந்தது. சுறுசுறுப்பைத் தருவதற்கும் சுறுசுறுப்பைப் பறித்துக் கொள்வதற்கும் ஓர் அழகு காரணமாக இருக்குமானால் அந்த அழகில் ஏதோ அற்புதம் நிரம்பியிருக்கத்தான் வேண்டும். சகுந்தலை என்ற அந்தப் பெண்ணின் அழகில்



அப்படி அற்புதம் ஏதோ இருந்தது. அந்த அற்புதத்துக்கு நான் வசப்பட்டேன்.

பொதுவாக இந்த டாக்டர்களையும் இன்ஜினீயர்களையும் பற்றி ஒரு குறை உண்டு. தாங்கள் சந்திக்கிற எதிராளிகளிடம் உறவுகளையும், பந்தபாசங்களையும் பற்றி அதிகமாக விசாரித்துத் தொந்தரவு செய்ய மாட்டார்கள் என்று பேர். ஆனால் டாக்டர் சந்திரசேகரன் இதற்கு விதிவிலக்காக இருந்தார். என் காரியத்தை முடித்துக்கொண்டு நான் புறப்படுவதற்கு இருந்த போது, ''உங்களுக்கு அவசரம் ஒன்றும் இல்லையே? சிறிது நேரம் என்னோடு பேசிக் கொண்டிருக்கலாமல்லவா?'' என்று அவர் கேட்ட போது நான் ஆச்சரியப்பட்டுப் போனேன். ஒரு மருந்துக் கம்பெனியின் பிரதிநிதி என்ற முறையில் இப்படிப் பேசுவதற்கு ஆள் தேடும் டாக்டரை நான் இப்போதுதான் முதல் முறையாகச் சந்திக்கிறேன். ஒருவேளை கோடைக்கானலைப் போலத் தனிமையான மலைநாட்டு நகரத்தில் வசிக்கிற டாக்டர் இப்படித்தான் இருக்க வேண்டுமோ, என்னவோ? சுறுசுறுப்பான டாக்டர்களுடைய ஒவ்வொரு விநாடிக்கும் 'ஃபீஸ்' உண்டு என்று நான் கேள்விப்பட்டிருக்கிறேன். நேரிலும் பார்த்திருக்கிறேன். பூர்வோத்தரத்தையும், கவைக்குதவாத உறவுகளையும் தோண்டித் துளைத்து விசாரித்துக் கொண்டிருந்த இந்த டாக்டரை அவர் சகுந்தலையின் தந்தை என்பதற்காக மட்டும் மன்னித்தாக வேண்டியிருந்தது. சுற்றி வளைத்து என் பூர்வோத்தரங்களை விசாரித்து முடித்தவர் எதையோ கண்டுபிடித்து விட்டவரைப் போல ஒரு துள்ளுத் துள்ளினார்.

''அடடா! நீ நம் இராமநாதனின் பிள்ளை அல்லவா? மேல்வேலூர் இராமநாதனின்

பிள்ளை என்று வந்தவுடனே ஒரு வார்த்தை சொல்லியிருக்கக் கூடாதோ?''

''சொல்லியிருக்கலாம் சார்! ஆனால் எனக்குப் படியளக்கிற மருந்துக் கம்பெனி மகராசன் அதைச் சொல்லிக் கொள்வதற்காக என்னை அனுப்பவில்லையே? நான் கீழ்வேளூர் இராமநாதனின் பிள்ளை என்று சொல்லிக் கொள்வதைவிடத் 'தன்வந்திரி மெடிகல் பிராடக்ட்ஸ் பிரைவேட் லிமிடெட்'டின் பிரதிநிதி என்பதைச் சொல்லிக் கொள்வது முக்கியமாயிற்றே. மேலும் நான் தான் கீழ்வேளூர் இராமநாதனின் ஒரே சற்புத்திரன் என்பதைச் சொல்லிக் கொள்வதற்காக, இப்படி ஒரு பளபளப்பான சூட்கேஸைத் தூக்கிக் கொண்டு ஊர் ஊராக அலைய வேண்டியதில்லையே? இருந்த இடத்திலிருந்தே அந்த உறவைச் சொல்லிக்கொள்ளலாமே?'' என்று சற்றே தாராளமாகப் பதில் சொல்லித் திணற அடித்தேன்.

''சபாஷ்! வாயாட்டையிலும் கீழ்வேளூர் இராமநாதனின் பிள்ளைதான் என்பதை நீ நிரூபிக்கிறாய் அப்பனே!'' என்று பேச்சைத் தாம் விரும்பிய எல்லையிலேயே பிடித்து நிறுத்தினார் டாக்டர் சந்திரசேகரன். சர்வீஸ் காலத்தில் ஒவ்வொரு லோகல் பண்டு ஆஸ்பத்திரியாகச் சுற்றி விட்டுக் கடைசியாக ஒரு மலைநாட்டு நகரத்தில் வந்து நிரந்தரமாய்த் தங்கிவிட்ட எல். எம். பி. டாக்டரின் சகலவிதமான மனநிலைகளுக்கும் அவர் ஒரு பிரதிநிதியாயிருந்தார். கோடைக்கானல் மலை ரோடுகளுக்கு எந்தவிதமான ஆபத்தையும் உண்டாக்கிவிட முடியாத ஒரு பழைய மாடல் கார், மலைச் சரிவில் பெரிய தோட்டத்துக்கு நடுவே சிறிய வீடு, சுகவாசம், இத்தனையோடும் டாக்டர் சந்திரசேகரன் தம் நாட்களை ஒரு விதமாகத் தள்ளி விட்டுக் கொண்டிருந்தார் என்று அநுமானிக்க முடிந்தது. அவர் எவ்வளவுக்கு மந்தமாயிருந்தாரோ; அவ்வளவுக்குத் துறுதுறுவென்றிருந்தாள் அவருடைய பெண்.

''உங்கள் கம்பெனிக்காரர்கள் போடுகிற காலண்டர் இப்போதெல்லாம் ஏன் அத்தனை கவர்ச்சிகரமாக இருப்பதில்லை? வரவர எல்லாமே கடனுக்குத்தான் நடைபெறுகிறது?'' என்று அவர் சொல்லிய போது எங்கள் கம்பெனி மருந்துகளைவிடக் காலண்டர்களை அவர் அதிகமாக மதிக்கிறார் என்ற இரகசியம் எனக்குப் புரிந்தது. ஒரு மருந்துக் கம்பெனியின் பிரதிநிதிக்கு இதைவிடப் பெரிதாக வேறென்ன அவமானம் வேண்டும்? ஆனாலும் சகுந்தலையின் ரோஜாப்பூ முகத்தைப் பார்த்து இந்த அவமானத்தை ஒருவிதமாக ஆற்றிக் கொண்டேன் நான்.

''நீ கீழ்வேளூர் இராமநாதனின் பிள்ளை என்பதை நன்றாகத் தெரிந்து கொண்டபின் உன்னை இப்படியே இந்த வராந்தாவில் வைத்தே விடைகொடுத்து அனுப்பிவிட மனமில்லை, அப்பனே! இரண்டு நாட்கள் தங்கி விட்டுப் போ.... இது உன் வீடு மாதிரி.... அந்த நாளில் கீழ்வேளூர் லோகல் பண்டு ஆஸ்பத்திரியில் நான் இருந்த போது உன் அப்பாவும் நானும் ஒரு நாலைந்து வருடத்துக்கு இணைபிரியாத நண்பர்களாக இருந்தோம். அப்புறம் என்னை வேறு ஊருக்கு மாற்றி விட்டார்கள். அப்போது நீ வாயில் விரலை வைத்தால் கடிக்கத் தெரியாத சிறு பிள்ளையாயிருந்திருப்பாய். இருபது வருடங்களுக்கு முன்னால் கீழ்வேளூர் லைசன் தகராறு முற்றிக் கலகம் ஒன்று நடந்ததே: அப்போது ஒரே இரவில் ஆறு போஸ்ட்மார்ட்டம்.... ஆஸ்பத்திரிக் கதவை அடைத்துக் கொண்டு வீட்டுக்குத் தனியாகத் திரும்ப முடியாது. அந்தச் சமயத்திலே எல்லாம் உங்கள் அப்பா எவ்வளவு ஒத்தாசை செய்தார் தெரியுமா? அவற்றை யெல்லாம் வார்த்தைகளால் சொல்லி முடியாது.''

அவர் பேச்சு என் தந்தையையும், கீழ்வேளூரையும், லைசன் தகராறு நடந்த போது செய்த போஸ்ட் மார்ட்டங்களையுமே சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தது. எனக்காவது போஸ்ட் மார்ட்டம் செய்ததைச் சொல்லிப் பெருமைப்படுகிற டாக்டர் இருக்க முடியுமோ? நான் சந்திரசேகரனுடைய பேச்சில் சலிப்படைந்து போய் அங்கே நின்றுகொண்டிருந்த அவர் மகள் சகுந்தலையின் முகத்தைப் பார்த்தேன். அவளுடைய முகத்திலும் தந்தையின் பேச்சிலே சலிப்படைந்த தன்மைதான் தெரிந்தது. ஆனால் அவளுடைய முகத்தைப் பார்க்க முடிந்த காரணத்தால் என்னுடைய சலிப்புக் குறைந்து போனதென்னவோ உண்மை.

''கீழ்வேளூர்ப் போஸ்ட் மார்ட்டத்தைப் பற்றி இப்போதென்ன வந்தது? வேறு ஏதாவது சுவாரசியமான விஷயத்தைப் பேசுங்களேன், அப்பா....'' என்று சகுந்தலையே அவருடைய பேச்சில் அசிரத்தை அடைந்து போய்ச் சொன்னாள்.

''இனிமேல் நான் பேசுவதற்கு மீதமிருக்கிற ஒரே ஒரு சுவாரசியமான விஷயம் உன் கலியாணம்தான் அம்மா....'' என்று சிரித்தார் அவர்.

ஒரு பெண்ணை டாக்டருக்குப் படிக்க வைத்து விட்டுக் கலியாணத்தைப் பற்றியும் பேசுகிற தகப்பனாரை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. டாக்டருக்குப் படிக்கப் போடும் போதே நல்ல வட்டிக்கு ஃபிக்ஸட் டெபாஸிட் மாதிரி ஆகும் என்று நினைப்பதா? கலியாணம் பண்ணி வைப்பதைப் பற்றி நினைப்பதா? என்று எண்ணினேன் நான். டாக்டர் சந்திரசேகரன் அசட்டு மனிதராக இருக்கிறாரே என்றெண்ணி உள்ளூற வேதனைப்படவும் நேர்ந்தது. டாக்டர் சந்திரசேகரன் அசடு என்பதற்காகப் பட வேண்டிய வருத்தத்தை யெல்லாம் அவருடைய மகள் அழகு என்பதனால் மகிழ்ச்சியாக மாற்றிக் கொண்டு மேலும் இரண்டு தினம் அந்த வீட்டில் தங்கினேன் நான்.

அப்படித் தங்கியிருந்த போதுதான் சகுந்தலையும், நானும் ஒருவரை யொருவர் புரிந்து கொள்ள நேர்ந்தது. அப்படிப் புரிந்து கொள்ள நேர்ந்ததனால்தான் அவளும் நானும் இப்படி ஒரு கதையானோம்.

(அடுத்த இதழில் முடியும்)

Printed & Published by R Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam.

# உங்கள் கூந்தலின் எழிலை எடுத்துக் காட்டுகிறது




நீங்கள் எந்தவிதமான கொண்டை அலங்காரம் செய்தாலும்

**ஸ்வஸ்திக் பர்ப்யூம்டு காஸ்டர் ஆயில்**

உங்கள் கூந்தலுக்கு மெருகூட்டி அதன் அழகை இன்னும் கவர்ச்சிகரமாக எடுத்துக் காட்டும்.

இப்பொழுது அழகிய புது மாதிரி பாட்டிலில் கிடைக்கிறது!

**ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்., பம்பாய்.**



Shilpi SOM 9A Tam

